ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே வரவரமுநயே நம

# அர்த்தபஞ்சகம்

இதற்கு
**ஸ்ரீபிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்த**
வியாக்யானம்.

திரிசிரபுரம் நம்பிள்ளை சபை ஸ்தாபகரும்
போஷகருமான திருப்புறம்பயம்
**ஸ்ரீமான் இராமஸ்வாமி இராமாநுஜ தாஸரால்**
சேர்க்கப்பட்ட அரும்பத விளக்கம்
இவை
**திரிசிபுரம் நம்பிள்ளை சபையாரால்**
கும்பகோணம்
ஸ்ரீ கோமளாம்பா அச்சுக்கூடத்தில்
1931இல் பதிப்பிக்கப்பெற்றது.

மறுபதிப்பு
**ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ**
214,கீழ உத்தரவீதி (விக்ரமசோழன் திருவீதி),
திருவரங்கம், திருச்சி-6. ☎ : (0431) 434398
வெளியீடு நாள்: 6.09.2001

ஸ்ரீ:

# முன்னுரை.

ஸர்வேச்வரன் லோகோஜ்ஜீவனார்த்தமாகச் செய்த க்ருஷி பரம்பரைகளைக் காட்டிலும், பூர்வாசாரியர்கள் ஆசரித்துக் காட்டிய சிறந்த வழிகளே கண்ணழிவற்றது என்பது கண்கூடாகும். இவர்களில் ஒருவரான ஸ்வாமி பிள்ளைலோகாசாரியர் உபதேசமாத்ரத்தில் நில்லாது, பெண்களும் பேதைகளும் உய்யுமாறு அரிய பெரிய இரகசியார்த்தங்கள் உள்ளிட்ட அனேக க்ரந்தங்களைத் தெள்ளியநடையில் க்ரந்தஸ்தமாக வெளியிட்டருளினார். இதுவே இவருடைய பரமக்ருபைக்குப் போதிய சான்றாகும். இவர் அருளிச்செய்த சில நூல்களுக்கு விசதவாக் சிகாமணியான ஸ்ரீவரவரமுனிகள் வியாக்கியானம் செய்துவைத்ததுபோல், அந்தப்ரபஞ்சகத்திற்கும் பிள்ளை லோகஞ்ஜீயர் அவர்கள், ஓர் அரிய வியாக்யானம் செய்தாரென்பது யாவரும் அறிந்ததே.

நிற்க,சென்னை பரசமயக்கோளரி,ப்ரபன்னவித்வான் ஸ்ரீமான் ச.பு.குருஸ்வாமி நாயுடுஅவர்கள்,பலருக்கும் பயன்படுமாறு இதை அச்சிட்டு வெளியிடக்கருதி, பலவாண்டுகளுக்கு முன் சில தாளபத்திரங்களைக்கொண்டு பரிசோதித்து எழுதி முடித்திருந்த ஸ்ரீகோசத்தை, பாகவதவிஷயத்தில் ஊற்றமுடைய பெருமாள்கோயில் ஹெல்த் இன்ஸ்பெக்டர், ஸ்ரீமான், V.ஸ்ரீநிவாஸலுநாயுடு அவர்கள், இதுகாறும் பாதுகாத்துவைத்திருந்து, சென்ற வருடம் ஸ்ரீரங்கம் ஸ்ரீமான், R. A. பங்காருஸ்வாமி நாயுடு அவர்கள் வசம் ஒப்படைத்து அச்சிடும்படி கேட்டுக்கொண்டனர். மேற்படி R. A. பங்காருஸ்வாமி நாயுடு அவர்களும், திருச்சி நம்பிள்ளை சபையாரும் இதன் பெருமையை யுற்றுணர்ந்து இக்கைங்கர்யத்தை நடாத்தும்படி அடியேனுக்கு நியமித்தார்கள்.

கீழ்,குறிப்பிட்டுள்ள பலபெரியோர்களால் முயற்சிக்கப்பட்டதும், அறிவிற்சிறந்த பெரியோர்களால் செய்தற்குரியதுமான இக்கைங்கர்யத்தை, பலவகையினும் சிறியேனாகிய அடியேன் இயற்ற முன்வந்தது, பாகவதர்களுடைய நன்முயற்சி பழுதுபோகாவண்ணம் அந்தியமத்தை சிரசாக வகிக்கவேண்டுமென்னும் கருத்தினாலேயேயன்றி, பிறிதொன்றினாலன்று. இவ்வெண்ணத்தினாலேயே இது இனிது முடிவுபெற்றதென்பது நன்கு விளங்குகிறது.

இக்கிரந்தம் அச்சிட்டு பூர்த்தியடைவதில் முன்னின்று பல வழிகளிலும் உதவிபுரிந்த ஸ்ரீமான் R. A. பங்காருஸ்வாமி நாயுடு அவர்களின் பெருந்தன்மை பெரிதும் பாராட்டத்தக்கது.

இது படிப்படியாக பலபேரிடத்திலிருந்து வெளிவந்தமையின், இதனிடை விரவியிருக்கும் குற்றங்கள் பல வகையாலும் வந்திருக்கக்கூடும்.

அருள்நிறைந்த அறிஞர்கள் அக்குற்றங்களை அறிவிப்பரேல், அஃதொப்பன பரமோபகாரம், வேறுளதென்ப தொன்றில்லையே.

T. D. இராமஸ்வாமி இராமாநுஜதாஸன்,
(திருப்புறம்பயம்)

---



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அர்த்தபஞ்சகாவதாரிகா.



ஸ்ரீய:பதியாய், அகிலஹேயப்ரத்யநீகத்வ கல்யாணைகதாநத்வாதிகளால் ஸ்வேதரஸமஸ்தவஸ்து விலக்ஷணனாய், அப்ராக்ருதமாய் சுத்தஸத்வமயமாய் ஸ்வாஸாதாரணமாய் புஷ்பஹாஸஸுகுமாரமாய் புண்யகந்தவாஸிதாநந்ததிகந்தராளமாய் ஸர்வாபாஶ்ரயமாயிருந்துள்ள திவ்யமங்களவிக்ரஹோபேதனாய் நூபுராதி க்ரீடாந்தமான திவ்யபூஷணபூஷிதனாய் சங்கசக்ராதிதிவ்யாயுததரனாய் நிரதிசயாநந்தமயமாய் தேவகணமுநிஜனவாங்மநஸாபரிச்சேத்ய பரமவ்யோமமாகிற ஸ்ரீவைகுண்டத்திலே ஆநந்தமயமான திவ்யாஸ்தாநமண்டபத்திலே பெரிய பிராட்டியாரும்நாய்ச்சிமாருமுடன் கூடக் கோப்புடைய சீரிய ஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளி செங்கோல் செல்ல வீற்றிருந்தருளி, நித்யநிர்மலஜ்ஞாநாதிகுணகராய் ஸ்வச்சந்தாநுவ்ருத்திஸ்வரூப ஸ்திதிப்ரவ்ருத்திபேதராய் அஸ்தாநேபயசங்கிகளாகிற "அயர்வறுமமரர்களாலே" அநவரதபரிசர்யமாண சரணநளினனாய்க்கொண்டு ஆங்குச்செல்லா நிற்கவைத்து ஸ்வஸங்கல்பாயத்தஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திநிவ்ருத்திகமான ஸகல சேதநாசேதனங்களைத் தனக்கு ஶேஷமாகத்தான் ஶுத்தாஶுத்த விபூதித்வயைகஶேஷியாய் விபுத்வாத் தேசத: பரிச்சேத்யராஹிதனாய், நித்யத்வாத்காலத: பரிச்சேத்யராஹிதனாய், ஸ்வேதரஸமஸ்தங்களும் தனக்கு ப்ரகாரங்களாகத்தான் ப்ரகாரியாய்த் தனக்கு ப்ரகாராந்தரமில்லாமையாலே வஸ்துத:பரிச்சேத்யராஹிதனுமாய் தத்கததோஷாஸம்ஸ்ப்ருஷ்டனாய், ஜ்ஞாநாநந்தரூபனாய், ஸத்யத்வஜ்ஞாநத்வாதி ஸ்வரூபநிரூபகதர்மயுக்தனாய் ஜ்ஞானபலைச்வர்யாதி வாத்ஸல்ய ஸ்வாமித்வஸௌஶீல்யாத்யநந்தகல்யாணகுணகணஸமூஹ மஹோததியாய் நாராயணாதிதிவ்யநாமஸஹஸ்ரங்களை ஸ்வவாசகங்களாகவுடைய ஸமஸ்த வாச்யனாய் ஶ்ருதிஶிரஸி விதீப்தமாநனாய், ஆகவிவ்வனைவற்றாலும் சேதநவிஜாதீயனாயிருந்தவைத்தும் ரக்ஷகாந்தரமொன்றின்றியில்தானே ஸர்வப்ரகாரரக்ஷகனாயிருப்பதைவிட்டு, ஆஶ்ரிதவாத்ஸல்யத்தாலே "மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து" என்கிற திருமுகப்பாசுரத்தின்படியே ஜன்மபரம்பரைகளிலே தோள்மாறிச் சுற்றிச்சுழன்று ஸம்ஸாரவனற்றினி லாழங்காலிட்டு, நித்யநிமக்நராயநர்த்தப்படுந்தேவமநுஷ்யாதிகள் ஸஜாதீயனாக வந்து தன் பரமக்ருபாதிசயத்தாலே அவர்கள் உத்தாரபோஷணகிங்கராய் ஸம்ஸரிக்கும் அவ்வோ விடங்களிலே, திருவவதாரங்களைப் பண்ணும் ஸ்வபாவனாய், அவ்வநந்தவவதாரங்களிலுமுதவப்பெறாத கர்பநிர்பாக்யருக்

கிழந்தே போகாதபடி ஸமஸ்தாபராதஸஹனாய்ப் பத்ரபுஷ்பாதிகளாலே ஸ்வாராதனாய்க்கோலி ஆச்ரிதர்க்கத்யந்த பரதந்த்ரனுபவர்களிச்சாநுகுணமான போஜனசயனாதி ஸகலப்ரவ்ருத்திகளையுடையனாய் அகில கல்யாணகுண நிதியாயிருந்து வைத்துமுருக்காட்டதே ஆச்ரிதஸௌலபத்வார்த்தமாக அவர்கள் விரும்பின த்ரவ்யங்களிலொன்றைத் தனக்கிருக்கையாய்க் கோயில்களிலும் க்ருஹங்களிலுமுவந்து நின்றருளுமெளியனாகிற ஸ்ரீமந் நாராயணன் ஸர்வேச்வரேச்வரனும் ஸர்வப்ரகாரஸ்வாமியும் ஸ்வதஸ்ஸித்தஸர்வசேஷியும் ஸர்வஸ்மாத்பரனும் ஸமாநாதிகதரித்ரனாய்க் கொண்டு நிரங்குசஸ்வதந்த்ரனும் பரமோதாரனும் பரம காருணிகனுமாகுமொருவனாகையாலே "மன்பல்லுயிர்களுமாகிப் பலபல மாயமயக்குக்களாலின்பமிகுஞ் செல்வவிளையாட்டில்" அநேகவிதங்களான மோஹக்ருத்யங்களாலே லீலாவிபூதி சேதநரோடே விளையாடா நின்றுகொண்டே அந்த சேதநர்கள் ஸந்ததநுக்கவர்ஷிணியான ஸம்ஸார சக்ரஸ்தராய் ஸ்வார்ஜிதபுண்யபாபங்களாலே ஈடுபட்டு ஜந்மஜராமரணநிரயபதநாதி துக்கங்களையனுபவித்துக்கொண்டு ஒரு சிறு குருவி பிணைத்த பிணையையவிழ்க்கப்போமதில்லாத தாங்கள் ஸர்வசக்திகர்மாநுகுணமாகப்பிணைத்துவைத்திருக்குமதைத் தவிர்த்துக்கொண்டு மீளப்பெறமாட்டாதே படுமிக்கவிடும்பைப்பாடுகளையவலோகநம் பண்ணி அத்தால் தன் திருவுள்ளத்தில் தோன்றின அபார காருண்யமதாலே ஜாயமான காலத்தில் விசேஷ கடாக்ஷமொன்றுபண்ணி அவ்வழியாலே ததநுபவவிரோதிஜாதங்களாகிற ரஜஸ்தமோநிரஸ்தராய் ப்ரவ்ருத்தஸத்வகுணகராயாக்கியருள் செய்யுமிடத்திலும் மோக்ஷருசியுண்டானவாறே, 'ஒண்டாமரையாள்கேள்வனொருவனையே நோக்குமுணர்வு' என்கிறபடியே, பகவத்வ்யதிரிக்த விஷயங்களை பற்றிநிற்குமந்த ஞானமெல்லாம் "தத்ஜ்ஞானமஜ்ஞானமதோந்யதுக்தம்" என்று அஜ்ஞானகல்பமேயாய் அதுதானும் 'வித்யாந்யாசில்பநைபுணம்' என்று செருப்புக்குத்தக்கற்கும் வித்யா ஸமமாகையாலே ஒளியுடைத் தாமரையாளுண்டு ஸ்ரீதேவி அவளுக்கு நாதனாகிற தன்னொருவனையே பற்றிநிற்குமதே ஜ்ஞானமாவதிட்டும், ஜ்ஞாநாந்மோக்ஷமாவதையிட்டும் அந்த ஜ்ஞானந்தானும்-வாகாதிகரணங்களன்று ஆத்மா, இந்த்ரியங்களன்று ஆத்மா, மநஸ்ஸன்று ஆத்மா, ப்ராணபுத்யாதிகளன்று ஆத்மா, அநித்யமன்று ஆத்மா, விபுவன்று ஆத்மா, விகாரியன்று ஆத்மா, ஸ்வதந்த்ரமன்று ஆத்மா, அக்நீந்த்ராதி சேஷமன்று ஆத்மா, ப்ரஹ்மருத்ராதிதேவதாந்தர சேஷமன்று ஆத்மா, ஏகாயநவெம்பெருமானுக்குசேஷமன்று ஆத்மா, மற்றைத்ததீயசேஷத்வத்தைப் பராகாஷ்டையாகவுடைய மிதுநசேஷத்வமொன்றே! என்னுமதுக்கான தத்வயாதாத்ம்யஜ்ஞானவுமுண்டாகவேண்டியிருப்பதையிட்டும் அது ஸம்பாத்யமாமளவில் ஸாங்க்யாதிவேதபாஹ்ய தர்சநங்களில் விமுகராய் அபௌருஷேயமாய்க்கொண்டு நித்யநிர்தோஷ ப்ரமாணமாகிற வேதத்திலாராயப்புகுந்து, அதிலும் பகவத்ப்ரதிபத்தகங்க

ளாகிற ஸ்வர்காதி க்ஷுத்ரபுருஷார்த்தங்களையும், அவற்றுக்காகிற ஸாதனங்களையும் ப்ரதிபாதிக்கிற பூர்வகண்டத்திலே ப்ரயோஜனமில்லாமையாலே ஜ்ஞானபாகத்தில் புகுந்து அதிலும் ஐஶ்வர்யத்திலுங்காட்டில் நித்யத்வ ப்ரக்ருதிவிநிர்முக்தத்வங்களாலே சிறிதுயர்ந்ததான கைவல்யத்தையும் அதன் ஸாதனங்களையும் விட்டு ஸ்வரூபாநுரூபமான பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷத்திலே உண்டான ருசிக்குப் பாங்காக பகவத்ஸ்வரூப ரூப குண விபூதிகளுக்கே முக்யப்ரதீபமாயிருந்துள்ள வேதாந்தத்தில் பரிஶீலனம் பண்ணுமளவில் பகுக்லேஶஸாத்யதயா துஸ்ஸாத்யமாய் வருந்தியும் ஸாதிக்கப்புகிலும் சேதநர்மந்தமதிகளும் மந்தாயுஸ்ஸுக்களுமாயிருப்பதன்மேல் விக்நங்களுமநந்தங்களாய் நேருகையாலேயதன்வழியாகவெல்லார்க்குமொக்கலபிக்குமது துர்லபமாகையாலும் சாஸ்த்ராப்யாஸத்துக்கு அதிகாரிகளல்லாதார்க்கு மோக்ஷருசியுண்டானாலும் ப்ரயோஜனமின்றியிலேயிழந்தேபோகவமைவதாலும் இனி இதற்குக் கோலினது கீழிலுக்தமான தோஷங்களிலொன்றுமில்லாத உபதேசகம்யமொன்றே என்று திருவுள்ளத்தில் நினைப்பிட்டருளி பண்டு பதரிகாஶ்ரமத்தில் நரநாராயணரூபேணயிருந்து, அதிகுஹ்யமாயிருந்து ப்ரகாஶியாமல்போகுதலுக்கிரங்கி தந்முகேந ப்ரகாஶிப்பித்தருளினதாய் ஸம்ஸ்க்ருத த்ராவிடரூபஶ்ருதி ஸ்ரீபாஞ்சராத்ர ஸ்ம்ருதீதிஹாஸ ஸர்வபுராணாதி ஸாரதமமோக்ஷசாஸ்த்ர ஸித்தகம்யஸகலார்த்தப்ரதிபாத்யஸங்க்ரஹமாய், பரமமந்த்ரமாய் மந்த்ராணாம் மூலமாயிருந்துள்ள அஷ்டாக்ஷரீ பெரிய திருமந்த்ரத்தின் ஸுஶப்த முக்ய தாத்பர்யப்ராப்யத்தையும் ப்ராப்தாவையும் ப்ராப்த்யுபாயத்தையும் ப்ராப்திபலத்தையும்ப்ராப்திப்ரதிபந்தகத்தையும் தத்தத்ஸம்பந்தங்களுள்பட சாஸ்த்ரத்ருஷ்டியாலே ஸம்யக்காக எத்தனையுமறிவிலாதபெண்களும் பேதைகளுங்கூடக் கண்டுணர்ந்து ஸாம்ஸாரிகஸமஸ்ததாபங்களும் மாறப்பெற்று உய்ந்துபோம்வண்ணம் ஸ்ரீப்ரணதார்த்திஹராம்சபூதராய் ஸமஸ்த சாஸ்த்ர வித்தமராய் பரமக்ருபாசாலியாய் ஸம்ஸாரி ஸகல சேதநோஜ்ஜீவககாமரான பிள்ளைலோகாசார்யரையிடுவித்து அவர்முகேந அர்த்தபஞ்சகரஹஸ்யசாஸ்த்ரத்தை வெளிப்படுத்தியருளினான்.

பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே சரணம்.

அர்த்தபஞ்சகாவதாரிகைமுற்றும்.

    



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அர்த்தபஞ்சக

# மூலம், வ்யாக்யானம். அரும்பதம்.



தனியன்.

*லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே ।*
*ஸம்ஸாரபோகிஸந்தஷ்டஜீவஜீவாதவே நம: ॥*
*லோககுரும் குருபிஸ்ஸஹ பூர்வை: கூரகுலோத்தம*
*தாஸமுதாரம் । ஸ்ரீநகபத்யபிராமவரேசௌ தீப்ர*
*சயாநகுரும் ச பஜேஹம் ॥*

---

**மூலம் க. ஸம்ஸாரியான சேதனனுக்குத் தத்வஜ்ஞாநம் பிறந்து உஜ்ஜீவிக்கும்போது அர்த்தபஞ்சகஜ்ஞாநமுண்டாகவேணும்.**

*வ்யாக்யாநம்:—* ஸம்ஸாரியான சேதனனுக்கு, "அநாதி மாயயா ஸுப்த:" *என்கிறபடியே, அநாதியான ஸம்ஸாரஸமுத்ரத்தில் உழன்றிருக்கும்சேதநனுக்கு என்னுதல்; ஸம்ஸாரந்தன்னையே நிரூபகமாம்படியிருக்கிற சேதநனுக்கு என்னுதல்;* தத்வஜ்ஞாநம்

---

*அரும்பதம்:—* ஜ்ஞாநாந்மோக்ஷ:, அஜ்ஞாநாத் ஸம்ஸார: *என்றிருக்கையாலே, பகவத்ப்ராப்திக்கு ஜ்ஞாநம் காரணமாம்.* **உஜ்ஜீவனம்—** *ஸம்ஸார ஸம்பந்தமற்று உஜ்ஜீவிக்கை; உத்க்ருஷ்ட ஜீவனமாம்.* **தத்வம்:—** *தஸ்யபாவ: தத்வம் அதாவது—பரமார்த்த வஸ்துவாயிருப்பவர். தயிர் பால்களில் வெண்ணெய்போலச்சேதநாசேதனங்களாகிய ப்ரபஞ்சத்தில் வியாபித்திருக்கும் ஸாராம்சமாயிருப்பவர். இவ்விடத்தில் உஜ்ஜீவனத்துக்கு பகவத்தத்வஜ்ஞாநம் என்று சொல்லாமையாலே தத்வத்ரயஜ்ஞாநம்என்று கொள்ளவேணும். "தமேவவித்வாந் அம்ருதஇஹபவதி" என்று வியாக்யாதாக்களால் ஒரே தத்வத்தால் உஜ்ஜீவநமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இத்தால் ஈச்வரனை அறியும்போது சேதநாசேதந விசிஷ்டத்தோடு அறிவ*

பிறந்து—இவர்தாமே, தத்வஜ்ஞாநமாவது— "ஸர்வஸ்மாத்பரனான நாராயணனுக்கு ஸர்வப்ரகார பரதந்த்ரரான ஸர்வாத்மாக்களினுடையவும் ஸ்வரூபத்துக்கு அநுரூபபுருஷார்த்தமான கைங்கர்யத்தை அநாதியாக ப்ரதிபந்தித்துக்கொண்டு போருகிற கர்மஸம்பந்தத்தை நிவர்த்திப்பிக்குமுபாயம்-தச்சரணாரவிந்தசரணாகதி என்கிற ஜ்ஞாந விசேஷம்" என்று தத்வசேகரத்தில் ஸாதித்தருளின ப்ரகாரம், ஸ்வரூபயாதாத்ம்ய விஷயத்தில் ஜ்ஞாநம் பிறந்து, உஜ்ஜீவிக்கும்போது—உய்யும்போதைக்கு என்றபடி. அர்த்தபஞ்சகஜ்ஞாநம் உண்டாகவேணும்— அர்த்த பஞ்சகங்களானவற்றினுடைய ஜ்ஞாநம் உண்டாகவேண்டியது.

அவதாரிகை:— அர்த்தபஞ்சகஜ்ஞாநமாகிறதுதான் ஏதென்ன ? அருளிச்செய்கிறார் (அர்த்தபஞ்சகஜ்ஞாநமாவது) என்று தொடங்கி.

உ. அர்த்தபஞ்சகஜ்ஞாநமாவது:- ஸ்வஸ்வரூப பரஸ்வரூப புருஷார்த்தஸ்வரூப உபாயஸ்வரூப விரோதிஸ்வரூபங்களையுள்ளபடியறிகை.

---

தாமித்தனை. இவ்விடத்தில் அர்த்தபஞ்சகஜ்ஞாநமாவது— திருமந்த்ரத்தாலறியப்படும் ஜ்ஞாநமேயாம். ஸம்ஸாரியான சேதநனுக்கு என்றதால்— ஸம்ஸாரத்தில் வர்த்திக்கும் புபுக்ஷுக்களை வியாவர்த்திப்பித்து மோக்ஷத்திலிச்சையுடையவனான முமுக்ஷுவை இங்கு சொல்லுகிறது. இவ்விடத்தில் முமுக்ஷுவானவன் பகவத்ப்ராப்திகாமதயா ஸம்ஸாரவிமோசனத்தில் இச்சை பிறந்தவன். கேவலனைச் சொல்லுகிறதல்ல. இன்னமும் இத்தால் நித்யமுக்தர்களை வியாவர்த்திக்கிறது; இவர்களுக்கு உஜ்ஜீவநாபேக்ஷையில்லாமையாலே இவ்விடத்தில் 'ஸம்ஸாரி' என்று சொல்லாமல் ' ஸம்ஸாரியான சேதநன்" என்றருளிச்செய்ததால், விசேஷ்யத்துக்கு வந்தது விசேஷணத்துக்கும் வரும் என்கிற நியாயத்தின்படி; சரீரத்திற்கும் மோக்ஷம் வரும்போது மிச்ரஸத்வமான மூலப்ராக்ருதிக்கும் மோக்ஷமுண்டென்பதை தவிர்ப்பிக்கிறது. மிச்ரஸத்வத்தோடு கூடியிருக்கும் ஆத்மாவுக்கே மோக்ஷமென்பது சாஸ்திரஸித்தம் இத்தால் சாஸ்திரஜ்ஞாநம் அசேதநத்திற்கும் ஈச்வரனுக்கும் வேணுமென்பதில்லை. சேதனனுக்கே ப்ரயோஜனம்.

ஸம்ஸாரமாவது— புண்யபாபநிபந்தநமான அசித்ஸம்பந்தம், அதாவது— அவித்யாகர்மவாஸநா ருசிப்ரக்ருதிஸம்பந்தங்களும், ஷட்பாவ விகாரங்களும், புத்ரமித்ரகளத்ராதிகளும், தத்கார்யங்களும்.

அநாதிமாயயா-காரணசூன்யமான ப்ரகிருதியினால், ஸுப்த:—உறங்குகிற.ஜீவ:— ஜீவாத்மாவானவன்.

(வ்யா.) அதாவது:—ஸ்வஸ்வரூபம் என்கிறது சேதநனான தன்னுடைய ஸ்வரூபத்தை; பரஸ்வரூபம் என்கிறது பரனான ஈச்வரனுடைய ஸ்வரூபத்தை; புருஷார்த்தஸ்வரூபம் என்கிறது ப்ராப்யத்தினுடைய ஸ்வரூபத்தை; உபாயஸ்வரூபம் என்கிறது ப்ராபகத்தினுடைய ஸ்வரூபத்தை; விரோதிஸ்வரூபம் என்கிறது விரோதியினுடைய ஸ்வரூபத்தை; உள்ளபடி அறிகையாவது, இந்த ஐந்தையும் உள்ளப்ரகாரம் அறிவது.

(அவ.) உத்தேசக்ரமத்திலே அர்த்தபஞ்சகத்தினுடைய அர்த்தவிசேஷங்களை உபபாதிப்பதாகத் திருவுள்ளம்பற்றி ப்ரதமம் அவற்றிலுள்ள அந்தர்விபாகஸங்க்யைகளை விபஜித்தருளுகிறார்.— (இவற்றில் ஒரோரு விஷயந்தான்) என்று தொடங்கி,

---

அரு—அர்த்தபஞ்சகமாவது:— ஒருவன் ஒரு காரியத்தைச் செய்ய வேண்டியதாயிருந்தால் அவன் ஐந்து காரியங்களையறியவேணும். அவை யாவன— அடையவேண்டிய வஸ்து, அடைகிறவன், அடைவதற்குச் செய்யவேண்டியவேலை, அடையும்போதுண்டாகும் விரோதிநிவர்த்திகள், அடைந்தால் வரும் பலன். உதாரணம்— அடையவேண்டியது நெல், அடைகிறவன் ஒருவன். அடைவதற்குச் செய்யவேண்டிய வேலை நெல் பயிரிடுதல், அடைவதற்கு விரோதமான மாடுகள் மேய்தல், ஜலமில்லாமை முதலியவைகள், நெல்லையடைந்தால் அதற்குப்பிரயோஜனம் போஜனம் செய்தல், விற்று பணம் சேர்ப்பது முதலியவைகள்.

ஆத்மஸ்வரூபத்தின் லக்ஷணத்தை அஹமர்த்தத்துக்குஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்கநிரூபகம் என்கிற ஸூத்திரத்தின் வியாக்யானத்தில் கண்டுகொள்வது.

ஆத்மாவுக்கு ஸ்வரூபநிரூபகதர்மமாவது:—சேஷத்வேஸதி ஜ்ஞாத்ருத்வம். அதாவது பாரதந்த்ரியத்தோடு கூடின சேஷத்வமே ஆத்மாவுக்கு நிலைநின்ற லக்ஷணம். இவ்வர்த்தத்தை அதாவது, ஜ்ஞாநாநந்தங்களோடும் கூடின ஆத்மாவுக்கு மிகவும் அந்தரங்கதர்மம் சேஷத்வம் என்பதை ஸ்தாபித்துக்கொடுத்தது, ஸகல வேதஸங்க்ரஹமான திருமந்திரத்தின் முதல்பதமான ப்ரணவம். இந்த ப்ரணவந்தான் அஸம்ஹிதாகாரமாகும் போது அதன் அக்ஷரங்களின் வரிசைக்கிரமத்தாலேயே சேஷத்வத்தை முதலில் சொல்லி கடைசியில் ஜ்ஞானத்தை வெளியிட்டதாகிறது. இத்தால் ஜ்ஞாநாநந்தங்களும் நிறம் பெறும்படியாக சேஷத்வத்தின் ஸ்வரூபமிருப்பது. இத்தைத் திருவுள்ளம்பற்றியே ஆழ்வாரும் "என்னுள்ளான்" என்னாதே "அடியேனுள்ளான்" என்றருளிச்செய்தார்.

௩. இவற்றிலோரோருவிஷயந்தானஞ்சுபடி பட்டிருக்கும்.

(வ்யா.) அதாவது:- இவற்றில் இந்த அர்த்தபஞ்சகங்களில் ஓரோருவிஷயந்தான் ஒவ்வொரு அர்த்தவிஷயந்தான் அஞ்சுபடி பட்டிருக்கும் ஐந்து ப்ரகாரமாயிருக்கும்.

(அவ.) இவற்றில் முதலில் ஸ்வரூபமாவது எது? என்ன அருளிச்செய்கிறார்- (ஸ்வஸ்வரூபம் என்கிறது) என்று தொடங்கி.

௪ ஸ்வஸ்வரூபமென்கிறது ஆத்மஸ்வரூபத்தை.

(வ்யா.) அதாவது:- ஸ்வரூபம் என்கிறது அஸாதாரணஆகாரம்; ஆத்மஸ்வரூபம் என்றால் ஆத்மாவினுடைய அஸாதாரண ஆகாரம். இப்படிகளால் ஆத்மாவினுடைய அஸாதாரண ஆகாரத்தை ஸ்வஸ்வரூபமென்கிறது என்றபடி.

(அவ.) அத்தை விவரிக்கிறார்- (ஆத்மஸ்வரூபந்தான்) என்று தொடங்கி.

௫ ஆத்மஸ்வரூபந்தான்:- நித்யர், முக்தர், பத்தர், கேவலர், முமுக்ஷுக்களென்றைந்து.

(வ்யா.)அதாவது:-ஆத்மஸ்வரூந்தான் ஆத்மாவுடைய அஸாதாரண ஆகாரமாகிற ஸ்வரூபந்தான், நித்யர் அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தராய் பரமபதத்திலேயிருக்கிறவர்கள் நித்யஸூரிகளென்றும்,முக்தர் ஸம்ஸாரவிநிர்முக்தராய்லீலாவிபூதியிலிருந்து பரமபதத்துக்குப்போனவர்கள் முக்தர் என்றும், பத்தர் "அநாதிமாயயா ஸுப்த:" என்கிறபடியே அநாதியான அசித்ஸம்பந்தத்தையெப்போதும் விடாமலிருக்குமவர்கள் பத்தர் என்றும், கேவலர் ஆத்மாநுபவம் பண்ணுமவர்கள் கேவலர் என்றும், முமுக்ஷுக்கள் பகவத்ப்ராப்திநிமித்தமாகஸம்ஸாரநிவ்ருத்தியில்இச்சையையுடையவராகிற பக்திநிஷ்டர்க்கும் ப்ரபத்திநிஷ்டர்க்கும் முமுக்ஷுக்கள் என்று பேராகக்கடவது; என்று ஐந்து- ஆக இந்த ஆத்மாக்களினுடைய ஸ்வரூபம் ஐந்துவிதமாயிருக்கும்.

(அவ.) இரண்டாவது பரஸ்வரூபமாவது எது? என்ன அருளிச்செய்கிறார்-(பரஸ்வரூபம்) என்று தொடங்கி,

௬ - பரஸ்வரூபமென்கிறது பரமாத்மஸ்வரூபத்தை.

(வ்யா) அதாவது பரமாத்மாவினுடைய அஸாதாரண ஆகாரமாகிற ஸ்வரூபத்தைப் பரஸ்வரூபம் என்கிறது.

*(அவ.) அத்தை விவரிக்கிறார்— (பரமாத்மஸ்வரூபந்தான்) என்று தொடங்கி,*

எ பரமாத்மஸ்வரூபந்தான்:— பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரமென்றைந்து.

(வ்யா.) *அதாவது*-பரமாத்மஸ்வரூபந்தான்— *அதாவது பரமாத்மாவினுடைய அஸாதாரண ஆகாரந்தான்.* பரத்வம் *பரமபதத்திலெழுந்தருளியிருக்கும்* இருப்புக்குப்பரத்வம் *என்று பேர்,* வ்யூஹம் *ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமாக ஆமோதாதிலோகங்களிலெழுந்தருளியிருக்குமிருப்புக்கு வ்யூஹம் என்று பேர்,* விபவம் *அயோத்யாமதுராதிதிவ்யக்ஷேத்ரங்களில் ராமக்ருஷ்ணாதிரூபேண அவதரித்தருளின அவதாரங்களுக்கு விபவம் என்று பேர்,* அந்தர்யாமித்வம் *ஸகல சேதநஅசேதநங்களில் இருக்குமிருப்புக்கு அந்தர்யாமித்வம் என்று பேர்,* அர்ச்சாவதாரம் கோவில்களிலும் க்ருஹங்களிலுமிருக்கிற விக்ரஹ ஆகாரங்களுக்கு *அர்ச்சாவதாரம் என்று பேராயிருக்கும்.* என்று ஐந்து- *ஆக ஈஶ்வரனுடைய ஸ்வரூபம் ஐந்துவிதமாயிருக்கும்.*

*(அவ.) மூன்றாவது புருஷார்த்தஸ்வரூபத்தை விளக்கக் கோலி முன்னம் புருஷார்த்தசப்தத்திற்கு அர்த்தமருளிச் செய்கிறார்- (புருஷனாலே) என்று தொடங்கி-*

அ. புருஷனாலே யர்த்திக்கப்படுமது புருஷார்த்தம்.

(வ்யா.) *அதாவது:*—புருஷனாலே *சேதநனாலே,* அர்த்திக்கப்படுமது- *ப்ரார்த்திக்கப்படுமது, எதுவோ அது,* புருஷார்த்தம் - *புருஷார்த்தமாயிருக்கும்.*

*(அவ.) அத்தை விவரிக்கிறார்:— (அந்த புருஷார்த்தந்தான்) என்று தொடங்கி,*

௯ அந்த புருஷார்த்தந்தான்— தர்ம, அர்த்த, காம, ஆத்மாநுபவ, பகவதநுபவம் என்றைந்து.

(வ்யா.) *அதாவது:*— அந்த புருஷார்த்தம்தான்-*சேதநனாலே ப்ரார்திக்கப்படுமதான அப்புருஷார்த்தமாகிறதுதான்;* தர்மம்-*தர்மமென்றும்,* அர்த்தம் - *அர்த்தமென்றும்,* காமம் - *காமமென்றும்,* ஆத்மாநுபவம் - *ஆத்மாநுபவமென்றும்,* பகவதநுபவம் - *பகவத் அநுபவம் என்றும்,* என்று ஐந்து- *ஆக புருஷார்த்தத்தினுடைய ஸ்வரூபம் ஐந்துவிதமாயிருக்கும்.*

(அவ.) நான்காவது உபாயஸ்வரூபத்தை விவரிக்கிறார்-(உபா யஸ்வரூபம் என்கிறது) என்று தொடங்கி-

ய. உபாயஸ்வரூபமென்கிறது கர்ம, ஜ்ஞாந, பக்தி, ப்ர பத்தி, ஆசார்யாபிமானமென்றைந்து.

(வ்யா.) அதாவது:- உபாயஸ்வரூபம் என்கிறது- ப்ராபகஸ்வ ரூபம்என்றுசொல்லுமது. கர்மம்-கர்மயோகமென்றும், ஞானம்- ஞானயோக மென்றும், (பக்தி)-பக்தியோகமென்றும், ப்ரபத்தி - ப்ரபத்தியோகமென்றும், (ஆசார்யாபிமானம்)-ஆசாரிய அபிமான மென்றும்,என்றைந்து.ஆகஉபாயஸ்வரூபம் ஐந்துவிதமாயிருக்கும்.

(அவ.) இனி ஐந்தாவது விரோதிஸ்வரூபத்தை விவரிக்கிறார்- (விரோதிஸ்வரூபமென்கிறது) என்று தொடங்கி.

கக. விரோதிஸ்வரூபமென்கிறது- ஸ்வரூபவிரோதி, பரத்வ விரோதி, புருஷார்த்தவிரோதி, உபாயவிரோதி, ப்ராப்தி விரோதி என்றைந்து.

(வ்யா.) அதாவது:-விரோதிஸ்வரூபமென்கிறது விரோதிஸ்வ ரூபமென்று சொல்லுமது, ஸ்வரூபவிரோதி-ஆத்மஸ்வரூபவிரோதி யென்றும்,பரத்வவிரோதி - ஈசுவரஸ்வரூபவிரோதியென்றும், புரு ஷார்த்தவிரோதி-ப்ராப்யவிரோதி என்றும்,உபாயவிரோதி-ப்ராபக விரோதி என்றும், ப்ராப்திவிரோதி - பகவத்ப்ராப்திவிரோதி என் றும், என்று ஐந்து ஆக விரோதிஸ்வரூபம் ஐந்துவிதமாயிருக்கும்.

(அவ.) இனிமேல், கீழில் ஸங்க்ரஹேணச்சொன்ன அர்த்த பஞ்சகத்தில் ஓரொன்றையெடுத்து உபபாதிக்கிறார். அதாவது- கீழ் அர்த்தபஞ்சகம் ஓரொன்றே அஞ்சுவிதமாயிருக்கும் படியை ஸங்க்ரஹமாக அருளிச்செய்து, அத்தைப் பஞ்சவிம்ஶதி தத்வங்க ளாக நிர்ணயித்து. அந்த பஞ்சவிம்ஶதி தத்வங்களில் ஓரொன்றை எடுத்து உபபாதிப்பதாகத் திருவுள்ளம் பற்றி, முதல்சொன்ன ஆத்மஸ்வரூபபஞ்சகத்தில் நித்யஸூரிகளின் படியை அருளிச் செய்கிறார்— (இவற்றில் நித்யராவார்) என்று தொடங்கி.

கஉ இவற்றில் நித்யராவார்:— ஒருநாளும் ஸம்ஸாரஸம் பந்தமாகிற அவத்யமின்றிக்கே நிரவத்யராய், பகவதநுபவாநு கூல்யைகபோகராய்,'வானிளவரசுவைகுந்தக்குட்டன்வாசு தேவன்'' என்கிற வைகுண்டநாதனுக்கு, 'விண்ணாட்டவர்

மூதுவர்' என்கிறபடியே, பட்டங்கட்டுகைக்குரியராம்படி முப்பரான மந்திரிகளாய், ஈஶ்வரநியோகாத் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைப் பண்ணவும் ஶக்தராய், ப்ரவ்யூஹாதி ஸர்வாவஸ்தைகளிலுந் தொடர்ந்தடிமை செய்யக்கடவராய்க் கோயில்கொள் தெய்வங்களான சேனைமுதலியார் தொடக்கமான அமரர்கள்.

(வ்யா.) *அதாவது:— இவற்றில் என்றது இவ்வாத்மஸ்வரூப பஞ்சகத்தில் என்றபடி; அதவா, பஞ்சவிம்ஶதி தத்வங்களில் என்னவுமாம்; நித்யராவர்:— நித்யஸூரிகளாகிறவர்கள், "ஸதா பஶ்யந்தி ஸூரய:" என்றும், "ஏகாந்திநஸ்ஸதாப்ரஹ்மத்யாயிந:" என்றும் சொல்லுகிறபடியே, பகவத்ஜ்ஞாநத்துக்கும் பகவதநுபவத்துக்கும் ஒருநாளும் ஸங்கோசமில்லாதவர்களாகையினாலே இவர்களை நித்யர் என்கிறது.* ஒருநாளும் ஸம்ஸாரஸம்பந்தமாகிற அவத்யமின்றிக்கே - *ஒருகாலத்திலும் ஸம்ஸாரத்தின் கூட்டுறவா*

---

*அரு:—* வானிளவரசு வைகுந்தக்குட்டன் வாசுதேவன்:— இளவரசு *யுவராஜா அதாவது, ராஜ்ஜியத்தை ஆளும் சிரமத்தை வகிக்காமல் இளவரசராயிருத்தல்,* வைகுந்தம் - *யாதொரு குண்டனமில்லாதவிடம்,* குட்டன்- *மகன், இத்தால் - பவ்வியன், ஆஶ்ரிதபாதந்த்ரன்,* வாசுதேவன் - *தான் யுவராஜாவாய், ராஜ்யம் மந்திரிகளிட்ட வழக்காய் அத்தால் ராஜ்ஜியம் தன்னரசு நாடாய் அவர்கள் செய்கைகளைத்தான் அறியாதவனாயிருப்பானேவென்னில்; தான் வாசுதேவனாய் எங்கும் வியாபித்து அவைகளை கிரீக்ஷித்துக்கொண்டு ஆளும் வன்மையையுடைய தேவன் - வாசுதேவன்.* வைகுந்தக்குட்டன் - *பக்தர்கள் தம்மையடைவதற்கு இடையூறுகளெல்லாவற்றையும்விலக்கி அவைகளை எளிதில் தம்மிடம்சேர்த்துக்கொள்ளுபவர்.* ஸம்ஸாரஸம்பந்தம் - *ஜென்மபால்யயௌவனதிமரணாதிகங்களில் உழன்று வர்த்தித்தல்:* வாஸுதேவன் - *உலகங்களைத் தாயின் கர்ப்பத்தில் போலத் தமக்குள்வைத்து பறவைகள் சிறகுகளினால் குஞ்சுகளை அணைப்பதுபோல தீங்குகள் வாராமல் மூடிக் காப்பாற்றியும், அவற்றினிடம் தாம் அந்தர்யாமியாக வஸித்துமிருப்பதால் வாஸு என்றும், இந்த ரக்ஷணத்தை விளையாட்டாக வைத்திருப்பதாலும், எல்லாவற்றையும் அடக்கி மேலாயிருப்பதாலும் எப்போதும் விளங்குவதாலும் பக்தர்களிடத்தில் விசேஷித்துச் செல்லுவதாலும் தேவன் என்று சொல்லப்படுகிறான்.* கோயில் கொள்ளல் - *குடிகொள்ளல், கோயில் - தேவாலயம், அதாவது விலக்ஷணமான விமானத்தோடு கூடின தேவாலயம்,* ஈஶ்வரநியோகாத் - *இத்தால் தங்களிச்சையால் எதனையும் செய்ய சக்தியற்றவர்களென்றபடி.*

கிற தோஷமில்லாமலே; நிரவத்யராய் - நிர்தோஷராய்; பகவத் அநுபவ ஆநுகூல்ய ஏகபோகராய்-பகவானுடைய அநுபவமொன்றுக்கே இஷ்டமாயிருந்துள்ள போகரூபராய்; வான்இளஅரசு - " ஊரஷோடஶவர்ஷோமே " என்றும், 'யுவாகுமார:' என்றும் சொல்லுகிறபடியே—சிறிது நாளாகிலும் குறைச்சலும் அதிகமுமில்லாதபடி பதினாறு திருநக்ஷத்ரத்தையுடையவனாய், பரம ஆகாசத்துக்கு அதாகிறது, பரமபதத்திற்கு இளமையான அரசன் என்றும்; வைகுந்தக்குட்டன் - வைகுண்டத்திலெழுந்தருளியிருக்கிற சிறுபிள்ளை என்றும், கூடஸ்தன் என்று சொல்லவுமாம். வாஸுதேவன் என்கிற "வாஸுதேவாய தீமஹி" என்கிறபடியே, ஸமஸ்த சேதன அசேதனங்களில் நித்யவாஸம் பண்ணிக்கொண்டிருக்கிறவன் என்றும் ஆழ்வார் தமது அருளிச்செயலில் சொல்லுகிற, அதவா, "ஸம்பூர்ணஷட்குணஸ்தேஷு வாஸுதேவோ ஜகத்பதி:" என்று சொல்லுகிறபடியே, ஜ்ஞாந, பல, ஐஶ்வர்ய, வீர்ய ஶக்தி, தேஜஸ்ஸுக்களாகிற ஆறுகுணங்களையும் பரிபூர்ணமாய்க் கொண்டு பரமபதத்திலே எழுந்தருளியிருக்கும் அந்த வாசுதேவன் என்றும் ஆழ்வார் தமது அருளிச்செயலில் சொல்லுகிற என்னவுமாம்; வைகுண்டநாதனுக்கு - ஸ்ரீவைகுண்டம் என்னும் பரமபதத்துக்குத் தலைவனாயிருக்குமவனுக்கு, நிர்வாஹகனாயிருக்குமவனுக்கு என்னவுமமையும்; விண்ணாட்டவர் மூதுவர் என்கிறபடியே விண்ணாடு உண்டு பரமாகாஶமாகிற பரமபதம்—'அத்தைத் தங்களுக்கு வாஸஸ்தானமாகவுடையவர்களாகிற, "அமரர்முநியோர்" என்று திருமுகப்பாசுரஞ்சொல்லுகிறப்ரகாரம், பட்டங்கட்டுகைக் குரியராம்படி - பட்டாபிஷேகம் பண்ணிவைப்பதற்குத்தக்கவராம் படி, மூப்பரான மந்திரிகளாய் - வ்ருத்த மந்திரிகளாகி, ஈஶ்வர நியோகாத் - ஈஶ்வரனுடைய நியமனத்தாலே, நியோகம் என்கிறது, நியமநம் என்றபடி; அதாவது—அநுமதி. ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைப் பண்ணவும் ஶக்தராய், லீலாவிபூதியினுடைய உத்பத்தியையும், பாலநத்தையும், ஸம்ஹாரத்தையும் பண்ணுவதற்கும் ஶக்தியையுடையவர்களாகி, பரவ்யூஹாதி ஸர்வஅவஸ்தைகளிலும் ஸ்வசேஷியினுடைய பரத்வம் வ்யூஹம் முதலான ஸர்வ அவஸ்தைகளிலும். காலக்ருதவிசேஷங்களுக்கு அவஸ்தை எனச் சொல்லுவது. ஆதி—என்கையாலே, மற்றை விபவ, அந்தர்யாமித்வ, அர்ச்சாவதாரங்களைப் பராமர்ஶிக்கிறது; ஸர்வ அவஸ்தை

களிலும் என்றது—எல்லா அவஸரங்களிலும் என்றபடியாம்; அதாவது— ஸர்வஸமயங்களிலும் என்பது; தொடர்ந்து "யேந யேந தாதாகச்சதி தேந தேந ஸஹகச்சதி" என்கிறபடியே அவன் பின் சென்று, அடிமை செய்யக்கடவராய் - அடிமையின் க்ருத்ய மாகிற ஸகலவித கைங்கர்யத்தையுஞ்செய்ய ஸமர்த்தராய். கடகர் என்பது கடவர் எனமருவியது. கோயில்கொள் தெய்வங்களான, "பௌமநிகேதநேஷ்வபி குடீகுஞ்ஜேஷு" என்கிறபடியே, பரம பதத்திலும்போலே லீலாவிபூதியிலும் கோவில்களிலிருப்பதாகக் கொண்டுள்ள தேவதைகளாகிற, ஸேனைமுதலியார்தொடக்கமான அமரர்கள் விஷ்வக்ஸேநர் திருவடி திருவனந்தாழ்வான் முதலாக வுள்ள நித்யஸூரிகள்.

(அவ.) முக்தர் படியை விவரிக்கிறார்—(முக்தராவார்) என்று தொடங்கி,

௧௩. முக்தராவார் பகவத்ப்ரஸாதத்தாலே ப்ராக்ருதிஸம்பந் தத்தால் வந்த க்லேசமலங்களெல்லாம் கழிந்து, பகவத்ஸ்வ ரூப ரூபகுணவிபவங்களை அநுபவித்து, அவ்வநுபவஜநிதப்ரீதி உள்ளடங்காமையாலே வாயாரப்புகழ்ந்து, மீட்சியின்றி வைகுந்தமாநகரத்திலே களித்தாநந்திக்கிற முநிவர்கள்,

(வ்யா.) அதாவது:— முக்தராவார் - முக்தர் ஆகிறவர்கள், பகவத்ப்ரஸாதத்தாலே - "க்ருபா காப்யுபஜாயதே" என்னும்படி ஷட்குணபூர்ணனாகிற பகவானுடைய அநுக்ரகத்தாலே, ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் வந்த க்லேசமலங்களெல்லாம் கழிந்து - சரீரஸம் பந்தத்தாலே ஸம்பந்தித்த ஆத்யாத்மிகாதி துக்கங்களும், அஜ்ஞாநாதிமலரூபதர்மங்களும்எல்லாம்நீங்கிஎன்று சொல்லுதல், அன்றிக்கே- துக்கரூபங்களான அஜ்ஞாநாதிமலரூபதர்மங்கள்நீங்கிஎன்னவுமாம், அங்ஙனமன்றிக்கே - துக்கரூபமான அவித்யாதி மலங்கள் நீங்கி என்று சொல்லவுமமையும். "மனனகமலமற" என்றதில்

---

பகவத்ப்ரஸாதத்தாலே- ஞானம், பலம், ஐசுவர்யம், வீரியம், சக்தி தேஜஸ்ஸு இவைகளை இயல்பாகவுடையவன் கருபையாலே எல்லாம் கழிந்து - அபுத்திபூர்வகமாக வந்த பாபங்கள் முதலானவைகள் பூர்வமிருந்து, இப்போதாகக் கழிந்ததாகத் தோற்றுதபடி, அநுபவித்து - ஸாக்ஷாத்கரித்து, உள்ளடங்காமையாலே - மாநஸாநுபவத்துடனிற்காமையாலே, மீட்சியின்றி-புனைகொடுத்தாலும் மீளும்வகையில்லாதபடி, மாநகரம் - திரிபாத்விபூதியைப்போல் அளவுபட்டிராத பரமபதம்.

ஆழ்வார் அருளிச்செய்த அர்த்தம் இவ்விடத்தில் அநுஸந்தேயம்; பகவத்ஸ்வரூப ரூபகுண விபவங்களை - பகவானுடைய ஸ்வரூபத்தையும், திவ்யமங்களவிக்ரஹத்தையும், ஸ்வரூபநிரூபகதர்மங்களான ஜ்ஞான ஆநந்த அமலத்வாதிகளையும் நிரூபிதஸ்வரூப விசேஷணங்களான ஜ்ஞானசக்த்யாதிகளையும், விக்ரஹகுணங்களான ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாதிகளையும் இங்ஙனே அநுபவிக்கைக்கு நித்யவிபூதியிலே விபவங்கள் உபாதேயமாய் இருக்குமாப்போலே, லீலாவிபூதியிலும் அப்படியே ததீயத்வாகாரத்தாலே அநுபவிக்கைக்கு விபவங்கள் யோக்யமாயிருக்கையாலே "விபவங்களை" என்றவிடத்தில் லீலாவிபூதியின் விபவங்களையும் அந்வயிக்கலாயிற்று. அநுபவித்து - அவற்றையெல்லாம் அநுபவித்து, ப்ரீதியாலே அநுஸந்தித்து என்னுதல், அவ்வநுபவஜநிதப்ரீதி உள்ளடங்காமையாலே - கீழ்ச்சொன்ன பகவத்ஸ்வரூபாதிகளுடைய அநுபவத்தால் பிறந்த ப்ரீதியானது உள்ளே தங்கியில்லாமையாலே, மநஸ்ஸிலே தங்காமையாலே என்னுதல்; வாயாரப்புகழ்ந்து-வாக்குக்களாலே "ஹாஉ ஹாஉ ஹாஉ" என்றும், "அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம்" என்று சொல்லிப் பூர்ணமாக ஸ்தோத்ரம் பண்ணி; மீட்சியின்றி-"ந ச புநராவர்த்ததே" என்னும்படி, புநராவர்த்தியின்றியில் அதாவது- மறுபடியும் நீங்குதலில்லாமல் வைகுந்தமாநகரத்திலே - விகுண்டி என்கிற தாய்வயிற்றிலே பிறக்கையாலே வைகுண்டன் என்று ஸர்வேச்வரனுக்குத் திருநாமமாய் அவனுக்கிருக்கையாலே வைகுண்டம் என்று திருநாமத்தை யுடையதாய் ஸ்வேதர ஸமஸ்தவிலக்ஷணமாய் மஹாநகரமாகிய பரமபதத்திலே; களித்து - பகவதநுபவாதிகளால்வந்த ஹர்ஷத்தாலே மகிழ்ந்து; ஆநந்திக்கிற முநிவர்கள்-ஸந்தோஷிக்குமவர்களாய், எப்போதும் பகவத்ஸ்வரூபாதிகளையே மநநம் பண்ணுகிற சீலவான்கள்.

(அவ.) இனி, பத்தர் படியை அருளிச்செய்கிறார் — (பத்தராவார்) என்று தொடங்கி.

மூல பத்தராவார்:— பாஞ்சபௌதிகமாய், அநித்தியமாய் ஸுகதுக்காநுபவபரிகரமாய், ஆத்மவிச்லேஷத்தில் தர்சந ஸ்பர்சந யோக்யமில்லாதபடி அசுத்தாஸ்பதமாய், அஜ்ஞான அந்யதாஜ்ஞான விபரீதஜ்ஞான ஜநகமான ஸ்வதேஹமே ஆத்

மாவாகவும் ஶப்தாதிவிஷயாநுபவஜநிதமான ஸ்வதேஹ போஷணமே புருஷார்த்தமாகவும், ஶப்தாதிவிஷயலாபத் துக்குறுப்பாக வர்ணாஶ்ரமதர்மங்களையழிய மாறியும் அஸேவ்யஸேவை பண்ணியும், பூதஹிம்ஸை பண்ணியும் பரதார பரத்ரவ்யாபஹாரம் பண்ணியும், ஸம்ஸாரவர்த்தகராய், பகவத்விமுகரான சேதநர்.

(வ்யா.) அதாவது:— பத்தர் ஆவார் *பத்தர் ஆமவர்கள்,* பாஞ்ச பௌதிகமாய் - *ப்ருதிவ்யாதிபஞ்சபூதமயமாய்,* அநித்யமாய் - *நித்ய மன்றிக்கேயிருப்பதாய், ப்ரவாஹரூபதயா நித்யமாய் என்னுதல், ப்ரளயகாலத்திலும் ப்ரதிஜன்மத்திலும் நஶிக்குமதாகையாலே நித்யமன்றிக்கேயிருக்குமது என்னுதல்; ஸுகதுக்க அநுபவபரிகரமாய் - புண்யரூபமான கர்மத்தைப் பண்ணுமத்தால் வந்த ஸுக அநுபவத்துக்கும், பாபரூபமான கர்மத்தைப் பண்ணுமத்தால் வந்த துக்க அநுபவத்துக்கும், ஸாதநமாய், உபகரணமாய் என்றபடி* - ஆத்மவிஶ்லேஷத்தில் - *ஜீவாத்மவிரஹத்தில், வியோகத்தில் - அதாவது, பிரிந்தகாலத்திலே என்றபடி;* தர்ஶந ஸ்பர்ஶந யோக்யமில்லாதபடி - *பிணம் என்று பார்க்கைக்கும் தொடுகைக்கும் தகுதியாகாத ப்ரகாரம்;* அஶுத்த ஆஸ்பதமாய் - *பவித்ரம் அன்றியிலேயிருப்பதானமாத்ரமன்றிக்கே அபவித்ரதைக்கும்ஸ்தாநமாயிருக்குமதாய்,* அஜ்ஞாந அந்யதாஜ்ஞாநவிபரீதஜ்ஞாந ஜநகமான ஸ்வதேஹமே - *ஜ்ஞாந அநுதயத்துக்கும், அந்யதாஜ்ஞாநத்துக்கும், விபரீதஜ்ஞானத்துக்கும் பிறப்பிடமான தங்கள்தேஹமே, அதாவது— ஜ்ஞான அநுதயம் என்கிறது - தேஹாத்மாபிமாநத்தை, அந்யதாஜ்ஞாநம் என்கிறது— 'யோக்யதாஸந்தமாத்மாநம்' என்னும்படி* ஸ்வஶேஷத்வ *அந்யஶேஷத்வரூபமான அந்யஶேஷத்வத்தை; விபரீதஜ்ஞாநம் என்றது-ஸ்வஸ்வாதந்த்ர்ய ஜ்ஞாநத்தை; இம்மூன்றையும் பிறப்பிக்குமதான தங்கள் தேஹமே என்னுதல்;* ஸ்வதேஹமே ஆத்மாவாகவும்-*தங்கள் தேஹமே ஜீவாத்மாவாகவும்;சப்தாதிவிஷய அநுபவஜநிதமான ஸ்வதேஹ போஷணமே புருஷார்த்தமாகவும்-சப்தமும் ஸ்பர்சமும் ரஸமும் ரூபமும் கந்தமுமாகிற விஷயங்களினுடைய அநுபவத்தால்பிறந்ததான தங்கள் தேஹத்தை "அந்நம் போஜ்யம் மநுஷ்யாணாம்" என்னும்படி, அந்நம்முதலான பதார்த்தங்களாலேபோஷிக்குமதே புருஷார்த்தமாகவும்; தங்கள்தேஹத்தினது சப்தம் ஸ்பர்ஶம்,ரூபம்,ரஸம், கந்*

தம் ஆகிற விஷயங்களினுடைய அநுபவங்களைப்பிறப்பிக்குமதான 'அந்நம் போஜ்யம் மநுஷ்யாணாம்' என்னும்படி, அந்நம் முதலான பதார்த்தங்களைக்கொண்டு போஷிக்கும் அந்த போஷணமே புருஷார்த்தமாகவும் என்னவுமமையும்; புருஷார்த்தம்—பலம்; சப்தாதி விஷயலாபத்துக்கு உறுப்பாக - சப்தம் ஆதியாகவுடைய விஷயங்களை லபிக்கைக்கு, அதாவது-பெறுகைக்கு அங்கமாக, அதாவது-அநுகூலமாக, வர்ண ஆஶ்ரம தர்மங்களை அழியமாறியும் - தங்களுடைய வர்ணதர்மங்களையும், ஆஶ்ரமதர்மங்களையும் அழியும்படி மாறியும், அழியமாறியாகிலும் என்னாதே, அழியமாறி என்று ஸித்தாந்தமாக அருளிச்செய்கிறார். வர்ணதர்மங்களாகிறவை எவை? என்னில்—ப்ராஹ்மணருக்கு தங்கள் வர்ணத்துக்கு அநுகுணமான வேதஅத்யயநாதிகளும், நித்யநைமித்திகாதி கர்மங்களும், ஸதாசாரஸம்பத்தியும் ஆகிற இவை விஹிததர்மங்கள். க்ஷத்ரியனுக்கு - தங்கள் வர்ணத்துக்கு அநுகுணமாக நித்ய-நைமித்திகாதிகள் கூடுமவையாய், யஜநாதிஷட்கர்மங்களில் யாஜந அத்யாபந ப்ரதிக்ரஹங்களாகிற மூன்றும் கூடாதவையாய் தண்டயுத்த பாலநாதிகள் கூடுமவையாயிருக்கும். வைஶ்யர்க்கு க்ஷத்ரியனைபோலே தங்களுடைய வர்ணத்துக்குஅநுகுணமான நித்ய கர்மமும் ஶர்மாவர்மங்களொழிய குப்தஸம்ஜ்ஞிகமான நைமித்திகாதிகளுங்கூடுமவையாய் யஜந யாஜந அத்யயந அத்யாபந ப்ரதிக்ரஹங்கள் கூடாதவையாய், ஶ்ரவணவாணிஜ்யாதிகள் கூடுமவையாயிருக்கும். இவை ப்ராஹ்மணாதி மூவர்க்கும் விஹிததர்மங்கள். ஶூத்ரருக்கோ— தங்களுடைய வர்ணத்துக்கு அநுகுணமான ஶுஶ்ரூஷையும், க்ருஷியும் பண்ணிக்கொண்டிருக்கையே விஹித தர்மம், 'ஶுஶ்ரூஷா ஶூத்ரஸ்ய' என்றபடி மூவர்க்கும் ஶுஶ்ரூஷை பண்ணுமது; க்ருஷி பண்ணுமதுவே சொல்லிற்றிறே ஸூத்திரத்தில். இனி ஆஶ்ரமதர்மங்களானவை எவை? எனில் ப்ரஹ்மசர்யாஶ்ரமத்துக்கு வேதஅத்யயந அதஶ்ஶயந (தரையில்படுத்தல்) பிக்ஷாசரண கமண்டலபலாச தண்ட க்ருஷ்ணாஜிநாதி தாரணங்கள் கூடுமவையாய், ஸ்ரக்சந்தநாதிகள் கூடாதவையாயிருக்கும். க்ருஹஸ்தாஶ்ரமத்துக்கு பிக்ஷாசரணாதிகள் கூடாதவையாய், ஸ்ரக்சந்தநாதிகள் கூடுமவையாயிருக்கும். வாநப்ரஸ்தாஶ்ரமத்துக்கு ஶ்மஶ்ரு ரோமாதிகளும், வன்யாஹாராதிகளும் அதஶ்ஶயநாதிகளும் கூடுமவையாய், க்ராம்ய ஆஹாரங்களும்,

கிராம்யநிவாஸாதிகளுங் கூடாதவையாயிருக்கும். யக்யாஶ்ரமத்துக்கு ஸந்தியாவந்தநாதிகள் மாநஸிகங்களாய் ஸப்தக்ருஹ அந்நபிக்ஷாசரணபோஜநாநந்தர ஸ்நாநாதிகள் கூடுமவையாய் "வாஹநஸ்தம்பதிம்" என்னும்படியல்லாமல் வாஹநாதிகளும் ஸ்ரக்சந்தநாதிகளும் கூடாதவையாயிருக்கும். இப்படியிருக்கிற வர்ணதர்மங்களையும் ஆஶ்ரமதர்மங்களையும் யதாக்ரமமாக நாலுபேரும் நடக்குமதே ப்ரயோஜநமாயிற்றபின்பு, அர்த்தகாமங்களின் நிமித்தமாக "ஆசாரஹீநம் ந புநந்திவேதா:" என்றபடி, அநாசார துராசாரங்களைப் பண்ணுவதனாலே—வர்ண ஆஶ்ரமதர்மங்களை அழிய மாறியும்—என்றது. அன்றிக்கே வர்ணஆஶ்ரமதர்மங்களை அழிய மாறியும் என்கிற வாக்யத்திற்குப்ராஹ்மணனானவன் அர்த்தகாமங்கள்நிமித்தமாகக்ஷத்ரியவர்ணதர்மங்களான தண்டயுத்தாதிகளையங்கீகரித்தும், வைஶ்யவர்ணதர்மங்களான க்ருஷிவாணிஜ்யாதிகளை அவலம்பித்தும், "யஸ்யவேதஶ்சவேதீச" என்கிறபடியே வர்ணாந்தர தர்மஸங்காராநுஷ்டாநத்தாலே தம்முடைய வர்ணாஶ்ரமதர்மங்களுக்கு அநுரூபமான அநுஷ்டானமின்றிக்கே யொழியும்படி நடக்குகையாலே துர்ப்ராஹ்மணன் என்று போயிருக்கும்.

இதுக்குத் திருஷ்டாந்தம்:— ஸ்ரீபாகவதத்தில் அஜாமிள வ்ருத்தாந்தத்திலே காணலாம். க்ஷத்ரியன் அர்த்தகாமங்கள் நிமித்தமாகத் தன்னுடைய குலதர்மங்களையும் வ்ருத்த ஆசாரங்களையும்விட்டு ப்ராஹ்மணதர்மங்களையும் வைஶ்யதர்மங்களான க்ருஷ்யாதிகளையும் அவலம்பிக்கிறதுண்டாகையாலே ஶாத்த க்ஷத்ரியன் என்று சொல்லும்படியன்றிக்கேயிருப்பன். இதுக்கு திருஷ்டாந்தம்—க்ஷத்ரியனாய்க் காமாதுரனான சந்தான் ப்ராஹ்மணச்ரேஷ்டனான குருபத்நி பாதிவ்ரத்யபங்கம் பண்ணின வ்ருத்தாந்தங் கண்டுகொள்வது. வைஶ்யன் அர்த்தகாமங்கள் நிமித்தமாகத் தன்னுடைய குலதர்மங்களையும் வ்ருத்த ஆசாரங்களையும் விட்டு, சதுர்த்தவர்ணத்திற்கு தர்மமான க்ருஷ்யாதிகளையும், ப்ராஹ்மணருக்குதர்மமான தபஸ்ஸையும் ஸஹகமநாதிகளையும்க்ஷத்ரிய தர்மமான தண்டயுத்தாதிகளையும் பரிக்ரஹித்து, இப்படி அநாசார துராசாரங்களை நடத்திக்கொண்டு போருமவனாயிருக்கையாலே சதுர்த்தவர்ணப்ராயனாய் ஸத்வைஶ்யன் என்று சொல்லும்படியன்றிக்கேயிருப்பன் என்கை. ஶூத்ரன்— அர்த்தகாமங்கள் நிமித்தமாக ஸ்வதர்மமான க்ருஷியும் ப்ராஹ்மணாதி மூவர்க்கும்

ஶுஶ்ரூஷை பண்ணுமதுங்கர்த்தவ்யமாயிருக்க அத்தைவிட்டு ப்ராஹ்மணர் பண்ணும் தபஸ்ஸையும், க்ஷத்ரியன் பண்ணும் தண்டயுத்தங்களையும், வைஶ்யன் பண்ணும் வாணிஜ்யத்தையும் பரிக்ரஹித்து, கிஞ்சித் ஐஶ்வர்யத்தையுடையனுனல் அஹங்காரத்தாலே ப்ராஹ்மணுதி ஸ்திரீபரிக்ரஹம் பண்ணி பாதிவ்ரத்யபங்கம் பண்ணுமவனாய், ஸச்சூத்ரன் என்னும்படியன்றிக்கேயிருப்பன் என்கை. இதுக்கு த்ருஷ்டாந்தம்:— ஸ்ரீராமாயணத்தில் வைஶ்ய ஸ்த்ரீஸம்பந்தியாய், சம்புகன் என்று பேருடையனான சூத்ரன் பரமமான தபஸ்ஸை யவலம்பித்து பஞ்சாக்நிமத்தியத்திலே கீழ்த்தலையாக மேல்காலாகவிருந்து தபஸ்ஸு பண்ணின கதையுண்டு. அங்கே கண்டுகொள்வது.

இப்படி ப்ராஹ்மணுதிசதுர்விதமான அதிகாரிகள் தங்களுடைய வர்ணதர்ம ஆஶ்ரமதர்மங்களை அழியமாறியும் இருப்பர் என்றும் சொல்லவுமாம். அஸேவ்யசேவைபண்ணியும், சேவிக்கைக்கு யோக்யமாகாத மநுஷ்யருடைய சேவையைப்பண்ணியும்.பூதஹிம்ஸை பண்ணியும், அர்த்தகாமாதிகள்நிமித்தமாக மநுஷ்யாதிஹிம்ஸைகள் பண்ணியும், பரதாரபரத்ரவ்யாபஹாரம் பண்ணியும், பரதார அபஹாரமும் பரத்ரவ்ய அபஹாரமும் பண்ணியும், ஸம்ஸாரவர்த்தகராய், (ஸம்ஸாரவஶவர்திந:) என்னும்படி ஸம்ஸாரத்தை வ்ருத்தியாக்குமவர்களாய் அதாவது வர்திப்பிக்குமவர்களாய். பகவத்விமுகரானசேதனர் பகவானுக்கபிமுகரான்றிக்கேயிருக்கிற சேதனர்.

(அவ) இனிமேல் கேவலன்படியை அருளிச்செய்கிறார்— (கேவலனுவான்) என்று தொடங்கி.

கரு. கேவலனுவான்-தனியிடத்திலேமிகவும்க்ஷுத்பிபாஸைகளாலே நலிவுபட்டவன் பக்ஷ்யாபக்ஷ்ய விவேகம்பண்ணமாட்டாதே தன்னுடம்பைத் தானே ஜீவித்து ப்ரஸங்குமாப்போல, ஸம்ஸாரதாவாக்நியாலே தப்தனுனவன், ஸம்ஸாரதுக்க நிவருத்திக்குறுப்பாக சாஸ்த்ரஜந்ய ஜ்ஞாநத்தாலே ப்ரக்ருதி ஆத்மவிவேகம் பண்ணி, ப்ரக்ருதி-துக்காஶ்ரயமாய் ஹேயபதார்த்தஸமுதாயமாயிருக்கிறவாகாரத்தையும் ஆத்மா ப்ரக்ருதே:பரனுய். பஞ்சவிம்ஶகனுய், ஸ்வயம் ப்ரகாசனுய், ஸ்வதஸ்ஸுகியாய், நித்யனுய்அப்ராக்ருதனுயிக்கிற வாகாரக்தையுமநுஸந்தித்து முன்புதான்பட்ட துக்கத்தின்

உடனத்தாலே இவ்வல்பரஸத்திலே கால்தாழ்ந்து உணர்முழு நலமான பரமாத்ம விவேகம் பண்ணமாட்டாதே, அமுத வெள்ளத்தானுஞ் சிறப்புவிட்டு, அல்வாத்ம ப்ராப்திக்கு ஸாதனமான ஜ்ஞாநயோகத்திலே நிஷ்டனாய், யோகபலமான வாத்மாநுபவமாத்ரத்தையே புருஷார்த்தமாகவநுபவித்து, பின்பு ஸம்ஸாரஸம்பந்தமும். பகவத் ப்ராப்தியுமற்று, யாவ. தாத்மபாவி அசரீரியாய்க் கொண்டுதிரிவானொருவன்.

(வ்வா) *அதாவது* கேவலன் ஆவான் *கேவலன் என்கிறவன் ஆகிறவன்,*" தனியிடத்திலே *ஏகாந்த ஸ்தலத்திலே, அதாவது— பசிவிடாய்களைத் தணிப்பிக்கும் பதார்த்தங்கள் கலப்பில்லாத ஸ்தானத்திலே,* மிகவும் *அதிகமாகவும்,* க்ஷுத்பிபாஸைகளாலே, *பசியாலேயும்தாஹத்தாலேயும்,* நலிவுபட்டவன் - *ஶ்ரமப்பட்டவன், பாதைபட்டவன் என்றபடி,* பக்ஷ்ய அபக்ஷ்ய விவேகம் பண்ண மாட்டாதே - *பக்ஷ்ய விவேகம் ஆகிறது எது? என்றால் - அநுபவிக்கைக்கு யோக்யமான த்ரவ்யம் என்று தெரியுமது, அதுக்கு ஸமர்த்தனன்றிக்கேயிருக்குமது, அபக்ஷ்ய விவேகம் என்கிறது எது? என்றால், அநுபவிக்கைக்கு யோக்யமாகாத த்ரவ்யம் என்று தெரியுமது, அதுக்கு ஸமர்த்தனன்றிக்கேயிருக்குமது. அவனுக்கு - அநுபவிக்கைக்கு யோக்யமான த்ரவ்யத்தை அநுபவிக்க யோக்யமாகாதென்றிருக்கையும், அநுபவிக்க யோக்யமாகாத த்ரவ்யத்தை அநுபவிக்கயோக்யம்என்றிருக்கையும்ஆகவுமாம்.* தன்னுடம்பைத்தானேஜீவித்து - *தன்னுடைய சரீரத்தின் மாம்ஸத்தைத் தானே பிடுங்கித்தின்றுபிழைத்து.*ப்ரஸங்நன் ஆமாப்போலே*ஸந்தோஷித்தவன் ஆகுமதுபோலே,*ஸம்ஸாரதாவாக்னியாலே-*ஸம்ஸாரத்*

---

(அரு.) கேவலம் - *அற்பம், தனிமை, துன்பம்,* மோக்கம்;கேவலன் *தற்பிரியன்;* தாவாக்நி - *காட்டுத்தீ,* ஆத்மாநுபவம் - இத்தை ஆழ்வார் '*குறுகமிகவுணர்வத்தோடு நோக்கி எல்லாம்விட்ட—இறுகலிறப்பென்னும்" என்று அருளிச்செய்தார்.*

*இவனையும் "முமுக்ஷு" என்று விவகரிப்பதுண்டு. பகவத்ப்ராப்தி காமருக்கும் சரீரவிமோசனத்தில் இச்சையுள்ளதுபோல் இவர்களுக்கும் அந்த இச்சை வேண்டியதாயிருப்பதால், 'முமுக்ஷு' என்ற பேர் இவ்வழியாலுண்டாயிற்று. 'கேவல'சப்தம், முமுக்ஷுபதத்தில் பகவத்ப்ராப்தியும் சரீரவிமோசனம் இவை இரண்டுமுண்டாயிருக்க சரீரவிமோசனத்தில் மாத்திரம் இச்சை வந்தபடியால் கேவலசப்தம் வந்தது.*

நின் ஆத்யாத்மிகாதிரூபமான அக்நியாலே,ஸம்ஸாரரூபதாவாக்நியா லே என்றுஞ்சொல்லவுமாம்; தப்தனுனவன், தக்தனுனவன், ஸம் ஸாரதுக்கநிவ்ருத்திக்கு உறுப்பாக-ஸம்ஸாரரூமபாயிருக்கிறதுக்கம் நிவர்த்தியாவதற்கு அநுகுணமாக, அன்றிக்கே - ஸம்ஸாரத்திலே யிருக்கிற தன்னுடைய துக்கநிவாரணத்துக்கு அங்கமாக என்ன வுமாம்; சாஸ்திரஜந்யஜ்ஞாநத்தாலே - சாஸ்த்ர அப்யாஸத்தால் பிறந்த ஜ்ஞாநத்தாலே, ப்ரக்ருதி ஆத்மவிவேகம் பண்ணி - ப்ரக்ரு திக்கும் ஜீவாத்மாவுக்குமுண்டான வ்யாவ்ருத்தியைப் பராமர் ஶித்து. ப்ரக்ருதி - ப்ரக்ருதியானது, துக்காஶ்ரயமாய் - அவஶ்ய மநுபோக்தவ்யம்என்னும்படியான புண்யபாபரூபகர்மங்களுக்கும் அவற்றுக்கு பலங்களான ஸ்வர்க்க,நரக அநுபவங்களுக்கும் 'தஸ் மால்லோகாத்புநரேத்யஸ்மைலோகாய கர்மணே' என்கிறபடியேப லம் அநுபவித்தபின்புவருகிறஜன்மபரம்பராரூபமான ஸகலதுக்கங் களுக்கும் ஆதாரமாய், ஹேயபதார்த்தஸமுதாயமாயிருக்கிறஆகாரத் தையும்-"மாம்ஸாஸ்ருக்விண்மூத்ரஸ்நாயுமஜ்ஜாஸ்திஸமுதாய:" என் றும், "அழுக்குடம்பு" என்றும். "ஶோக:காகாஞ்சவாரயேத்" என் றும் சொல்லுகிறபடியே, ஹேயவஸ்துக்களினுடையகூட்டுறவாயி ருக்கிறஆகாரத்தையும், ஆகாரம்வடிவு,ஆத்மா-ஜீவாத்மாவானவன், ப்ரக்ருதே:பரனாய் - தேஹேந்த்ரியமந:ப்ராணதீப்யோந்ய:என்கிறப டியேப்ரக்ருதியில் காட்டில்வ்யாவ்ருத்தனாய்,ஸ்வயம்ப்ரகாஶனாய்- ஸ்வத்வந்தாத்தாலே ப்ரகாஶிக்குமவனன்றிக்கே தீபவத்தனக்குத் தானே ப்ரகாஶிக்குமவனாய், ஸ்வதஸ்ஸுகியாய் - ஆநுகூல்யமே தனக்கு ஸ்வபாவமாகவுடையனாய், நித்யனாய் - நித்யாநாம் என்கிற படியே ப்ரவாஹரூபதயா அநித்யத்வாதிகளையுடைய ப்ரக்ருதியைக் காட்டில் நித்யனாய், அதாவது ஸர்வகாலவர்த்தகனாய்; அப்ராக்ருத னாயிருக்கிற ஆகாரத்தையும் - ப்ராக்ருதிஸம்பந்தமுண்டானபோது குணத்ரயவஶ்யனாய் விடுமிறே. அப்படியன்றிக்கே ஸ்வாபாவிக விசேஷத்தை விசாரிக்குமளவில் ஜ்ஞாநாதிகளே ஸ்வரூபமாயும், குணங்களில் ப்ராக்ருத குணங்களில்லாதவனாயுமிருக்கும். ஆகை யாலே குணத்ரயாத்மகனன்றிக்கே யிருக்குமவன் என்றார். "நிஸ் த்ரைகுண்ய:" என்னுமாப்போலே, ஆத்மாவுக்கு இப்படியிருக்கிற ஆகாரத்தையும், அநுஸந்தித்து - கீழ்க்கமானபடியே மனத்தாலும் வாயாலும் அநுஸந்தானம் பண்ணி, முன்பு நான் பட்ட - முன்பு ஆவதேது என்னில் பிறந்தவன்று தொடங்கியிருந்த ஜன்மமீடாக

வுண்டான காலம் என்னுதல்; அதவா மாத்ருகர்ப்பத்தில் நின்று பிறந்த அன்று தொடங்கித் தனக்கு ஜ்ஞானம் பிறக்குமளவுமுண் டான காலம் என்று சொல்லவுமாம்; பூர்வஜன்மங்களில் பட்ட துக்கம் அப்ரத்யக்ஷமாய் இஜ்ஜன்மத்தில் பட்ட துக்கம் ப்ரத்யக்ஷ மாயிருப்பது; இப்படி பூர்வத்தில் தான் அநுபவித்த துக்கத்தின் உபநத்தாலே - துக்கத்தினது அதிசயத்தாலே, அதாவது ஜன்ம பரம்பரையாலும்,பராஸ்த்ரஜ்ஞ்யஜ்ஞானமின்றிக்கேயிருக்கையாலும் சப்தாதி விஷயப்ராவண்யத்தாலும் ஆக, முன்பு தான் பட்ட துக் காதிசயத்தாலே என்னுதல்; இவ்வல்பரஸத்திலேகால்தாழ்ந்து - இந்த ஆத்மாநுபவமாகிற அல்பவின்பத்திலே காலழுந்தி தாழ்ந்து என்னுதல், அளற்றிலே கால்சேர்ந்து என்னுமாப்போலே; பக வதநுபவத்தைப்பற்ற இவ்வாத்மாநுபவத்தை "அல்பரஸம்" என்னக்குறையில்லையிறே. உணர்முழுநலமான பரமாத்மவிவே கம் பண்ணமாட்டாதே "முழுஉணர்வு - முழுநலம்" என்று பாசு ரத்துக்குப் ப த வி பா க ம். ஸாகல்யஜ்ஞானத்தையுடையனும்: ஸாகல்ய ஆநந்தத்தை யுடையனுயுமிருக்கை யன்றிக்கே அந்த பாசுரத்துக்கு அர்த்தம் ஜ்ஞான ஆனந்தங்கள் பரிபூர்ணனாய் உடையனுயிருக்குமவன் என்னுதல், அன்றிக்கே அவனுடைய ஸ்வரூபமெல்லாம் ஜ்ஞானாநந்த மயமாய் இருக்குமென்பது ஸ்வரூபபரமாகவும் குணபரமாகவும் சொல்லலாமிறே. இப்படி யிருக்கிற பரமாத்மாவாகிற ஈஶ்வரன்பக்கலுண்டான அநுபவாதி கள் தன் ஸ்வரூபத்துக்குப்ராப்தங்களானவையென்று விவேகம் பண்ணமாட்டாதே, அல்பமான ஆத்மாநுபவத்திற்காட்டில் இவ் வாத்மாவுக்கு ஆத்மாவான அவனுடைய அநுபவாதிகள் இவ் வாத்மாவுக்கு ப்ராப்தங்களானவை என்று விவேகம் பண்ணமாட் டாதே என்னுதல்; அமுதவெள்ளத்தானஞ் சிறப்புவிட்டு - பகவ தநுபவாதி அம்ருதப்ரவாஹத்தில் அந்தர்பூதனாகிற ஸம்ருத்தியை விட்டு, இவ்வாத்மப்ராப்திக்கு ஸாதநமான ஜ்ஞானயோகத்திலே நிஷ்டனாய் இந்த ஆத்மாவை ப்ராபிக்கைக்கு ப்ராபகமான ஸாங்கிய ஜ்ஞானயோகத்திலே விஹிதனாய், இழிந்தவனாய் யோகபலமான ஆத்மாநுபவமாத்ரத்தையே ஜ்ஞானயோகத்துக்குப் பலமான ஆத்மாவினுடைய அநுபவமாத்ரத்தையே புருஷார்த்தமாக அநுப வித்து - பலமாக அநுபவித்து, அநுபவித்து என்றது அநுஸந் தித்து என்னவுமாம்; பின்பு இந்தலோகத்தில்ஸாதனகாலதசையில்

ஶரீரவிஶிஷ்டனாய் ஆத்மாநுபவமாத்ரத்தையே பலமாக அநுப வித்தபிறகு, ஸம்ஸாரஸம்பந்தமும் - ஸம்ஸாரத்தில் வர்த்திக்குகை க்குக் காரணமான ஸ்தூலஸூக்ஷ்மரூபகர்மசரீரஸம்பந்தமும், பகவத்ப்ராப்தியும் அற்று - பகவானுடைய ப்ராப்தியும் அற்று, அற்று என்கிற பதத்தை "ஸம்ஸாரஸம்பந்தமும் அற்று" என்றும் "பகவத்ப்ராப்தியும் அற்று" என்னும் இரண்டிடத்திலும் அநு ஸந்திக்கக்கடவது; யாவத் ஆத்மபாவி - மேல் ஆத்மா இருக்குமளவும் அசரீரியாய்க்கொண்டு ஸ்தூலதேஹமானது போமதுக்காகவும், ஸூக்ஷ்மதேஹமானது இருக்கைக்காகவும் சொன்னால் மேல் ஜன் மம் எடுக்கைக்குக் காரணமாம், ஆகையாலே அசரீரித்வம் ஸித்தி யாமல் ஸ்தூலஸூக்ஷ்மரூபசரீரங்கள் இரண்டும் போனவ னுக்கே அசரீரித்வம் ஸித்திக்கும், ஆகையாலே "அஶரீரியாய்க் கொண்டு" என்றருளிச்செய்கிறார். "யாவதாத்மபாவி அசரீரி யாய்க்கொண்டு" என்றருளிச்செய்கையாலே உபாஸனதசையில் ஶரீரவிஶிஷ்டனாய் உபாஸிக்குமவனாகையாலேயும், பலதசையில் ஸ்தூலஸூக்ஷ்மரூப ஶரீரநிவ்ருத்தியைச் சொல்லுகையாலேயும், மேல் ஆத்மவஸ்துவானது இருக்குமளவும் அஶரீரியாயிருக்கு மதாகும் என்று வாக்யத்துக்கு முக்யமான அர்த்தம் ஸித்தாந்த மாய்விடுகையாலே, ஜன்மகாரணமான ஸூக்ஷ்மஶரீரஸம்பந்தமு மில்லையென்பதுஸித்தம். "விரஜாபரமவ்யோமகோரந்தாகேவலம் ஸ்ம்ருதம்" என்கிற பத்மவசனத்தாலும்—விரஜாநிஸ்தாணம் ஸித்த மாகையாலே மேலே ஜன்மமெடுக்கைக்குக்காரணமான ஸூக்ஷ்ம ஶரீரஸம்பந்தமில்லை என்பது நிச்சிதமாயிற்று. திரிவான் ஒருவன் ஸஞ்சரியா நிற்குமவன் ஒருவன்.

(அவ.) இனி முமுக்ஷுக்கள் படியை அருளிச்செய்யத் திரு வுள்ளம்பற்றி முந்தற முமுக்ஷுசப்தத்துக்கு அர்த்தமருளிச்செய் கிறார்— (மோக்ஷத்தில்) இத்யாதியாலே

௧௧. மோக்ஷத்திலேஇச்சையுடையவர்களுக்கு முமு க்ஷுக்கள் என்று பேராகக்கடவது,

(வ்யா.) அதாவது— 'முக்திர்மோக்ஷோமஹாநந்த:' என்கிற படியே பகவத்ப்ராப்தியில் இச்சையுடையவர்களுக்கு முமுக்ஷுக் கள் என்று பேராகக்கடவது என்னுதல்; அதவா முமுக்ஷுக்கள் என்று முச்ல்மோக்ஷணே என்கிற தாது ஸித்தமாக உண்டான ஸம்ஸாரவிமோசனத்தில்இச்சையுடையவராகக்கடவது. மோக்ஷத்

திலே இச்சை என்று பகவத்ப்ராப்தியில் இச்சையுடையவராயிருக்குமவர்களுக்கு முமுக்ஷுக்கள் என்று பேராகக்கடவது என்றும் சொல்லவுமாம், ஸம்ஸாரவிமோசனத்தில் இச்சையுடையவர்களுக்கு முமுக்ஷுக்கள் என்று பேராகக்கடவது என்றுஞ்சொல்லவுமாம்.

(அவ.) அவர்களார் என்னுமபேக்ஷையில் அருளிச்செய்கிறார்— (அவர்கள்தான்) என்று தொடங்கி,

கஎ அவர்கள்தான் முமுக்ஷுக்களாய் உபாஸகராய் இருப்பாரும், முமுக்ஷுக்களாய் ப்ரபந்நராயிருப்பாருமாய் இரண்டுபடிபட்டிருப்பர்.

(வ்யா.) அதாவது—அவர்கள்தான் கீழில் உதாஹரித்த லக்ஷணங்களையுடைய முமுக்ஷுக்கள்தான்; முமுக்ஷுக்களாய் உபாஸகராயிருப்பாரும் - முமுக்ஷுக்களாயிருந்து வைத்து பக்திநிஷ்டராயிருப்பவரும்; முமுக்ஷுக்களாய் ப்ரபந்நராயிருப்பாரும் - முமுக்ஷுக்களாயிருந்து வைத்து ப்ரபத்திநிஷ்டராகயிருப்பவரும்; ஆய் ஆகி; இரண்டுபடிபட்டிருப்பர் - இரண்டு ப்ரகாரம் பட்டிருப்பர். "மோக்ஷத்திலே இச்சையுடையவர்கள்" என்றதில் கீழ்ப்ரஸ்துதமான பகவத்ப்ராப்திக்கு ஸாதனத்வைவித்யத்தையும், அதிகாரித்வைவித்யத்தையும் தர்சிப்பிக்கக்கடவது.

இப்படி சேதனஸ்வரூபமானது அஞ்சுபடி பட்டிருப்பதை அருளிச்செய்தாராயிற்று.

(அவ.) அநந்தரம் ஈச்வரனுடைய ஸ்வரூபத்தை விவரிக்கிறார்— (ஈச்வரவிஷயத்தில்) என்று தொடங்கி.

கஅ. ஈச்வரவிஷயத்தில் பரத்வமாவது-பரமபதத்திலே "அவாக்யநாதர:" என்றெழுந்தருளியிருக்கிற ஆதியஞ்சோதியுருவான பரவாஸுதேவர்.

---

அரு:— பரத்வமாவது - "அகால கால்யமான நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யமுக்தர்க்கு யோக்யனாய்க் கொண்டெழுந்தருளியிருக்கும் இருப்பு. "பரத்வத்தில் ஜ்ஞாநாதிகளாலும் பூர்ணமாயிருக்கும்." பரத்வத்திலிருப்பு — நாடியாகிற்மேல் நிலாமாகிற நீணிலா முற்றத்திலே இனிய சந்தனகுஸுமதாம்பூதாதிகளாலே அலங்கரித்து சந்ரசாம்ராதிகள் பணிமாற அத்தேசவாஸிகளுக்கு முகங்கொடுத்து திரிபுவனசக்ரவர்த்தியென்று விருது பிடிக்குமாப்போலவும், பயிருலராநிற்க கடலிலே வர்ஷிக்கும் காள மேகம்போலவும், த்ருஷார்த்தன் நாக்குவற்றிச்சாவாநிற்க மத்ஸ்யத்திற்குத் தண்ணீர் வார்க்கும் தார்மிகனைப்போலவும் இது ஆவரணம் ஜலம்போல் லீலாவிபூதிக்கப்பாற்பட்டிருக்கும்.

(வ்யா.) அதாவது— ஈஶ்வரவிஷயத்தில் பரத்வம் ஆவது - பரத்வாதி பஞ்சப்ரகாரமான ஈஶ்வரவிஷயத்தில் பரத்வம் ஆகிறது ஆகிறதுதான், பரமபதத்திலே - "தத்விஷ்ணோ: பரமம்பதம்" என்கிறபடியே ஸர்வஉத்க்ருஷ்டஸ்தானமான ஸ்ரீவைகுண்டத்திலே 'அவாக்யநாதர:' என்று எழுந்தருளியிருக்கிற - நித்யஸூரிகள் முதலானவர்களோடு வார்த்தைசொல்லாதேயிருக்குமவனாய், ஆதரமன்றிக்கேயிருக்குமவனாய், கம்பீரமாக எழுந்தருளியிருக்குமவனாய், "வார்த்தைசொல்லான் சூதறியான்" என்கிற இவ்வாக்யத்தாலே எந்த அர்த்தம் நிச்சயித்ததாய்த்து என்னில் அல்பரானவர்களைப் போலே பதறிக்கொண்டு இராதே இருக்கையும், "யேந யேந தாதா கச்சதி" என்றும், 'ஓடிம்புள்ளேறி' என்றுஞ் சொல்லுகிறபடியே தனக்குத் திருவுள்ளமானபோது ஸஞ்சரிக்கையும், திருவடிமேல்கொண்டு ஸஞ்சரிக்கையும் வேணுமாகில் திருத்துழாயை முடியிலே சூடுகை முதலான சேஷ்டிதங்களைப் பண்ணுகையும், "திருமகள் பூமியேவமற்றமராட்செய்வர்" என்றும், "சூட்டுநன் மாலைகள் தூயனவேந்தி" என்றுஞ்சொல்லுகிறபடியே தன்னுடைய நியமநத்தாலேயாதல், பெரிய பிராட்டியார் துடக்கமான நாய்ச்சிமார் ஏவுதலாலேயாதல் நித்யஸூரிகள் ஸகலவித கைங்கர்யங்களைப்பண்ணவும், நியமநமில்லாதபோது அவர்கள் தங்கள் கைகளாலும் தலைகளாலும் பரிசுத்தங்களான திருத்துழாய்மாலை முதலிட்ட பதார்த்தங்களையேந்திக்கொண்டிருக்கவுமான சேஷ்டிதங்களைப் பண்ணுகையும் 'மநஸைவ' என்றபடி வேணுமாகில் ஸங்கல்பமாத்ரத்தாலே அநாயாஸேந ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணுமவனாயிருக்கையும், வார்த்தை சொல்லுங்காலத்திலே சொல்லுகையும் கார்யப்பாடில்லாத காலத்திலே வார்த்தைசொல்லாதிருக்கையும் ஆகிறவிவை சொல்லப்பட்டன. இங்ஙனன்றிக்கே "எப்போதும் வார்த்தைசொல்லாதிருப்பன்—எப்போதும் ஆதரியாதிருப்பன்" என்று சொன்னால் ஆஶ்ரிதஸம்ரக்ஷணாதிகளும் அத்தால்வந்த ஸந்தோஷாதிகளும், சைதன்யமுமின்றிக்கேயொழியும். ஆகையாலே கம்பீரமாக எழுந்தருளியிருக்குமிருப்பைச் சொன்ன ப்ரகாரமாகக்கடவது; ஆதியஞ்சோதியுருவான பரவாஸுதேவர் - மூலகாரணபூதராய் ஸுந்தரமான தேஜஸ்ஸையுடைத்தான திருமேனியையுடையரான பரவாஸுதேவர். அதவா ப்ரதமதேஜோரூபமான ஸ்வரூபத்தையுடையரான பரவாஸுதேவர் என்றும்

சொல்லவுமாம். "பரவாஸுதேவர்" என்றது வ்யூஹவாஸுதேவ ரிருக்கையாலே, பரசப்தத்துக்கு "ய:பர:" என்ற ஶ்ருதிப்ரஸித் தத்தைப் பற்றச்சொல்லுதல், 'வாஸுதேவ' சப்தத்திற்கு வாஸு தேவாய என்று ஶ்ருதி சொன்னபடியே 'ஸர்வத்ராஸௌ' என்னும் படி ஸகல பதார்த்தங்களிலும் நித்யவாஸம்பண்ணிக்கொண்டிருக் குமவன் என்று சொன்னபடி

(அவ) வ்யூஹத்தை அருளிச்செய்கிறார் மேல்— (வ்யூஹமா வது) என்று தொடங்கி,

கக வ்யூஹமாவது ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த் தாக்களான ஸங்கர்ஷணப்ரத்யும்ன அநிருத்தர்கள்.

(வ்யா) அதாவது— வ்யூஹமாவது - வ்யூஹங்களாகுமவை, ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரகர்த்தாக்களான ஸங்கர்ஷணப்ரத்யும்ன அநிருத்தர்கள் - "தத்வஜ்ஞானபலத்வந்த்வாத்" என்கிறபடியே ஜ்ஞானபலங்கள் இரண்டோடுங்கூடி ஸம்ஹாரகர்த்தாவான ஸங்கர் ஷணரும், "ஐச்வர்யவீர்யஸம்பேதாத்" என்கிறபடியே ஐச்வர்ய வீர்யங்கள் இரண்டோடுங்கூடி ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரத்யும்ன ரும், 'ஶக்தி தேஜஸமுத்கர்ஷாத்' என்கிறபடியே ஶக்தி தேஜஸ் ஸுக்கள் இரண்டோடுங்கூடி ஸ்திதிகர்த்தாவான அநிருத்தரும், 'ஷாட்குண்யாத்வாஸுதேவ:' என்று பட்டருளிச்செய்தபடியே அவர் மூவருடனே வ்யூஹவாஸுதேவரையுங்கூட்டி வ்யூஹசதுஷ் டயமென்றுஞ்சொல்லுவர்கள். ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணும் வ்யூஹங்கள் மூன்றே.

(அவ.) விபவத்தின் படியை ஸங்க்ரஹேண அருளிச்செய்கி றார்— (விபவமாவது) என்று தொடங்கி.

உம விபவமாவது ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள்.

(வ்யா.) அதாவது— விபவம் ஆவது - அவதாரங்கள்ஆவன, ராமக்ருஷ்ணாதி அவதாரங்கள் - ஸ்ரீராமஅவதாரமும், ஸ்ரீக்ருஷ்ண

அரு:— வ்யூஹம் பாற்கடல்போலே சென்று காணவரிதாம்படி யிருக்கும். இது "பரமோதாரனாயிருப்பானொரு தார்மிகன் ஒரு கிராமத் திற்குக்கொடுத்த த்ரவ்யத்தை காலு கிராமணிகன் வாங்கி விபஜித்துக் கொள்ளுமோபாதி க்ஷீராவ்யூகமான க்ஷீராப்தி

விபவ:— பெருக்காறுபோல, தத்காலவர்த்திகளுக்கு ஆச்ரணீய மாயிருத்தல். இது "குணஹீன ப்ரஜைகளைத்தள்ளி குணவான்களைக் கைக்கொள்ளும் பிதாவோபாதியும், மண்டலவர்ஷம் போலவுமுள்ளது."

*அவதாரமும், ஆக்ஷேபத்தாலே மத்ஸ்யகூர்மவாராஹாதி அவதாரங்களை பராமர்சிக்கிறது.*

(*அவ.*) இனிமேல் *அந்தர்யாமித்வத்தையுபபாதிக்கிறார்-(அந்தர்யாமித்வம்) என்று தொடங்கி.*

உக அந்தர்யாமித்வம் இரண்டுபடிபட்டிருக்கும்.

(*வ்யா.*) *அதாவது*— அந்தர்யாமித்வம் இரண்டுபடிபட்டிருக்கும் - *அந்தர்யாமித்வமானது இரண்டுபிரகாரமாயிருக்கும்.*

(*அவ.*) *கீழ்''அந்தர்யாமித்வம் இரண்டுபடிபட்டிருக்கும்''என்றது ஸ்வரூபவ்யாப்தியையும், விக்ரஹவ்யாப்தியையுமிறே, அவற்றை விவரிக்கிறார்— (அதாவது) என்று தொடங்கி.*

உஉ அதாவது'அடியேனுள்ளான்'என்றும், 'எனதாவி' என்றும், 'என்னுயிர்'என்றும் சோல்லுகிறபடியே ஆத்மாவுக்குள்ளும், 'போதிற்கமலமென்னேஞ்சம்புகுந்து' என்றும், அர

---

*விபவம் அகந்தமாய் கௌணமுக்யபேதத்தாலேபேதித்திருக்கும். மநுஷ்யத்வம், திர்யக்த்வம்போலே கௌணத்வமும் இச்சையாலே வந்தது, ஸ்வரூபேண அன்று. அதில் அப்ராக்ருத விக்ரஹங்களுமாய், அஜஹத்ஸ்வபாவ விபவங்களுமாம். தீபாதுத்பந்ந ப்ரதீபம்போலே யிருக்கக்கடவதானமுக்ய ப்ராதுர்பாவங்களெல்லாம் முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யங்களாயிருக்கும். விதி, ஶிவ, பாவக, வ்யாஸ, ஜாமதக்னியார்ஜுன, வித்தேஶாதிகளாகிற கௌணப்ராதுர்பாவங்களெல்லாம் அஹங்காரயுக்த ஜீவர்களை அதிஷ்டித்து நிற்கையாலே முமுக்ஷுக்களுக்கு அநுபாஸ்யங்கள். நித்யோதித ஶாந்தோதிதாதிபேதமும் ஜாக்ரத்ஸ்வப்நஜ்ஞாதியான சாதுராத்ம்யமும் கேசவாதி மூர்த்யந்தரமும், ஷட்த்ரிம்சத் பேதபிந்நமான பத்மநாபாதி விபவமும், உபேந்த்ர த்ரிவிக்ரம ததிபக்த ஹயக்ரீவ நரநாராயண ஹரிக்ருஷ்ண மத்ஸ்யகூர்மவாராஹாதியவதாரவிசேஷங்களும் அவற்றினுடைய புஜாயுத வர்ணக்ருத்யஸ்தாநாதிபேதங்களும், தாரதம்யங்களுமாய் குஹ்யதமங்களுமாய் இருக்கையாலே சொல்லுகிறிலோம். அவதாரங்களுக்கு ஹேது— இச்சை, பலம் — ஸாது பரித்ராணாதித்ரயம். பலப்ரமாணங்களிலும் ப்ருகு ஶாபாதிகளாலே பிறந்தானென்கையாலே அவதாரங்களுக்குஹேது கர்மமாய் வேண்டாவோவென்னில்; அவைதன்னிலே ஶாபம் வ்யாஜம், அவதாரம் ஐச்சிகமென்று பரிஹரித்தது.*

22. அந்தர்யாமித்வம்:— *"அந்த:ப்ரவிஶ்யநியந்தாவாயிருக்கை. ஸ்வர்க்கநரகப்ரவேசாதி ஸர்வாவஸ்தைகளிலும் ஸகல சேதநர்களுக்குந் துணையாய், அவர்களை விடாதேநிற்கிற நிலைக்குமேலே ஶுபாஶ்ரயமான*

விந்தப்பாவையும் தானுமகம்படிவந்து புகுந்து' என்றும், 'புந்தியில் புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்தவழகன்' என்றும், 'உள்ளுவாருள்ளத்தெல்லாமுடனிருந்தறிதி' என்றும் சொல்லுகிறபடியே லக்ஷ்மீஸஹிதனாய் விலக்ஷணவிக்ரஹயுக்தனாய்க்கொண்டு ஹ்ருதயகமலத்துள்ளும் ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் ஸதாவலோகனம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்குமிருப்பு.

(வ்யா.) *அதாவது— அதாவது - அந்தர்யாமித்வமிரண்டு ப்ரகாரமாயிருக்கும் வ்யாப்திகளாவன. 'அடியேனுள்ளான்' என்று தொடங்கி 'ஆத்மாவுக்குள்ளும்' என்கிற வாக்யத்தளவாக ஸ்வரூப வ்யாப்தியைச்சொல்லுகிறது,'போதிற்கமலமென்னெஞ்சம் புகுந்து'என்று தொடங்கி 'ஸதாவலோகனம் பண்ணிக்கொண்டும்' என்னுமளவாக விக்ரஹவ்யாப்தியைச் சொல்லுகிறது.*

*அவ்விரண்டில்முந்துறஸ்வரூபவ்யாப்தியையருளிச்செய்கிறார்.* 'அடியேனுள்ளான்' என்றும் *தாஸபூதனான என்னுள்ளே உள்ளவன் என்றும்*, 'எனது ஆவி' என்றும் *என்னுடைய ஆத்மா என்றும்*, என்னுயிர் என்றுஞ் சொல்லுகிறபடியே *எனக்கு ப்ராணபூதன் என்றுஞ் சொல்லுகிற ப்ரகாரமே. அதாவது "யஸ்யாத்மா ஶரீரம்" என்கிறபடியே என்னைத் தனக்கு ஶரீரமாகக்கொண்டு தான் ஶரீரியாய், தாரகனாயிருக்கும் என்னுமர்த்தமும் சொல்லவேண்டுவதொன்றிறே.* ஆத்மாவுக்குள்ளும் "*அந்த:ப்ரவிஷ்ட:*" *என்கிறபடியே ஆத்மாவுக்குள்ளேயிருக்கிற விருப்பும், ஆத்மாவுக்குள்ளேயிருக்கிற விருப்புஸ்வரூபவ்யாப்தி, அத்தைச்சொன்னபடி.*

*மேல் விக்ரஹவ்யாப்தியைச் சொல்லுகிறது. அதாவது—* போதில் கமலம் என் நெஞ்சம் புகுந்து என்றும், *போதில்கமலம் என்றது காலத்தில் விகஸிக்கிற கமலம் என்றபடி, அதுபோலேயிருக்கிற என்னுடைய ஹ்ருதயகமலத்தில் ப்ரவேசித்து எனவும், அதவா, போதில்கமலம் என்றதுக்கு காலோபாதியின்றிக்கே விக*

---

*திருமேனியோடே கூடிக்கொண்டு, அவர்களுக்கு த்யேயனாகைக்காகவும், அவர்களை ரக்ஷிக்கைக்காகவும், பந்துபூதனாய்க்கொண்டு ஹ்ருதயகமலத்திலே எழுந்தருளியிருக்குமிருப்பு.*

*இது, பூகதஜலம்போலே, "கட்கிலீ" என்கிறபடி கண்ணுக்கு அஷ்டாங்கயோகத்தாலல்லாமல், விஷயமாகாமலிருக்கை. "நாம் அறிக்க*

ஸிக்கும் என்னுடைய ஹ்ருத்பத்மம் என்னவுமாம். ஈஶ்வரகடாக்ஷம் பெற்றவர்களுக்கு ஹ்ருத்பத்மமானது எப்போதும் விகஸித்திருக்குமதாயிறேயிருப்பது. "அரவிந்தப்பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து" என்றும் ஜீவாத்மாவோடே கூடவிருக்கும்போது தாமரைவாஸிநியான பிராட்டியும் தானுமாக அந்தரங்கமான திருமேனியோடே வந்து ப்ரவேஶித்து எனவும், "அகம்" என்று இவனுடைய மனஸ்ஸு என்னும் அர்த்தத்தையும், படி என்று அவனுடைய திருமேனி என்னும் அர்த்தத்தையும் சொல்லவுமாம்; "புந்தியில் புகுந்து தன்பால் ஆதரம் பெருகவைத்த அழகன், என்றும் புந்தி என்று புத்தி என்றதாய் அத்தால் மனஸ்ஸாய் புத்தி என்னும் மனஸ்ஸுக்கு உண்டான தோரவஸ்தாவிசேஷம் சொன்னபடி. அன்றிக்கே புந்தி என்று சரீரத்துக்கும் வாசகமாயிருக்கும்; புந்தியில் புகுந்து என்னுடைய ஹ்ருதயத்தில் தன்னுடைய திருமேனியை வைத்து. அதவா என் சரீரத்தில் ஜீவாத்மாவோடே கூட ப்ரவேசித்து என்னவுமாம். தன்பால் ஆதரம் பெருகவைத்த அழகன்—தன் பக்கலிலே எனக்கு ஆதரம் ப்ரவஹிக்கும்படி தன்னுடைய திருமேனியை வைத்த அழகன், என்னுடைய ஹ்ருதயத்தில் தன்னுடைய திருமேனியைப் புகுதவைத்து தன் பக்கல் ஆதரம் ப்ரவஹிக்கும்படி வைத்த அழகன் என்னவுமமையும். பெருகவைத்த அநுபாவ்யனை தன்னளவன்றிக்கே பெருகும்படி வைத்த, 'வைத்த அழகன்' என்றதுக்கு தன் பக்கலிலே எனக்கு ஆதரம் ப்ரவஹிக்கைக்காக என் புந்தியில் தன்னை வைத்த அழகன் என்னவுமாம். அழகன் "போமர்காதல் கடல்புரையவிளைவித்த காரமர்மேனி" என்கிறபடியே அழகையே நிரூபகமாக உடையவன். "உள்ளுவார் உள்ளத்தெல்லாம் உடன் இருந்து அறிதி" என்றும் சொல்லுகிறபடியே தன் பக்கலிலே மனஸ்ஸையுடையவர் மனஸ்ஸிலேயெல்லாம் திருமேனியோடே கூடவிருந்து "பக்கம் நோக்கறியான்" என்னும்படி பின்னேயொரு கார்யப்பாடின்றியே பரிச்சேதித்திருந்தாய் என்றுஞ் சொல்லுகிற ப்ரகாரமே. அதவா "உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடன் இருந்து அறிதி" என்று பாட

---

நினைத்தாலும் அழியாதபடி நம்மையும் தன்னையும் நோக்கிக்கொண்டு, நாமாக நினைத்தவன்று அதுக்கானவிடத்திலே முகம் காட்டியும், பித்தர் கழுத்திலே சுருக்கிட்டுக்கொண்டால் பின்னே நின்று அறுத்துவிடும் மாதாவைப்போலவும், மதம்பட்ட யானை கொல்லப்புக்கால் அதின் கழுத்திலே இருந்த பாகன் அதன் செவியையிட்டு அதன் கண்ணை மறைக்கு

மாம்போது, நினைவுக்கு வாய்த்தலைப்பற்றியிருக்கையாலே அநுஸந்திப்பார். அநுஸந்திக்குமது எல்லாவற்றையும் கூடஇருந்து பரிச்சேதிப்புதி என்றுஞ்சொல்லுகிறப்ரகாரமே என்னவுமாம், லக்ஷ்மீ ஸஹிதனாய் - பிராட்டியோடே கூடினவனாய், விலக்ஷணவிக்ரஹ யுக்தனாய்க் கொண்டு - விலக்ஷணமாக இருந்துள்ள விக்ரஹவிசிஷ்டனாகக்கொண்டு, ஹ்ருதயகமலத்துக்குள்ளே "த்வாஸுபர்ணா" இத்யாதிப்படியே ஆத்மாவோடேகூட ஹ்ருதயபத்மத்திலே இப்படி ஸ்வரூபவ்யாப்தியையும்,விக்ரஹவ்யாப்தியையுமுடையவனாய்க் கொண்டு, ஆத்மாவோடேகூட உபாஸகருடையவும், ப்ரபந்நருடையவும், ஹ்ருதயபத்மங்களிலே இரண்டு வ்யாப்தியாலுமிருக்கும். மற்ற ஸகல சேதநருடைய ஹ்ருதயகமலங்களிலே ஸ்வரூப வ்யாப்தியாலேயிருக்கும் என்றும் அதிகாராநுகுணமாக விறே வ்யாப்திதானிருப்பதாகச் சொல்லுவார்கள். ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் சேதநருடைய ஸகல ப்ரவ்ருத்திகளையும், ஸகல நிவ்ருத்திகளையும், அவை எவை என்னில்— வேதமானது சேதநரைக் குறித்து— 'இதம் குரு இதம்மாகார்ஷீ:' என்று புண்யகர்மத்தில் ப்ரவ்ருத்தியும், பாபகர்மத்தில் நிவ்ருத்தியும், விதிக்குமதாயிருக்க, அப்படிச்செய்யாதே பண்ணவொண்ணாதென்று விதித்த பாபகர்மத்தில் ப்ரவ்ருத்தியும், பண்ணு என்று விதித்த புண்யகர்மத்தில் நிவ்ருத்தியும் உடையராயிருக்கை; சேதநருடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் இப்படியிருக்குமிறே, பகவத்விஷயத்திலும் கைவல்யத்திலும்,ஸ்வர்க்காதி இதர புருஷார்த்தங்களிலும் அந்வயிக்குங் கார்யம் முதலிலே யில்லையிறே; ஆனால் இவனுக்குளந்தகார்யத்தில் ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளுடையஅந்வயமுண்டுஎன்றால் பரத்ருபீடாதி நிவ்ருத்தி வேணும்என்றும், அந்யபாராதிகளில் ப்ரவ்ருத்தி வேணுமென்று மாய்த்து இவன் ப்ரவ்ருத்திக்கிறது. கர்மநிஷ்டனுக்கு "தர்மப்ரஜார்த்தம் வ்ருணீமஹே" என்று சுருதி விதித்தபடியே பகவதநுபவாதிகளிலும், ஆத்மாநுபவத்திலும் நிவ்ருத்தியும் ஐஹிகவிஷயத்திலும், ஸ்வர்க்காதி ஆமுஷ்மிகவிஷயத்திலும் ப்ரவ்ருத்தி உண்டாயிருக்கும். ஜ்ஞாநநிஷ்டனுக்கு இதர விஷயங்களி

---

மாப்போலவும், இராமடம் ஊட்டுவாரைப்போலவும், உணரில் கையைக் கடிக்குமென்று உறக்கத்தில் பாலும் சோறும் புஜிப்பிக்கும் மாதாவைப் போலவும் அந்தர்யாமித்வம்". இன்னமும் சேதநாசேதனங்கள் சத்தை பெறவும், தான் ஆனந்தமடைய அடியார்கள் திறத்தில் "தெளிந்தவென்

னுடையவும் கர்மங்களினுடையவும் நிவ்ருத்தியும், ஸமாதி பலிக்கு மளவும் ஆத்மஸ்வரூபத்தில் ப்ரவ்ருத்தியும், ஸமாதி பலித்தபின்பு பகவத்விஷயத்தில்ப்ரவருத்தியும்,இரண்டுமுண்டாயிருக்கும்.பகவத் விஷயத்தில் ஜ்ஞானயோகநிஷ்டனானவனையிறே கீழ்ச்சொன்னது. கேவலனுக்கு இதர விஷயங்களிலும் கர்மங்களிலும் நிவ்ருத்தியும், ஸாத்யமான ஆத்மாநுபவத்திலே ப்ரவ்ருத்தியும் அதுக்கு ஸாதந மாக பகவத்விஷயப்ரவ்ருத்தியும் இரண்டுமுண்டாயிருக்கும். பக வத்விஷயத்தில் பக்திநிஷ்டனான உபாஸகனுக்கு பகவத்விஷயத் தில் ஸ்வயத்ந ஸ்வரூபபக்தியில் ஸாதநத்வப்ரவ்ருத்தியும், கைவல் யத்திலும் ஸ்வர்க்காதிகளிலும் நிவ்ருத்தியும் உண்டாயிருக்கும். ப்ரபந்நனுக்கு ஸ்வகதமாகவும் பரகதமாகவும் பகவத்விஷய ப்ர வ்ருத்தியும் உபாஸகனுக்குண்டான ஸ்வயத்நரூபஸாதநப்ரவ்ருத்தி யில் நிவ்ருத்தியும் உண்டாயிருக்கும்; ஆசார்யாபிமான நிஷ்ட னுக்கு "ஸித்திர்பவதிவாநேதி" இத்யாதிப்படி ஈஶ்வரபாதந்த்ரர் பக்கல்நிவ்ருத்தியும் ஆசார்யாபிமானநிஷ்டர் பக்கல்ப்ரவ்ருத்தியும் உண்டாயிருக்கும். பரமபதத்திலே நித்யர்க்கும் முக்தர்க்கும் "மருந்தேநங்கள்போகமகிழ்ச்சிக்கு" என்று எங்களுடைய ஸ்வ போக்த்ருத்வாதிதோஷங்களுக்கு மருந்தானவனே என்று அநு ஸந்தித்து ஸ்வபோக்த்ருத்வாதி தோஷங்களில் நிவ்ருத்தியும், பகவ தநுபவாதிகளில் ப்ரவ்ருத்தியும் உண்டாயிருக்கும். இப்படி நித்ய முக்தருடையவும், ஆசார்யாபிமான நிஷ்டருடையவும், ப்ரபந்நரு டையவும், உபாஸகருடையவும், கேவலருடையவும், கர்மயோக நிஷ்டருடையவும் ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் என்கை. ஸதா வலோகனம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்கும் இருப்பு எப்போதும் பார்த்துக்கொண்டும், இப்படியிரண்டு ப்ரகாரங்களா கவும் "அநஶ்நந்ந்ய:" என்னும்படி ப்ரக்ருதி புருஷர்களுக்குண் டான விகாராதிதோஷங்களில் பற்றின்றிக்கே,ஹேயப்ரத்யநீகனாய் கொண்டு எழுந்தருளியிருக்கும் இருப்பு என்கை. (22)

(அவ.) இனி அர்ச்சாவதாரத்தை உபபாதிக்கிறார் மேல் (அர்ச்சாவதாரமாவது) என்று தொடங்கி.

---

சிந்தையகங்கழியாதே" என்றும், "தேனும் பாலும் கன்னலும் அமுது மாகி தித்தித்து என் ஊனிலுயிரிலுணர்வில் நின்றவொன்றையுணர்ந் தேனே" என்று உள்ளே வசித்தல்.

உ௬. அர்ச்சாவதாரமாவது— "தமருகந்ததெவ்வுருவம் அவ்வுருவந்தானே தமருகந்ததெப்பேர் மற்றெப்பேர்" என்கிற படியே தனக்கென்ன ஓருருவும் ஓர் பெயருமன்றிக்கே, ஆஶ்ரிதருகந்தவடிவே வடிவாகவும், அவர்களிட்ட பெயரே பெயராகவும், ஸர்வஜ்ஞனாய் இருக்கச்செய்தே அஜ்ஞனைப்போலேயும், ஸர்வஶக்தனாயிருக்கச்செய்தே அசக்தனைப்போலேயும், அவாப்தஸமஸ்தகாமனாயிருக்கச்செய்தே ஸாபேக்ஷனைப்போலேயும், ரக்ஷகனாயிருக்கச்செய்தே ரக்ஷ்யம்போலேயும், ஸ்வஸ்வாமிபாவத்தைமாறாடிக்கொண்டு கண்ணுக்கு விஷயமாம்படி ஸர்வஸுலபனாய்க்கொண்டு கோயில்களிலும், க்ருஹங்களிலும் தேசகாலாவதியின்றிக்கே யெழுந்தருளியிருக்கும் நிலை.

(வ்யா) *அதாவது*— அர்ச்சாவதாரம் ஆவது - *அர்ச்சாவதாரம் ஆகிறது*, "தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்தானே - தமர் உகந்தது எப்பேர் மற்று அப்பேர்" என்கிறபடியே "*ஸுரூபாம் ப்ரதிமாம் விஷ்ணோ: ப்ரஸந்நவதநேக்ஷணாம் க்ருத்வாத்மந:ப்ரீதிகரீம் ஸுவர்ணரஜதாதிபி:" என்கிறபடியே ஆஶ்ரிதர் உகந்தவையான ஸுவர்ணரஜத தாம்ர தாரு ஶிலா ம்ருண்மயங்களான த்ரவ்யங்களாலேயாதொரு திருமேனியைக் கோருகிறார்களோ, அப்படியே விலக்ஷணத்ரவ்யம் என்றும், அவிலக்ஷணத்ரவ்யம் என்றும் பாராமல் தனக்குத் திருமேனியாக பரிக்ரஹிக்குமவனாய், ஆஶ்ரிதர் உகந்து எந்த திருநாமத்தையிடுகிறார்களோ, அந்த திருநாமமே திருநாமமாக ப்ரக்ரஹிக்குமவனாய் என்று சொல்லுகிற அருளிச்செயலின் படியே*, தனக்கென்ன ஓருருவம் ஓர் பெயருமன்றிக்கே *தனக்கு இந்தத் திருமேனி வேணும், இந்தத் திருமேனி வேணும் என்கிற நிர்ப்பந்தமில்லாமலேயே*, ஆஶ்ரிதர் உகந்தவடிவே வடிவமாகவும், அவர்கள் இட்ட பெயரே பெயர் ஆகவும் - *ஆஶ்ரயித்தவர்கள் ஆனவர்கள் தாங்களுகந்து ஏதேனும் ஒரு த்ரவ்யத்தாலே விக்ரஹத்*

---

**அர்ச்சாவதாரம்:**— *குணபூர்த்தியுள்ளவிடமாயும், ப்ரபத்தி பண்ணும் முக்ய ஸ்தலமாயுமுள்ளது. இது இருட்டறையில் விளக்குப்போல ப்ரகாசிப்பது. தேங்கின மடுக்கள்போலுள்ளது. "அவனிவன் என்று கூழேன்மின் நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும் நீள்கடல் வண்ணனே" என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி சேதநர்க்கபிமதமான திரவ்யங்களிலே தேசகால அதிகாரி நியதியில்லாதபடி ஸந்நிதி பண்ணும்*

தைப் பண்ண என்றால் நல்லதுஎன்று அப்படியே அந்த விக்ரஹத்தில் அஸாதாரணமான அதிஷ்டானவிசேஷத்தை அதிஷ்டித்து அதுவே தனக்கு அஸாதாரணமான திருமேனியாக பரிக்ரஹித்தும், "என்னுடைய ராமன், என்னுடைய க்ருஷ்ணன்" என்னும்படி அவர்கள் உகப்பாலேயிட்ட திருநாமமே தனக்குத் திருநாமமாக அங்கீகரித்தும்; ஸர்வஜ்ஞனாயிருக்கச்செய்தே அஜ்ஞனைப் போலேயும் 'யஸ்ஸர்வஜ்ஞ:' என்கிறபடியே தன் கார்யமும் பிறர் கார்யமுமெல்லாம் அறிந்திருக்கச்செய்தேயும் இழவு பேறுகள் ஒன்றுந்தெரியாத அஜ்ஞனைப்போலேயும் ஸர்வஶக்தியாயிருக்கச் செய்தே அஶக்தனைப்போலேயும் 'பராஸ்ய ஶக்தி:' என்றும் 'ஸர்வ ஶக்தி:' என்றும் சொல்லுகிறபடியே கார்யங்களைச் செய்யுமளவில் எத்தனை ஸர்வஜ்ஞத்வமுண்டானாலும் ஶக்தியில்லாதபோது கூடாமையாலே அதுக்காகஸர்வஶக்தி ஸம்பந்நனாயிருக்கச்செய்தே 'அஶக்தஇவ சேஷ்டதே' என்னும்படி ஸ்வபரகார்யங்களைப் பண்ணுகைக்கீடான ஶக்தியில்லாத அசக்தனைப்போலும், அவாப்த ஸமஸ்தகாமனாயிருக்கச்செய்தே ஸாபேக்ஷனைப்போலேயும் "ஸர்வாந் காமாந், ததத்யாப்யஶக்த இவ லக்ஷ்யதே" என்றும், 'நாக்கொண்டு மானிடம் பாட" என்னும் பாட்டிலும், 'குலந்தரும்' என்கிற பாட்டிலும் ஶாஸ்த்ரத்திலும், ஆழ்வார் திருமங்கையாழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களிலும் சொல்லுகிறபடியே தான் ஸமஸ்தகாமங்களையும் பொருந்திருக்குமவனாய், ஆஶ்ரிதர்க்கு ஐஹிக ஆமுஷ்மிகரூபஸகல அபீஷ்டங்களையுங் கொடுக்குமவனாகவிருக்கச்செய்தே 'ததிச்சயா' என்கிறபடியே லோகத்திலேயொருவன் பசியாலும் தாகத்தாலும் நலிவுபட்டு, ஆரேனும் இத்தனை சோறுந்தண்ணீருங்கொடுக்குமவர்களுண்டோ இல்லையோ என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்குமாப்போலே அவனும் தன்னையழிக்

---

ஸ்தலங்களாம். "ராஜமஹிஷி தன் பர்த்தாவினுடைய பூம்படுக்கையிற் காட்டில் ப்ரஜையினுடைய தொட்டில் காற்கடை யோக்கியமாக வந்து கிடக்குமாப்போலவும் கோயில் திருமலை பெருமாள்கோயில் துடக்கமான அர்ச்சாஸ்தலங்கள்." இது ஸ்வயம்வ்யக்தம், தைவம், ஸைத்தம், மாநுஷ்யம் என்று நாலுவிதமாயிருக்கும். ஸ்வயம்வ்யக்தமாவது - ஒருவருடைய ப்ரதிஷ்டையின்றிக்கேதானே ஆவிர்பவித்த ப்ரஸித்தமான ஸ்ரீரங்கவிமானாதிகள், தைவமாவது - ப்ரஹ்மாதிகளினால் ப்ரதிஷ்டிப்பிக்கப்பட்ட காஞ்சீ முதலான திவ்யதேசங்களிலெழுந்தருளியிருக்கும் எம்

குமவர்களாகவுமாம், ஏவரேனுமாகவுமாம் எனக்கித்தனை சோறும் தண்ணீருங்கொடுக்குமவர்களுண்டோ இல்லையோ என்று அவர்கள் அவஸரப்ரதீக்ஷனுயிருக்குமவனைப்போலவும், ஸர்வரக்ஷகனுயிருக்கச்செய்தே ரக்ஷ்யம்போலேயும் அகாரத்தில்'அவ—ரக்ஷணே' என்கிற தாதுஸித்தமான த்ரிவிதசேதந அசேதநரக்ஷகத்வம் தன் பக்கலிருக்கச்செய்தேயும், தன்னையாஶ்ரயித்த ஜ்ஞாநாதிகருக்குப் பரதந்த்ரனுயிருக்குமாத்திரமன்றிக்கே, பத்தரான ஸம்ஸாரிகளுக்கும் க்ருபாபரவஶனுய்க்கொண்டு ரக்ஷ்யபூதனுயிருக்குமிருப்பைச் சொன்னபடி. எங்ஙனே என்னில் 'இங்கபௌஸமுபஸ்திதௌ'என்றும், 'ஸுக்ரீவம் நாதமிச்சதி' என்றுஞ் சொல்லுகிறபடியே ஜ்ஞாநவான்களான விஶ்வாமித்ரர் பக்கலிலும், மஹாராஜர் பக்கலிலும் 'மமப்ராணுஹி' என்னும்படி ஐஶ்வர்யாபேக்ஷையுடையவர்களாய் பத்தரான பாண்டவர்கள் பக்கலிலும் தனக்கு ரக்ஷகராகவும், தான் அவர்களுக்கு க்ருபாதிசயத்தாலும் ஸௌலப்யத்தாலும் ரக்ஷ்யபூதனுய்க்கொண்டுதௌத்யஸாரத்யங்களைப்பண்ணியும் இப்படி ரக்ஷ்யபூதனுகவிருந்த விருப்பு ப்ரஸித்தமிறே. "ஜ்ஞாநீத்வாத்மைவ" என்றுதானே ஜ்ஞாநாதிகருக்கு நான் ஶரீரவத்பரதந்த்ரன் என்றருளிச்செய்தானிறே. "சிந்தயேச்சஜகந்நாதம் ஸ்வாமிநம் பரமார்த்ததஃ அஶக்தமஸ்வதந்த்ரஞ்ச ரக்ஷ்யஞ்சாபி ஜநார்த்தநம்" என்னவுங் கடவதிறே.

ஸ்வஸ்வாமிபாவத்தை மாருடிக்கொண்டு "ஸ்வத்வமாத்மநிஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணிஸ்த்திதம்" என்கிறபடியே ஸ்வத்வம் ஆனது ஆத்மாவின் பக்கலிலே ஆகவும், ஸ்வாமித்வம் ஆனது தன்பக்கலிலேயாகவும் ஸ்வதவஸ்த்தமாயிருக்க, அதைவிட்டு, ஸ்வத்வம் ஆனது தன் பக்கலிலும், ஸ்வாமித்வம் ஆனது ஆச்ரிதன் பக்கலிலும் மாருடவைத்துக்கொண்டு கண்ணுக்கு விஷய

---

பெருமான்கள். ஸைத்தமாவது - ருஷிகள் முதலானுர் ப்ரதிஷ்டிப்பித்த திருவல்லிக்கேணி முதலான திவ்யதேசத்து எம்பெருமான்கள். மாநுஷ்யமாவது - ஆதுனிகஜனங்களால் ப்ரதிஷ்டிப்பிக்கப்பட்டு க்ராமங்களிலும் க்ருஹங்களிலும் எழுந்தருளியிருக்கும்எம்பெருமான்கள். "இவைகள், முத்துத் துறையிலே குடில் கட்டிக்கொண்டு கர்ஷகனைப்போலவும் க்ராமாதிதேவதைகளும் க்ருஹார்ச்சனை மென்றுதிருக்குருகைப்பிள்ளான் மணிப்பர்." இதன் பெருமையை 'ஶ்ரீவசநபூஷண அரும்பத விளக்கம்'முதலிய ஸ்தலங்களில் விரிவாகக் காணலாம்.

மாம்படி "நசக்ஷுஷாபச்யதி" என்கிற பாத்வஅவஸ்தைகுலைந்து சேதநருடைய மாம்ஸநேத்ராங்களுக்கு விஷயமாம்படி, ஸர்வஸுலபனாய்க்கொண்டு "ஸுலபோஹ்யுத்தரோத்தா:" என்கிறபடியே ஆச்ரித அநாச்ரிதவிபாகமன்றிக்கே ஸுலபனாய்க்கொண்டு; கோயில்களிலும் "பௌமஷிகேதநேஷ்வபி குடீகுஞ்ஜேஷு" என்றபடி ஸ்வயம்வ்யக்த-திவ்ய-ஸைந்தவ-மாநுஷப்ரதிஷ்டைகளான கோவில்களிலேயும், க்ருஹங்களிலும் "கனிவாய் வீட்டின்பம்" என்னும்படி வர்ணாச்ரமாத்யுபாதியின்றிக்கே தன்பக்கல்பக்வமான பழம்போல் இருக்கிற திருவுள்ளங்களையுடையவரான ஜ்ஞாநாதிகருக்கு ஆனந்தாவஹனாய்க்கொண்டு அவர்கள் கிருஹங்களிலேயும், அன்றிக்கே க்ருஹங்களிலும்என்றது-ஆச்ரிதாநாச்ரிதவிபாகமறஎல்லாருடைய க்ருஹங்களிலும் என்றுஞ்சொல்லவுமாம்; தேசகால அவதியின்றிக்கே தேசத்துக்கு அவதியின்றிக்கே, காலத்துக்கு அவதியின்றிக்கே, தேச-கால-கரண-விப்ரக்ருஷ்டதையின்றிக்கே என்னுதல். தேசவிப்ரக்ருஷ்டதை-பரவ்யூஹங்களுக்கும், காலவிப்ரக்ருஷ்டதை அவதாரங்களுக்கும், கரணவிப்ரக்ருஷ்டதை அந்தர்யாமித்வத்துக்கும் உண்டிறே. இந்த மூன்று தோஷமுமின்றிக்கே ஸர்வதேசங்களிலும், ஸர்வகாலங்களிலும், ஸர்வாவஸ்தைகளிலும் என்றபடி; எழுந்தருளியிருக்கும் நிலை எழுந்தருளியிருக்கும் ஸ்திதி. (23)

இப்படி பரஸ்வரூபமான்து பஞ்சப்ரகாரமாக இருக்கும்படியையருளிச்செய்தாராயிற்று.

(அவ) மேல்புருஷார்த்தஸ்வரூபத்தை உபபாதிக்கிறார் — (புருஷார்த்தங்களில்) என்று தொடங்கி.

உச புருஷார்த்தங்களில் தர்மமாவது-ப்ராணிரக்ஷணத்துக்குறப்பாகப்பண்ணும் வ்ருத்திவிசேஷங்கள்.

(வ்யா) அதாவது— புருஷார்த்தங்களில் தர்மமாவது - புருஷார்த்தங்களில் வைத்துக்கொண்டு தர்மம் ஆகிறது. ப்ராணிரக்ஷணத்துக்கு உறப்பாகப்பண்ணும் வ்ருத்திவிசேஷங்கள் தாரபுத்ராதிகள் முதலாக ஆச்ரித ஆநாச்ரித விபாகமன்றிக்கே அன்னவஸ்த்ராதிகளையிட்டு ரக்ஷிக்கைக்கு அங்கமாக(ஹேதுவாக)செய்கிற க்ருஷி-வ்யவஹார-அங்யஸேவாதிப்ரவர்த்தக விசேஷம்.

அவ—அர்த்தமாவது ஏதென்ன அருளிச்செய்கிறார். (அர்த்தமாவது) என்று தொடங்கி.

உரு அர்த்தமாவது— வர்ணாச்ரமாநுரூபமாக நந்தாங்யங்களை ஸங்க்ரஹித்து, தேவதாவிஷயங்களிலும் - பைத்ருகமான கர்மங்களிலும் - ப்ராணிகள் விஷயமாகவும், உத்க்ருஷ்டமான தேச-கால-பாத்ரங்களை அறிந்து தர்மபுத்யா வ்யயிக்கை.

(வ்யா) *அதாவது—* அர்த்தம் ஆவது - *அர்த்தம் ஆகிறது,* வர்ணாச்ரமாநுரூபமாக *தன்னுடைய வர்ணத்திற்கும், ஆச்ரமத்திற்கும் உசிதமாக,* நந்தாங்யங்களை ஸங்க்ரஹித்து *அபிசஸ்த - பதித - சண்டாள - ம்லேச்சாதிகளுடைய த்ரவ்யத்தைப் பரிக்ரஹிக்கையன்றிக்கே, ஸிலோஞ்ச வ்ருத்திகளைப்பண்ணி பரிசுத்தமான அர்த்தத்தையும் தாந்யத்தையும் ஸம்பாதித்து* தேவதாவிஷயங்களிலும் *தேவதாஸமாராதநாதிகள் விஷயமாகவும்,* பைத்ருகமான கர்மங்களிலும் *பித்ருஸந்தர்ப்பமாய் வருகிற க்ரியைகள் விஷயமாகவும்,* ப்ராணிகள் விஷயமாகவும், *ஸர்வப்ராணிகளின் விஷயமாகவும்,* உத்க்ருஷ்டமான தேசகால பாத்ரங்களையறிந்து *உத்க்ருஷ்டமான புண்ய க்ஷேத்ரங்களிலும் உத்க்ருஷ்டமான புண்யகாலங்களாகிற வஸந்தாதிருத்வாதி புண்யகாலங்களிலும், வேதாத்யயநாதிகளையுடையராய் ஸ்வரூபஜ்ஞானநிஷ்டராய் யோக்யராயிருக்குமவர்களே தாநபாத்ரர் என்று தெரிந்து, உத்க்ருஷ்டமான புண்யக்ஷேத்திரங்களையும், உத்க்ருஷ்டமான புண்யகாலங்களாகிற வஸந்தாதிருத்வாதி புண்யகாலங்களையும், வேதாத்யயநாதிகளையுடையராய், ஸ்வரூபஜ்ஞானநிஷ்டராய், யோக்யராயிருக்குமவர்களே தாநயோக்யராகையாலே அவர்களைத் தெரிந்து என்னவமையும்.* தர்மபுத்யா வ்யயிக்கை *நிர்ப்பந்தபுத்தியாலே செலவிடுகை. அன்றிக்கே தர்மம்பண்ணினால் புண்யம் வரும் என்று நினைத்து ஸாதநபுத்தியாலே வ்யயமாக்குவது என்னவுமமையும்.* (25)

(அவ) *காமத்தின் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் — (காமமாவது) என்று தொடங்கி.*

உசு காமமாவது ஐஹலௌகிகமாயும், பாரலௌகிகமாயும் த்விவிதமாயிருக்கும்.

---

உத்க்ருஷ்டமான தேசம்:— *அயோத்தி, மதுரா, மாயா, காஞ்சீ, அவந்திகா, காசீ, துவாரகை முதலியன.* உத்க்ருஷ்டகாலம்:— *மஹோதயம், அமாவாசை, உத்தராயணம், க்ரஹணம் முதலிய காலங்கள்.* தர்மபுத்யா வ்யயிக்கை:— *பலத்தை இச்சியாமல் செலவுசெய்தல்.*

(வ்யா) அதாவது— காமம் ஆவது - காமம் ஆகிறது, ஐஹலௌகிகம் ஆயும் - இஹலோகஸம்பந்தமாகவும், பாரலௌகிகம் ஆயும் - பரலோகஸம்பந்தமாகவும், த்விவிதமாயிருக்கும் - இரண்டு வகையாயிருக்கும். (26)

(அவ) த்விவிதகாமத்திலும் வைத்துக்கொண்டு முந்தற ஐஹலௌகிகத்தை உதாஹரிக்கிறார்— (இஹலோகத்தில் காமமாவது) என்று தொடங்கி.

உஎ இஹலோகத்தில் காமமாவது— பித்ருமாத்ருரத்ன தனதான்ய வஸ்த்ர அன்னபான புத்ர மித்ர களத்ர பசு க்ருஹ க்ஷேத்ர சந்தனகுஸுமதாம்பூலாதி பதார்த்தங்களில் சப்தாதி விஷயாநுபவத்தால் வந்த ஸுகவிசேஷங்கள்.

(வ்யா) அதாவது— இஹலோகத்தில் காமம் ஆவது - இந்த லோகஸம்பந்தமான காமம் ஆகிறது, பித்ருமாத்ரு - ஒழிதகாமனான பிதாவின்பக்கலிலும், ப்ரிய (காமை) காமிநியான மாதாவின்பக்கலிலும், ரத்ன - நவரத்னங்களின்பக்கலிலும். தநதாந்ய - தநத்தின் பக்கலிலும், தாந்யத்தின்பக்கலிலும், வஸ்த்ர - உடுக்கும் வஸ்த்ரத்தின்பக்கலிலும், அந்நபாந - புஜிக்கும் அன்னத்தின்பக்கலிலும், குடிக்கும் ஜலத்தின்பக்கலிலும், புத்ரமித்ர - விநீதரான புத்திரர்பக்கலிலும், இழவுபேறு தம்மதாம்படியான ஸ்நேஹிதர்கள்பக்கலிலும், களத்ர - தாரத்தின்பக்கலிலும், பசு-க்ஷீரார்த்தமாக கோவின் பக்கலிலும், வாஹனங்களுக்குமுபலக்ஷணம்; க்ருஹக்ஷேத்ர - அலங்காரமான க்ருஹங்களின்பக்கலிலும், பலிக்கிற பூமியின் பக்கலிலும், சந்தனகுஸும - பூசுகிற சந்தனத்தின்பக்கலிலும், அலங்காரம் பண்ணுகிற புஷ்பத்தின்பக்கலிலும், தாம்பூலாதிபதார்த்தங்களில் - தின்னும் தாம்பூலம் ஆகியான பதார்த்தங்களின்பக்கலிலும், ஆக 'பித்ரு மாத்ரு' என்று தொடங்கி 'தாம்பூல'பர்யந்தஞ் சொன்ன பதார்த்தங்களில் என்றபடி; இவற்றில் மாதாவும் பிதாவும் நமஸ்காரயோக்யபதார்த்தங்கள்; ரத்ன சந்தன குஸும வஸ்திரங்கள்தானும் பார்யையும் புத்ரரும் மித்ரரும் அலங்காரம் பண்ணும் பதார்த்தங்கள்; தநதாந்ய அன்னபான பசு க்ஷேத்ரதாம்பூலங்கள் ஒழிறசொன்ன எல்லாருமநுபவிக்கிற பதார்த்தங்கள்; க்ருஹம் அவர்களனைவரும் வஸிக்கைக்கிடம், குடும்பிநியானவள் தன்னொருத்திக்கே அநுபவிக்கும் பதார்த்தம் என்றும் சொல்லக்

கடவது; இப்படி அந்தப் பதார்த்தங்களில் சப்தாதி விஷயாநுபவத்தால் வந்த ஸுகவிசேஷங்கள் என்றபடி. கீழ்ச்சொன்ன ரத்நாதிபதார்த்தங்களில் சப்தாதிவிஷயானுபவம் பண்ணும் பதார்த்தத்தையும், அனைவருக்கும் ஸமுதாயமான பதார்த்தத்தையும் பிரித்துச் சொல்லுகையாலே ரத்நாதிகளால் வந்த ஸுகவிசேஷங்களும், சப்தாதிவிஷயானுபவத்தால் வந்த ஸுகவிசேஷங்களும் என்று பேசித்திருக்குமிறே: மாதாபிதாக்கள் பக்கலுண்டான ஸுகவிசேஷம் ஸ்தன்யாதிகளும் வித்யாதிகளுமான கார்யங்களிலேயாயிருக்கும்; ஆக இவற்றால் வந்த ஸுகவிசேஷங்கள் என்றது ஆனந்தத்தைப் பிறப்பிக்கும் ஸுகவிசேஷங்கள் என்றபடி.

(அவ) பாரலௌகிகத்தை உபபாதிக்கிறார்— (பாரலௌகிகத்தில் காமமாவது) என்று தொடங்கி.

உஅ பாரலௌகிகத்தில் காமமாவது— இதில் விலக்ஷணமாய், தேஜோரூபமான ஸ்வர்காதிலோகங்களிலே சென்று, பசிதாஹமோஹசோகஜராமரணாதிகளன்றிக்கே, ஆர்ஜித்த புண்யத்துக்கீடாக அம்ருதபானம் பண்ணி, அப்ஸரஸ்ஸுக்களோடே, ஶப்தாதிவிஷயாநுபவம் பண்ணுகை.

(வ்யா) அதாவது— பாரலௌகிகத்தில் காமம் ஆவது - பரலோகஸம்பந்தமான காமம் ஆகிறது, இதில் விலக்ஷணமாய் - கர்மஸம்பந்தமான இந்த லோகஸுகத்திற் காட்டில் வைலக்ஷண்யத்தை உடைத்தாய், விலக்ஷணமாவது அன்னாதிபதார்த்தபோஜநாதிகளும் மூத்ரபுரீஷாதிகளுமின்றிக்கேயிருப்பதோடு அநிமிஷத்வமும், அம்ருதஸேவையும் முதலான விஶேஷங்களுமுண்டாகையாலே இந்த மனுஷ்யலோகத்தில் காட்டில் வைலக்ஷண்யம் என்றபடி. தேஜோரூபமான ஸ்வர்காதிலோகங்களிலே சென்று - இந்த பூலோகத்திலிருந்து 'ஜ்யோதிஷ்டோமேந, ஸ்வர்க்ககாமோயஜேத' என்கிறபடியே ஜ்யோதிஷ்டோமம், வாஜபேயம், அஶ்வமேதம், பௌண்டரீகம் முதலான யஜ்ஞாதிகளைப்பண்ணி, ஸ்தூலகர்மக்ஷயத்தாலே, ஸ்தூலதேஹவிமோசனமானபின்பு தேஜோமயங்க

அப்ஸரஸ்:— தேவலோகத்திலுள்ள வேஶ்யை (ரம்பை, ஊர்வசி, திலோத்தமை, க்ருதாசி, மேநகை முதலியவர்கள்) இவர்கள் பாற்கடலிற் பிறந்தவரெனவும், காசிபர்க்கு முனி என்னும் பார்யையிடம் பிறந்தவர்களெனவும் புராணங்கள் கூறும்.

ளான ஸ்வர்கம் ஆதியாகவுள்ள ஊர்த்வலோகங்களிலே போய். பசி தாஹ மோஹ சோக ஜராமரணாதிகள் இன்றிக்கே - பசியும், தாஹமும், ஶப்தாதிகளிலுண்டான வ்யாமோஹமும், ததலாபத்தில் சோகமும், அநபிமதமான ஜரையும் மரணமும், ஆதிஶப்தத்தாலே நரகமும் ஆகிற அவஸ்தாஸப்தகமின்றிக்கே, போகம் என்கிறது— ஶரீரஸம்பந்தவ்யாதி வியோகாதிகளுக்கும் உபலக்ஷணம்; ஆர்ஜித்தபுண்யத்துக்கீடாக - பூலோகத்திலிருக்கும்போது யஜ்ஞாதிகளைப்பண்ணியும், அன்னதான அர்த்ததானாதிகளைப்பண்ணியும், ஸம்பாதித்த ஸுக்ருதத்துக்குத்தகுதியாக, அம்ருதபானம் பண்ணி - தேவர்கள் தரும் அம்ருதத்தைக்குடித்து, அப்ஸரஸுக்களோடே ஶப்தாதிவிஷயாநுபவம் பண்ணுகை - அப்ஸரஸ்திரீகளுடனே ஶப்தாதி விஷயங்களின் அநுபவத்தைப் பண்ணுமது.

(அவ) ஆத்மாநுபவத்தை அருளிச்செய்கிறார்— (ஆத்மாநுபவமாவது) என்று தொடங்கி.

உகூ ஆத்மாநுபவமாவது— துக்கநிவ்ருத்திமாத்ரமான கேவலாத்மாநுபவமாத்ரத்தையும் மோக்ஷமென்று சொல்லுவார்கள்.

(வ்யா) அதாவது— ஆத்மாநுபவம் ஆகிறது - ஆத்மாவையே அநுபவிக்கிற அநுபவம் ஆகிறது, துக்கநிவ்ருத்திமாத்திரமான - ஆத்யாத்மிகாதி தாபத்ரயாத்மக ஸம்ஸார துக்கநிவ்ருத்திமாத்திரமாகிற, கேவல ஆத்மாநுபவமாத்ரத்தையும் - கேவலஶப்தத்துக்கு கேவலனுடைய ஆத்மாநுபவமாத்ரத்தையும் என்னுதல்; அன்றிக்கே பகவதநுபவாதிகளின்றிக்கே மிகவும் ஆத்மாநுபவமாத்ரத்தையும் என்றுஞ் சொல்லுதலாகவுமாம்; மோக்ஷம் என்று சொல்லுவர்கள் - இப்படிப்பட்ட ஆத்மாநுபவமாத்ரமாயிருந்துள்ளதனையும் மோக்ஷம் என்று சிலர் சொல்லுகிறார்கள். "யோகிநாமம்ருதம் ஸ்தாநம்" என்கிறபடியே துக்கரூபமான ஸம்ஸாரநிவ்ருத்தியையும், ஸ்தூலஸூக்ஷ்மதேஹநிவ்ருத்தியையும் உடையனாய், விரஜைக்கு அக்கரையிலேயிருக்கிற ஸ்தாநத்தில் ப்ரவேசித்து, தன்னையநுபவிக்கிறது எதுவோ, அதுக்கும் மோக்ஷம் என்று பேராகக் கடவது. கேவல துக்கநிவ்ருத்திமாத்ரமான ஆத்மாநுபவத்தை மோக்ஷம் என்று சொல்லில் ஸம்ஸாரத்திலிருந்தும் ஶரீரவிஶிஷ்டனாயிருந்தும் ஞானத்தாலே துக்கநிவ்ருத்தியைப்பண்ணிக்கொண்டு தன்னையநுபவிக்கிறது மோக்ஷஶப்தத்துக்கு எங்ஙனே சேரும்

*படி? என்று க்ராந்திகாபிப்ராயம்போலே தோற்றுகிறது; ஆகையால் ஸ்தூலஸூக்ஷ்ம தேஹவிமோசனமுடையனாய் விரஜைக்கு அக்கரையிலேயிருக்கிற ஸ்தானத்தில் ப்ரவேசித்து ஆத்மாநுபவத்தைப் பண்ணுவதும் மோக்ஷமென்றபிப்ராயம். கீழ் 'யாவதாத்மபாவி அசரீரியாய்க்கொண்டு திரிவானொருவன்' என்றுமிவரருளிச்செய்கையாலும் 'இங்ஙனே சொல்லுவர்கள்' என்று பரபக்ஷம் அங்கீகரிக்கையாலும் இப்படிச் சொல்லவேண்டியிறேயிருப்பது; இதுவுமொரு பக்ஷமுண்டாகையாலே 'சொல்லுவர்கள்' என்று அருளிச்செய்தது.* (29)

*(அவ) அநந்தரம் பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷத்தை அருளிச்செய்கிறார்— (இனி) என்று தொடங்கி.*

௩௰ இனிபகவதநுபவரூபமானபரமபுருஷார்த்தலக்ஷண மோக்ஷமாவது– ப்ராரப்தகர்மசேஷமாய் அவச்யமநுபாவ்யமான புண்யபாபங்கள் நசித்து, "அஸ்தி ஜாயதே பரிணமதே விவர்த்ததே அபக்ஷீயதே விநச்யதே" என்கிறபடியே ஷட்பாவவிகாராஸ்பதமாய், தாபத்ரயாச்ரயமாய், பகவத்ஸ்வரூபத்தை மறைப்பித்து விபரீதஜ்ஞாநத்தை ஜநிப்பிக்கக்கடவதாய் ஸம்ஸாரவர்த்தகமான ஸ்தூலசரீரத்தையுபேக்ஷயோடே போகட்டு, ஸுஷும்நாநாடியாலே சிரக்கபாலத்தைப் பேதித்துப் புறப்பட்டு ஸூக்ஷ்மசரீரத்தோடே வானேறவழிபெற்று,மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தினன்னடுவுள் அன்னதோரில்லியினூடுபோய், ஸூக்ஷ்மசரீரத்தையும், வாஸநாரேணுவையும், விரஜாஸ்நாநத்தாலே கழித்து, ஸகல தாபங்களும் ஆறும்படி அமாநவகரஸ்பர்சமும் பெற்று, சுத்தஸத்வாத்மகமாய், பஞ்சோபநிஷண்மயமாய், ஜ்ஞாநாநந்தஜநகமாய் பகவதநுபவைகபரிகரமாய் ஒளிகொண்ட சோதியுமாயிருக்கிற அப்ராக்ருத விக்ரஹத்தைப்பெற்று,முடியுடைவானவர்முறைமுறையெதிர்கொள்ள நிரதிசயாநந்தமயமான திருமாமணிமண்டபத்தை ப்ராபித்து, லக்ஷ்மீஸஹிதனாய், பூமிநீளாநாயகனாய் விலக்ஷணவிக்ரஹயுக்தனாய் குழுமித்தேவர்குழாங்கள் கைதொழச்சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருருவான ஸ்ரீவைகுண்டநாதனை நித்யாநுபவம்பண்ணி நித்யகிங்கரஸ்வபாவனாகை.

(வ்யா) அதாவது — இனி - இவற்றையுபபாதித்தன்மேல், பகவத் அநுபவரூபமான - பகவானை யனுபவிக்கிற ரூபமாயிருந் துள்ள, பரமபுருஷார்த்தலக்ஷண மோக்ஷம் ஆவது - புருஷனாலே அர்த்திக்கப்படுமதே லக்ஷணமாக உடையதாய் உத்க்ருஷ்டதமமா யிருக்கிற மோக்ஷம் ஆகிறது, 'பரமபுருஷார்த்தம்' என்றது ஐச்வ ரிய கைவல்யங்களைப்பற்ற. ப்ராரப்தகர்மசேஷமாய் ஜென்மமெடுக் கைக்கு காரணயோக்யமான ப்ராரப்தகர்மத்தினது ஶேஷமாய் அதாவது " பூர்வோத்தராகயோரஶ்லேஷவிநாஶௌ " என்கிற படியேபகவத்ப்ரபதநத்தாலேப்ராரப்தம்என்றுபேரையுடைத்தாய், ஜன்மகாரணமான பூர்வாகங்களும்புத்திபூர்வகமாகவும்அபுத்திபூர்வ கமாகவும் உண்டானஸம்ஜ்ஞையால்வந்தஉத்தராகங்களும் நஶித்து ஶரீரமிருக்கையாலே, அதுக்குத்தக்க ப்ராரப்தகர்மத்தினது ஶேஷ மாயிருக்கும் ஶரீரம் என்கை. அவஶ்யம் அநுபாவ்யமான புண்ய பாபங்கள் நஶித்து 'அவஶ்யமநுபோக்தவ்யம்' என்கிறபடியே அவஶ்யமாக அநுபவிக்கைக்கு யோக்யமாய் பூதகாலஜன்மங் களுக்கும் பவிஷ்யத்காலஜன்மங்களுக்கும் காரணமான புண்ய பாபங்கள் நஶித்து, அன்றிக்கே ப்ராரப்தகர்மஶேஷமான புண்ய பாபங்கள் நஶித்து என்னவுமாம், புண்யபாபரூபகர்மங்கள் நஶிக் கும்போது ஸ்தூலதேஹம் நஶிக்கையாலே இஜ்ஜன்மத்துக்குப் பூர்வகாலத்திலிருக்கிற புண்யபாபங்களுமே நஶித்து, ஸூக்ஷ்ம ரூபமான ஶரீரமிருக்கையாலே, அந்த ஸூக்ஷ்மஶரீரத்துக்குக் காரணமான கர்மவாஸனாரேணுவும், அந்த கர்மவாஸனாகார்ய மான ஸூக்ஷ்மதேஹமும் விரஜாஸ்நாநத்தளவுமிருக்கையாலே தீர்க்கமான புண்யபாபரூபகர்மங்களே நஶிக்கும் என் கை; கர்மநிஷ்டனுக்கு அநுபவத்தாலேயாதல், ப்ராயச்சித்தத்தாலே யாதல், தேவதாந்தர்யாமியான ஈஶ்வராநுக்ரஹத்தாலேயாதல் கர்மம் க்ஷயித்து, ஸ்தூலதேஹம் விமோசனமாய் ஊர்த்வலோக ப்ராப்தியுண்டாம், ப்ரபன்னனுக்கு " இஷீகாதூலம் " என்று சொல்லுகிறபடியே பகவதநுக்ரஹத்தாலே புண்யபாபங்கள் நஶித் துப்போகையாலே இந்த ஶரீரமிருக்குந்தனையும் பூர்வஸம்பந்த மான ப்ராரப்தசேஷத்தையும், பகவத்ஸமாஶ்ரயணாநந்தரம் ப்ரமா தத்தாலேயாதல், புத்தியாலேயாதல், பண்ணுங்கர்மங்களையும், ஸூக்ஷ்மரூபமாக அநுபவித்து ஸ்தூலதேஹநிவ்ருத்தியைப் பண் ணும் ஈஶ்வரன் என்கை, இப்படிகளாக புண்யபாபரூபகர்மங்கள் நசித்து, "அஸ்தி ஜாயதே பரிணமதே விவர்த்ததே அபக்ஷீயதே விநஶ்

யதே'' என்கிறபடியே ஷட்பாவவிகாராஸ்பதமாய் - கர்ப்பத்தில் பிண்டாவஸ்தையுடன் வஸித்திருப்பதும், பத்துமாஸமானவாறே, கர்ப்பத்தில்நின்றும் பிறக்கிறதும், பின் பால்யாவஸ்தையாய் வளர்கிறதும், யௌவநாவஸ்தையாய் பாபபுண்யங்களை ஆர்ஜிக்கிறதும், வார்தகாவஸ்தையாய் ஜரிக்கிறதும், மரணாவஸ்தையையடைந்து போய் நரகாநுபவம் பண்ணுகிறதுமாகச்சொன்ன விகாரபாவஷட்கத்துக்கும் ஆதாரமாய், தாபத்ரய ஆஶ்ரயமாய் - ஆத்யாத்மிகம் என்றும், ஆதிபௌதிகம் என்றும் ஆதிதைவிகம் என்றும், சொல்லப்பட்ட மூன்று தாபங்களுக்கும் வாஸஸ்தானமாய், ஆத்யாத்மிகம் ஆவது ஶரீரத்தில் நின்றும் வருகிற வ்ரணஜ்வராதிகளால் ஸம்பவிக்கிற துக்கம்; ஆதிபௌதிகம் ஆவது ஸர்ப்ப வ்ருச்சிகாதி பூதங்களால் வருகிற துக்கம். ஆதிதைவிகம் ஆவது அஶந்யாதபாதிகளால் வருகிற துக்கம், அஶநி — இடி ஆதபம் - வெய்யில் இவற்றுக்குத் தங்குமிடமாகி என்றது, பகவத்ஸ்வரூபத்தை மறைப்பித்து "பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்'' என்றபடி பகவானுடைய ஸ்வரூபாதிகளை மறையச்செய்து, இங்கு பகவத்ஸ்வரூபாதிகளின் ஜ்ஞாபகார்த்தமான ஆத்மாவினுடைய ஜ்ஞாநாதிகளையும் ப்ரகாசிப்பியாதே மறையவைத்து என்னவமையும்; விபரீதஜ்ஞாநத்தை ஜநிப்பிக்கக்கடவதாய் ''விபரீதஜ்ஞாநஜநநீம்', என்கிறபடியே விபரீதஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கக்கடவதாய், அதாவது பகவத்ஸ்வரூபாதிகளையும் ஆத்மஸ்வரூபத்தையும், ஆத்மலக்ஷணமான ஜ்ஞாநாதிகளையும் மறையச்செய்வதுமாத்திரமன்றிக்கே, 'அநாத்மந்யாத்மபுத்திர்யா' என்னும்படி அநாத்மாவான தேஹத்தில் ஆத்மபுத்தியையும், இதரவிஷயங்களில் ஶப்தாதிவிஷயப்ராவண்யத்தையும் ஜநிப்பிக்கைமுதலான துர்புத்தியையும் பிறப்பிக்குமது என்றபடி. ஸம்ஸாரவர்த்தகமான ஸ்தூலஶரீரத்தை ஸம்ஸாரத்தை வளரச்செய்வதாகிற ஸ்தூல தேஹத்தை உபேக்ஷயோடே போகட்டு "ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்'' என்னும்படி-தன்னுடைய ஜ்ஞானத்தாலே இந்த ஶரீரம் போகவேணும். பகவத்ப்ராப்தியை சீக்ரமாகப் பெறவேணும் என்று தேஹத்திலே ஜிஹாஸையோடே, உதாஸீன த்ரவ்யத்தைப் பொகட்டுமாப்போலே பொகட்டு, ஸூக்ஷ்மநாடியாலே சிர: கபாலத்தை பேதித்துப்புறப்பட்டு ப்ரஹ்மரந்த்ரத்திலிருக்கிற ஸூக்ஷ்ம நாடியாலே - ஶிரஸ்ஸிலேயிருக்கிற ப்ரஹ்மகபாலத்தை பேதித்துக்கொண்டு வெளிப்பட்டு,

ஸூக்ஷ்மஶரீரத்தோடே வானேற வழிபற்று ஸ்தூலதேஹத்துக்குக் காரணமான ஸூக்ஷ்மஶரீரத்துடனே ஆகாஶத்திலே ஏறுகைக் கான அர்ச்சிராதி மார்க்கத்தை ப்ராபித்து; மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தின்னன்னடுவுள் - அன்னதோரில்லியினூடு போய் ஜ்ஞாநதிதிக்ஷமான ஸஹஸ்ரகிரண விஶிஷ்டனான ஸூர்யமண்டலத்தினுடைய நன்றாய் நடுவினிலிருந்துள்ள அத்விதீயமான சில்லி யின் நடுவினில் “ பித்வா ஸூர்யஸ்ய மண்டலம் ” என்றபடி-பே தித்துப்போய்; திதிக்ஷம்-பொறுமை, யத்வா, “ அன்னதோர் இல் லியினூடுபோய் ” என்கிற வாக்யத்துக்கு ஸூர்யனுக்குக் கீழேயி ருக்கிற அர்ச்சிரபிமாநீ- அஹரபிமாநீ - திநாபிமாநீ-ஶுக்லபக்ஷாபி மாநீ, உத்தராயணாபிமாநீ-ஸம்வத்ஸராபிமானிகளுடையவும் வாயு வினுடையவும், ஸ்தானங்களைக் கடந்து ஸூர்யமண்டலத்துக்கு மேலேயிருக்கிற சந்த்ரமண்டல வருணமண்டலங்களையும், இந்திர னுக்கு ஸ்தானமான ஸ்வர்க்கலோக மஹர்லோக ஜனலோக தபோ லோகங்களையும், சதுர்முகஸ்தானமாகிய ஸத்யலோகத்தையும், அண்டகடாஹத்தையும் கடந்து, “வாரிவஹ்நி அநிலாகாஶை:” என் னும்படி-ஜல அக்னி வாய்வாகாச அஹங்கார மஹத் அவ்யக்த ஆவரண ஸப்தகத்தையும் கடந்து விரஜையளவுஞ் செல்லுமதுக்கு உபலக்ஷணமாகச் சொல்லவுமாம்; ஸூக்ஷ்மஶரீரத்தையும் வாஸ நாரேணுவையும் விரஜாஸ்நாநத்தாலேகழித்து ஸ்தூலதேகத்துக்குக் காரணமான ஸூக்ஷ்மஶரீரத்தையும், ஸ்தூலஸூக்ஷ்ம தேஹகா ரணமான கர்மத்தினுடைய வாஸனையையும்,கர்மத்தினுடையரேணு வையும், ரேணு-தூள், துகள் என்றபடி; “தத்தோயஸ்பர்சமாத் ரேண ” இத்யாதிப்படி விரஜையில் பண்ணும் ஸ்நானத்தாலே கழியச் செய்து, அதாவது போக்கி, ஸகலதாபங்களும் ஆறும்படி அமாநவகரஸ்பர்சம் பெற்று லீலாவிபூதிக்குள்ளேபட்ட ஶ்ரமம் எல்லாந்தணியும்படி, “ அமானவம் ஸமாஸாத்ய ” என்கிறபடியே பகவதவதார விஶேஷமான அமாநவனுடைய கரஸ்பர்ஶத்தையும் பெற்று, ஶுத்தஸத்வாத்மகமாய் “ குணம்மதியம்” என்னும்படி லீலாவிபூதியைப்போலே ஸத்வ ரஜஸ் தமோகுணத்ரயாத்மகமன் றிக்கே கேவல ஶுத்தஸத்வமயமாய்,பஞ்சஉபனிஷத்மயமாய் பர மேஷ்டி ஆதி ஶக்திபஞ்சமயமாய், அதாவது பரமேஷ்டி புமாந் விஶ்வ நிவ்ருத்த ஸர்வ என்னும் ஶக்திபஞ்சமயமாய், ஜ்ஞான் ஆந ந்த ஜனகமாய் “இருள் தருமாஞாலம்” என்றபடி-அஜ்ஞானதிகளை ஜனிப்பிக்கக் கடவதான லீலாவிபூதிகளுக்குள்ளேயிருக்கிற பாஞ்ச

பௌதிகஶரீரம்போலன்றிக்கேபகவத்குணானுபவஜ்ஞானத்தையும் அவ்வனுபவஜந்யஜ்ஞான ஸாத்யமான ஆனந்தத்தையும்ஜநிப்பிக்கக் கடவதாய், பகவதனுபவைகபரிகரமாய் பகவானை அநுபவிக்கைக்கு அத்விதீய ஸாதனமாய்; ஒளிகொண்ட சோதியும் ஆயிருக்கிற அப்ராக்ருத விக்ரஹத்தைப்பெற்று "ஒளிகொண்ட சோதியுமாய்" என்று ஆழ்வாரருளிச்செய்தபடியே, தேஜஸ்ஸை உடைத்தாய்க் கொண்டு ப்ரகாஶத்தை யுடையதான அப்ராக்ருத சரீரத்தைப் பெற்று, முடியுடை வானவர் முறைமுறை யெதிர்கொள்ள கிரீடங்களை யுடையரான நித்யஸூரிகள் வரிசைவரிசையாக எதிர் கொண்டுவர, நிரதிசயாநந்தமயமான திருமாமணிமண்டபத்தைப் ராபித்து ப்ரஹ்ம ருத்ராதிகளுடைய மண்டபாதிகளில் காட்டில் அதிசயத்தையுடைத்தாய்- ஆநந்தமயமாகி- ஸ்ரீமத்தமாய்- விலக்ஷணமான மணிகளாலே கசிதமாயிருந்துள்ள ஆஸ்தானமண்டபத்தைக்கிட்டி, லக்ஷ்மீஸஹிதனாய் "ச்ரீஸஹாய:" என்கிறபடி பெரிய பிராட்டியாரோடே கூடியிருக்குமவனாய், பூமிநீளா நாயகனாய் "ஏவம்பூதபூமிநீளா நாயக:" என்றும் "உபாப்யாம் பூமிநீளாப்யாம்" என்றுஞ்சொல்லுகிறபடியே பார்ஶ்வஸ்தாராயிருக்கிற பூமி நீளைகளாகிற தேவிமார்க்கு நாயகனாய், விலக்ஷண விக்ரஹயுக்தனாய் "நீலதோயதமத்யஸ்தா" என்றும், "நீலமேக நிபச்யாமம்" என்றும், "நீலமுகில்வண்ணன்" என்றுஞ்சொல்லுகிறபடியே- விலக்ஷணமான திவ்ய திருமேனி விஶிஷ்டனாய், குழுமித்தேவர் குழாங்கள் கைதொழ ஸமூஹத்திலிருக்கிற நித்யமுக்தருடைய ஸமூஹங்கள் கைதொழ, சோதிவெள்ளத்தினுள்ளே திவ்ய ஆயுத திவ்ய ஆபரண திவ்யவஸ்த்ர திவ்யமால்ய திவ்ய அங்கராகங்களுடையவும், பிராட்டிமாரோடே யிருக்கையான சேர்த்தியுடையவும் நித்யமுக்தருடைய சேர்த்தியுடையவும், மூர்த்திநதேஜ:ப்ரவாஹத்துக்குள்ளே, எழுவது ஓர் உருவான கீழில் உபபாதித்த தேஜோ விஶேஷங்களில்காட்டில் மேலேயெழுகிறதாய் அதிப்ரகாசமாய் அத்யுந்நதமாய், அத்விதீயமான ஸ்வரூபத்தை உடையவனாய், "உருவான" என்று திருமேனியைச் சொல்லவுமாம்; ஸ்ரீ வைகுண்டநாதனை ஸ்ரீ வைகுண்டத்துக்கு நிர்வாஹகனானவனை, நித்யானுபவம் பண்ணி நித்யமாகவநுபவம் செய்து "நித்யம்" என்றது- யாவதாத்மபாவி என்றபடி; அதாவது"ஆப்ரஹ்மபவநால்லோகா:" என்று பகவான்றனே அருளிச்செய்கையாலே ஸ்வர்காநுபவம் தொடங்கி சதுர்முக ஐச்வர்யமீறாகவுண்டான அநுபவங்களெல்

வாம் இந்த லோகத்தில் பண்ணின ஸுக்ருதகர்மத்துக்கு ஈடான வையாகையாலே அல்ப பலங்களாய், புநர்ஜன்ம ஹேதுக்களாய், அநித்யங்களாயிருக்கையாலே நித்யாநுபவங்ள் என்று சொல்ல வொண்ணாதிறே; கைவல்யாநுபவம்- பகவதநுபவ அபேக்ஷையில் லாமையாலே அத்யல்பமாய், ஸ்வர்காத்யநுபவாபேக்ஷயா நித்ய மாயிருந்தாலும்- காலாத்யயாபதிஷ்டந்யாயேந ஆத்மவஸ்து இருக்குமளவும்- புருஷ அபாவத்தாலே ஸ்திரீயானவள் தன்னு டைய யௌவநாத்யநுபவத்தைத் தானே பண்ணுமாப்போலே பாதா(வாயா)நுபவம் என்று சொல்லப்படும்; பகவதநுபவம்- அவையிரண்டும் போலன்றிக்கே நித்யமாயிருக்கும் என்றபடி; நித்யகிங்கர ஸ்வபாவனைகை "நித்யகிங்கர:" என்றபடி நித்யமா கக்கிங்கரன் என்கிற ஸ்வபாவமுடையவனைகை. அதாவது- யா வதாத்மபாவி என்றபடி. நித்யசப்தத்துக்கு ப்ரதிதினம் என்று அர்த்தம் சொல்லில்- "ந காலஸ்தத்ர வை ப்ரபு:" என்கிறபடியே- காலக்ருத பரிணாமமில்லாத தேசத்துக்கு இந்த பூலோகம்போலே காலக்ருத பரிணாமம் ஸம்பவித்து கர்மலோகம் என்று சொல்லும் படிவருமிறே. ஆகையாலே யாவதாத்மபாவி பகவதநுபவஜநித ப்ரீதிகாரித கைங்கர்யஸ்வபாவன் ஆகுமதுஎன்று தாத்பர்யம்.(30)

இப்படி புருஷார்த்த ஸ்வரூபமானது பஞ்சப்ரகாரமாயிருக் கும்படியை அருளிச்செய்தாராயிற்று.

(அவ) இனி உபாயஸ்வரூபத்தை விவரிக்கிறார் மேல்- (உபா யங்களில் கர்மயோகமாவது) என்று தொடங்கி.

௩௧ உபாயங்களில் கர்மயோகமாவது- யஜ்ஞ தாந தபோ த்யான ஸந்த்யாவந்தன பஞ்சமஹாயஜ்ஞ அக்நிஹோ த்ர தீர்த்தயாத்ரா புண்யக்ஷேத்ரவாஸ க்ருச்ர சாந்த்ராயண புண்யநதீஸ்நாந வ்ரத சாதுர்மாஸ்ய பலமூலாசந சாஸ்த்ராப் யாஸ ஸமாராதந ஜபதர்ப்பணாதி கர்மாநுஷ்டாநத்தால் வந்த காயசோஷணத்தாலே பாபநாசம்பிறந்து, அத்தாலே இந்திரி யாதித்வாரா ப்ரஸரிக்கிற தர்மபூதஜ்ஞாநத்துக்கு சப்தாதிகள் விஷயமல்லாமையாலே விஷயஸாபேக்ஷை பிறந்து யமநிய மாஸந ப்ராணாயாம ப்ரத்யாஹார த்யான தாரணாஸமாதிரூ பமான அஷ்டாங்க யோகக்ரமத்தாலே யோகாப்யாஸகாலத் தளவும் ஜ்ஞானத்துக்கு ஆத்மாவை விஷயமாக்குகை.

(வ்யா.) அதாவது— உபாயங்களில் கர்மயோகமாவது உபாயங்களில் வைத்துக்கொண்டு கர்மயோகம் ஆகிறது; யஜ்ஞ "வஸந்தே வஸந்தே" என்கிறபடியே- யஜ்ஞங்களாலும், தாந அன்ன கோ பூ ஹிரண்யாதி தானங்களாலும், தப: "தபோத்யான ஸமாதிபி." என்றும் "வெங்கானமும் கல்லும் கடலுமெல்லாம் கொதிக்க" என்றும் சொல்லுகிறபடியே, சரீரத்தைப்பொறுத்து ஸஹஸ்ர ஸம்வத்ஸர ஸங்க்யையாகத்தபஸ் பண்ணுவதாலும் த்யாந "யத்ஹி மநஸா த்யாயதி" என்கிறபடியே மாநஸத்யாநத்தாலும், ஸந்த்யாவந்தன காலாதிகமானவாறே ப்ராயச்சித்தம் பண்ணவேண்டியும், அகாலே ப்ரத்யவாயமும் வருமிறே. அவை

---

யஜ்ஞ - ஜோதிஷ்டோமம் முதலிய யாகங்கள், தானம் கோதானம், பூதானம், திலதானம், ஹிரண்யதானம் க்ருததானம் முதலியவை. தபம் - வெய்யில்காலத்தில் பஞ்சாக்னிமத்தியிலும், மழைகாலத்தில் கழுத்தளவு ஜலத்திலும், பனிகாலத்தில் மலையின் உச்சியிலிருந்தும் தவம் செய்தல். பசி தாஹம் அடக்கி பகவானைத்தியானம்செய்கிறது தியானம். இதுஐந்து விதமாயிருக்கும்.

1. பகவானைத்திவ்யமங்கள விக்ரஹத்தோடு திவ்ய ஆயுதங்களோடு தியானித்தல்.

2. திவ்யஆபரணத்தோடுமாத்திரமிருக்குமிருப்பைத் தியானித்தல்.

3. பகவானுடைய ஒவ்வொரு அவயவங்களையும் நினைக்கிறது.

4. வேறுபட்டிருக்கிற அவயவத்தைவிட்டு ப்ரதான அங்கத்தை நினைக்கிறது.

5. அவயவசமுதாயத்தைத்தியானித்தல்.

தியானமாவது ஒன்றை வேறு எண்ணம் கலப்பில்லாமல் நினைத்துக் கொண்டிருக்கிறது. இதுதான் ஸமாதி என்பது. தியானத்திற்கும் ஸமாதிக்கும் வித்யாசம்- பகவானுடைய திருமேனியையும் சேர்த்து நினைத்தல் தியானம், ஸமாதியென்பது பகவானுடைய திருமேனியைவிட்டு ஸ்வரூபத்தைமாத்திரம் நினைத்துக்கொண்டிருப்பது.

ஸந்தியாவந்தனம்:— மூன்று காலத்திலும் சூரியமண்டலமத்தியிலிருக்கும் ஸ்ரீமந்நாராயணனைத்தியானித்து அர்க்யபாத்யஆசமனம் ஸமர்ப்பிக்கை, மூன்றுகாலங்களில் செய்கிற சந்தியாவந்தநங்களிலும் சூர்யனுக்கபிமுகமாக நின்று இரண்டு கைகளும் சேர ஜலத்தை எடுத்து காயத்ரியினால் அபிமந்திரித்துவிடுகிற ஜலம். இந்த அர்க்யப்ரதானத்துக்கு ப்ரயோஜனம் - மந்தேஹரென்கிற அஸுரர்கள் ப்ரஹ்மாவினது வரத்தினால் பலத்தையடைந்து சூர்யனுடைய தேரைப்போகவொட்டாமல் தடுத்து எப்போதும் யுத்தம் பண்ணுகிறார்கள். அர்க்யப்ரதானம் பண்ணினால்

வாராமைக்காகக் காலத்ரயத்திலும், தப்பாதபடி. ஸந்த்யாவந்தன த்ரயமும் பண்ணுவதனுலும், பஞ்சமஹாயஜ்ஞ தேவயஜ்ஞ- பித்ரு யஜ்ஞ- மனுஷ்ய யஜ்ஞ- பூதயஜ்ஞ- ப்ரஹ்மயஜ்ஞங்களாகிற பஞ்ச மஹாயஜ்ஞங்களைப் பண்ணுகையாலும், அக்நிஹோத்ர "யாவஜ் ஜீவம் அக்நிஹோத்ரம் ஜுஹுயாத்" என்றபடி- கார்ஹபத்யம் ஆஹவநீயம்- தக்ஷிணுக்நிஆகிற அக்நித்ரயமும், ஸாயம்ப்ராத:கா லங்களில் பண்ணும் ஆராதனமும் ஆகிறவிவற்றுலும், அதவா அக்நிஹோத்ரம் என்றது ஸாயமௌபாஸனமும், ப்ராதரௌபா ஸனமும், என்றுஞ்சொல்லவுமாம்; தீர்த்தயாத்ராபுண்யதீர்த்தயாத் ரைகளாலும், புண்யக்ஷேத்ரவாஸ ஜ்ஞானஸாதனமாகவும், முக்தி ஸாதனமாகவும் பண்ணும் புண்யக்ஷேத்ரவாஸத்தாலும், 'தேசோ

---

இந்த ஜலம் வஜ்ரஸமமாய்க்கொண்டு அவ்வஸுரர்களை மந்தேஹாருணம் என்கிற த்வீபத்தில் எறிந்துவிடுகிறது என்றும், அந்த ஜலத்தினுல் சூர்ய னுடைய தேஜஸ்ஸு விருத்தியடைந்து அஸுரர்கள் தோற்றுப்போகிருர் களென்றும் சொல்லப்படுகிறது.

பஞ்சமஹாயஜ்ஞம்:—

1. பூதயஜ்ஞம்— காக்கை முதலான ஜந்துக்களுக்கு அன்னம் போடுகிறது.

2. தேவயஜ்ஞம்— தேவதைகளை உத்தேசித்து அக்னியிடத்தில் விசு அல்லது சமித்துக்களைக்கொண்டு ஹோமம் செய்கிறது.

3. பித்ருயஜ்ஞம்—பித்ருதேவதைகளை உத்தேசித்து ஸ்வதா என்று அன்னத்தையாவது ஜலத்தையாவது விடுகிறது.

4. மநுஷ்யயஜ்ஞம்— ஸத்புருஷர்களுக்கு அர்க்யபாத்ய ஆசமனம் ஸமர்ப்பித்து ஆஸனம் கொடுத்து ஸத்காரம் செய்து ப்ரசாதம் செய்து வைக்கிறது.

5. ப்ரஹ்மயஜ்ஞம்— தன் குலத்திற்கு ஏற்பட்ட வேதசாகைகளில் ஒருருவாவது அத்தியயனம் செய்கிறது. இல்லாவிடில் தன க்ருஹத்து தேவதைக்குத் திருவாராதனம் செய்கிறது.

அக்நிஹோத்திரம்:—நித்திய ஹோத்ரம்-இது சாதாரண அக்நிஹோ த்ரம். தார்யா அக்னிஹோத்ரம் இரண்டாவது. சாதாரண அக்நிஹோத்ரம் பிரதிதினம் செய்கிற ஔபாசனுக்நி; தார்யாக்நி—தன்னுடைய கல்யாண காலத்தில் ஔபாஸனுக்நியின் உஷ்ணத்தை ஆற்றும்பொருட்டு பிரதிதினம் செய்துவந்து சரீரமுடிவில் ஷ்டி அக்னியைக்கொண்டு தஹந ஸம்ஸ்காரம் செய்கிறது. தீர்த்தயாத்திரை:— கங்கை, யமுனை, சரஸ்வதீ, நருமதை, சிந்து, காவேரி, கோதாவரி, கோமதி, துங்கபத்திரா, முதலியபுண்ய தீர்த்தயாத்திரை.

யம் ஸர்வகாமதுக்'' என்னக்கடவதிறே! க்ருச்ர புண்யக்ஷேத்ரங்களிலேயாதல் புண்யநதீ தீரங்களிலேயாதல் பாபநாசநார்த்தமாகப் பண்ணும் ப்ராயச்சித்தரூபமான (ஸுவர்ணக்ருச்ரதான க்ருச்ரரூப கர்மாநுஷ்டானத்தாலும்,) சாந்த்ராயண ''புக்த்வா சாந்த்ராயணம் ''சரேத்'' இத்யாதிப்படியாய் அநுஷ்டிக்கும் சாந்த்ராயணவ்ரதத்தாலும். புண்யநதீஸ்நாந பாபமானது நசிக்கைக்காகவும் புண்யமானது வருகைக்காகவும், பூலோகத்திலுள்ள கங்காதி புண்ய நதிகளில் பண்ணும் ஸ்நாநத்தாலும், வ்ரத அனந்தவ்ரத லக்ஷ்மீவ்ரதாதிதீக்ஷைகளாலும், சாதுர்மாஸ்ய ஆஷாடசுக்த ஏகாதசி தொடங்கிக் கார்த்திக சுத்தஏகாதசி பர்யந்தமாக உண்டான நாலுமாஸத்துக்கும் ''விஷ்ணுஸ்வப்நம்'' என்றுபேரார். அந்த சாதுர்மாஸ்யத்தில் எங்கும் ஸஞ்சரியாமல் ஓரிடத்தில் நிற்கவேணுமென்கிற தீக்ஷையாலும், இது-ஸன்யாஸிகளுக்கும் கர்மநிஷ்டகிருஹஸ்தருக்கும் ஒக்குமிறே! பலமூலாசந அரண்யபலங்களையும் *ஸூரணமுதலாக உண்டான கந்தமூலாதிகளையும் ஆஹாரம்பண்ணிக்கொண்டிருக்கைாலும், ஶாஸ்த்ராப்யாஸ ஶாஸ்த்ரங்களினுடைய அப்யாஸத்தாலும், ஸமாராதன தேவபித்ரு ப்ராம்மண

க்ருச்ரம்;— இதுபிராயச்சித்த கர்மங்களில் ஒன்று. தப்தக்ருச்ரம், சீதக்ருச்ரம்,ப்ராஜாபத்யக்ருச்சரம்,சந்தபனக்ருச்ரம், அர்த்தக்ருச்ரம்,க்ருச்ராதிக்ருச்சரம் என்று அனேக விதமாயிருக்கும். க்ருச்ரம் - கால் வராகன், 10 20.30, க்ருச்சரம் செய்தவர்களுக்குக் கொடுத்து கொஞ்சம் பாபத்தைப் போக்கிக் கொள்ளுகிறது. இல்லாவிடில் பதினாயிரம் காயத்திரி, 200 ப்ராணாயாமம், 1000 திலஹோமம், வேதாத்யயனம் செய்கிறது.

சாந்த்ராயணம்:— இது பிராயச்சித்தகர்மம்: யவமத்யசாந்த்ராயணம் பிபீலிகா மத்யசாந்த்ராயணம், ருஷி சாந்த்ராயணம், சிசு சாந்த்ராயணம் யதி சாந்த்ராயணம், என்று பலவிதம்: சந்திரன் கலை குறையும்போது குறைத்தும். விருத்தியடையும்போது அதிகப்படுத்திசாப்பிடுகிறது. கவளம் 400-குண்டுமணியிடை, சாந்த்ராயணம் என்பது 30-நாளில் முடிக்கக் கூடிய விரதம். ஒருவன் ஆஹாரத்தை பதினறுபாகமாகபண்ணி கிருஷ்ணபக்ஷம் பிரதமை முதல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பாகத்தைக் குறைத்துக் கொண்டுவந்து சுக்லபக்ஷம் முதல் ஆஹாரத்தை பதினைந்துபாகமாகப் பண்ணி ஒவ்வவாரு பங்காக ஏற்றிக்கொண்டு வருகிறது. பூர்ணிமையன்று பூர்ணமான ஆஹாரம்.

விரதம்:—உபவாஸம்,400 விதமுண்டு. தர்பணம்—ஜலம் விடுகிறது.

* ஸூரணம் - கருணைக்கிழங்கு.

ஸமாராதனங்களாலும், அதவா- ஶாஸ்த்ராப்யாஸ ஸமாராதன என்கையாலே ஶாஸ்த்ராப்யாஸம் பண்ணி க்ரந்தஶாந்த்யர்த்தம் பண்ணுகிற ஸமாராதனத்தாலும் என்னவுமாம்; ஜப ஶதஸஹஸ்ராதி ஸங்க்யையாகப்பண்ணும் ஜபத்தாலும், தர்ப்பணாதிகர்மாநுஷ்டானத்தால் வந்த காயசோஷணத்தாலே தேவபித்ரு ஆதிகளுடைய தர்ப்பணாதிகளான கர்மங்களின் அனுஷ்டானத்தாலும் உண்டான ஶரீரஶோஷணத்தாலே, பாபநாசம் பிறந்து பாபங்களுக்கு க்ஷயம் பிறந்து, அத்தாலே இந்த்ரியத்வாரா ப்ரஸரிக்கிற தர்மபூத ஜ்ஞானத்துக்கு அத்தாலே என்றது- அந்தபாபக்ஷயத்தாலே என்னுதல், அன்றிக்கே, காயஶோஷணத்தாலே என்னுதல், “மநஇந்த்ரியேண” என்னும்படி அந்தரிந்த்ரியமாகிற மநஸ்ஸை ஸஹாயமாகக்கொண்டு ப்ரவர்த்திக்கிற இந்த்ரியத்வாரா ஸுகதுக்கங்களை க்ரஹிக்குமதாய், ஆத்மாவுக்கு தர்மபூதஜ்ஞாநத்துக்கு, ஶப்தாதிகள் விஷயம் அல்லாமையாலே இதரவிஷயங்களான ஶப்தாதிகள் விஷயங்களல்லாததினாலே, விஷயஸாபேக்ஷை பிறந்து பகவத்விஷயத்தில் அபேக்ஷை ஜநித்து; யம யமம் ஆவது பாஹ்ய இந்த்ரியநிக்ரஹம், நியம நியமம் ஆவது- அந்தரிந்த்ரிய நிக்ரஹம், பாஹ்யபரிசுத்தி என்றும், ஆந்தரபரிசுத்தி என்றும் சொல்லுவார்கள்; ஆஸநம் ஆஸநம் ஆகிறது- கூர்மாஸநம் குக்குடாஸநம்- பத்மாஸநம் முதலியவை ப்ராணாயாம-ப்ராணாயாமம் ஆவது- ஒரு யாமத்தளவும் பஞ்சவாயுக்களை நவரந்த்ரங்களால் சரீரத்தில்நின்றும் புறப்படாதபடி பிடித்துக்கொண்டிருக்கை, ப்ரத்யாஹார ப்ரத்யாஹாரம் ஆவது- பஞ்சவாயுக்களை ஸாத்மிக்க ஸாத்மிக்க வெளியில் புறப்படவிடுகை, அதவா- ப்ரத்யாஹாரம் என்பதற்கு காயசோஷணத்துக்குத்தக்க ஆஹாரத்தையும் சொல்லவுமாம்; ப்ரகரணத்துக்குச்சேருமது முதலில் சொன்னதாகும்; த்யான த்யாநம் ஆவது- அவிச்சிந்நஸ்மரணம், தாரண தாரணம்

யமம்:— பாஹ்ய இந்திரிய நிக்ரஹம் ஸத்தியம் சொல்லுதல், திருடாமலிருத்தல், நிஷித்த த்ரவ்யங்களை வாங்காமலிருத்தல் முதலியன. நியமம்— அந்தரிந்தரிய நிக்ரஹம்; குலத்திற்கு ஏற்பட்ட வேதசாகைகளை அத்தியயனம் செய்து சுசியாயிருத்தல், அடைந்ததைக்கொண்டு திருப்தியடைதல், உபவாசமிருத்தல், பகவானிடத்தில் ப்ராவண்யத்தோடிருத்தல். ஆஸநம்— பத்மாசனம், ஸிம்மாசனம், கூர்மாசனம், குக்கட (கோழி) ஆசனம், மயூர ஆசனம், ஸ்வஸ்தி ஆஸநம், வீராசனம், முதலியவை.

தாரணம்:— தியானத்தினுடைய முதிர்ந்த அவஸ்தை.

ஆவது- மலதாரணம்; அன்றிக்கே ஶக்திவிஶேஷத்தைச் சொல்லவு மாம், அதாவது- ஹ்ருதயத்தில் பகவத்விக்ரஹ சிந்தை நிறுத்தலு மாகும். ஸமாதி ஸமாதி ஆகிறது, ஈஶ்வரன் திருவடிகளிலே மநஸ்ஸை யிடைவிடாதே பொருந்தியிருக்க வைத்தல், ரூபமான அஷ்டாங்கயோகக்ரமத்தாலே இப்படியான ஆகாரங்களை யுடையவையான அஷ்டவித அங்கங்களோடு கூடியிருக்கிற யோகத்தின் க்ரமத்தாலே; ப்ரகரணத்துக்குச் சேர்ந்திருக்குமர்த்தம்- கர்மயோகத்துக்கு இந்த அஷ்டவிதங்களை அங்கங்களாகச் சொல்லுமதும், தர்மபூத ஜ்ஞாநத்துக்கும் அப்படியே அங்கங்களாக விருக்கும் என்று சொல்லுமதும் தோற்றியிருக்குமிறே! இப்படி அஷ்டாங்க யோகக்ரமத்தாலே, யோக அப்யாஸ காலத்தளவும் இந்த அஷ்டவிதமான யோகங்களை அப்யாஸம் பண்ணுகிற காலபர்யந்தமும், ஜ்ஞாநத்துக்கு ஆத்மாவை விஷயமாக்குகை. ஆத்மாவை தர்மபூத ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்குவது. (31)

(அவ) ஏவம்பூதமான கர்மயோகத்தினுடைய ப்ரயோஜனத்தையருளிச்செய்கிறார்-(இதுதான்) என்றுதொடங்கி.

௩௨ இதுதான் ஜ்ஞானயோகத்துக்கு ஸஹகாரியாய், ஐஶ்வர்யத்துக்கு ப்ரதாநஸாதனமுமாயிருக்கும்.

வ்யா- அதாவது- இதுதான் இந்தகர்மயோகந்தான், ஜ்ஞாந யோகத்துக்கு ஸஹகாரியாய் ஜ்ஞாநயோகத்துக்கு ஸஹகரிக்குமதாயும் ஐஶ்வர்யத்துக்குமுக்யஸாதனமுமாயிருக்கும். ஸ்வர்காதிஐஶ்வர்யத்துக்கு முக்யஸாதனமுமாகியிருக்கும். (32)

இந்த கர்மயோகந்தான்- ஜ்ஞானயோகத்துக்கு ஸஹகாரியாயிருக்குமது எங்ஙனே? என்னில், "கர்மபக்த்யந்விதம் ஜ்ஞானம்" என்கிறபடியே- கர்மயோக பக்தியோகங்களிரண்டையும் அங்கமாகக்கொண்டு ஜ்ஞாநயோகந்தான் அங்கியாயிருக்கிற தசையிலே, கர்ம யோகந்தான்- ஸஹகாரிரூபத்தாலே அங்கமாயிருக்கும்; "ஜ்ஞானபக்த்யந்விதம் கர்ம" என்கிறபடி-கர்மயோகந்தான்-அங்கியாயிருக்கும்போது ஜ்ஞானபக்தி யோகங்களிரண்டையும், அங்கமாகக்கொண்டிருக்கும்; "கர்மஜ்ஞாநாந்விதா பக்தி:" என்கிறபடி கர்மஜ்ஞான யோகங்களிரண்டையும் அங்கமாகக்கொண்டு பக்தி யோகந்தான் அங்கியாயிருக்கும்; ஜ்ஞானயோகத்துக்கு கர்ம

யோகம் ஸஹகாரிரூபத்தாலே அங்கமாயிருக்குமிருப்பு-கடத்துக்கு தண்டசக்ராதிகள் அங்கமாய், அவை ஸ்வயம் ஸாதனமாயிருக்குமாப்போலே, ஐஶ்வர்யத்துக்கு ப்ரதான ஸாதனமாயிருக்கும்படி எங்ஙனே? என்னில், ஜ்யோதிஷ்டோமாதி முகத்தாலே ஸ்வர்காதி ஐஶ்வர்யத்துக்கு ப்ரதான ஸாதனமாயிருக்கும் என்கை. ப்ரதான ஸாதனம் என்றது- ஸ்வர்க்காதி புருஷார்த்தத்தைக்குறித்து ஜ்ஞானமும்,பக்தியும்,ஆசார்யநமஸ்காரமும், அன்னதானமும், ப்ராஹ்மணநுக்ரஹமும் ஆகியான அநேக ஆந்தரஸாதனங்களிருக்கச் செய்தேயும் கர்மத்தின்மேலே த்ருஷ்டியை வைத்துக்கொண்டு ஶ்ருதி சொல்லுகையாலே ஐச்வர்யத்துக்கு ப்ரதானஸாதனம் என்னுதல். மோக்ஷத்துக்கு ஸாதநமாயிருக்கிற கர்மத்தை ஐஶ்வர்யத்துக்கு ஸாதனம் என்று சொல்லக்கூடுமோ? என்னில், கர்மயோகம் அங்கியாய், அதற்குஅங்கமாக ப்ரபத்தியைப் பண்ணுகையாலே, அப்படி ப்ரபதநம்பண்ணின அதிகாரிக்கு ஐஶ்வர்யாதிகள் பகவத்ப்ராப்தி விரோதங்கள் என்றுவிடுகையாலே தத்ப்ராப்திநிமித்தமாக பலாதித்யாகபூர்வமாய், பகவதாராதனரூபமாய் மோக்ஷபாயமான கர்மத்துக்கு ஐஶ்வர்யஸாதனத்வம் என்று சொன்னது. கர்மாராத்யனான ஈஶ்வரன் ஸகலபலங்களையும் கொடுக்குமவனாகையாலே அருளிச்செய்தாரித்தனை. ஜ்ஞானபக்திகளுக்கு விஷயம் ஈஶ்வரன் என்றிருக்குமிருப்பு ப்ரதானமாய்,புருஷார்த்தவிஷயத்திலும் ஆசார்யவிஷயத்திலும் ஜ்ஞாநமும் பக்தியும் ஸாதனமாயிருக்குமிருப்புப் போலே இந்த கர்மயோகமும்- ஐச்வர்யத்துக்கும் மற்றுமுள்ள ஸாதனங்களில் வைத்துக்கொண்டு ப்ரதானமாயிருக்கும் என்கை. "விஷயஸாபேக்ஷை பிறந்து" என்றவிடத்தில் பகவத்விஷயஸாபேக்ஷை என்றுசொன்னால் "ஜ்ஞானத்துக்கு ஆத்மாவை விஷயமாக்குகை" என்ற மேல்வாக்யத்தோடே சேருமோஎன்னில்; அதுக்குமேல், "ஜ்ஞானத்துக்கு ஹ்ருதயகமலம் ஆதித்யமண்டலம் தொடக்கமான ஸ்தலவிஶேஷங்களில் எழுந்தருளி இருக்கிற ஸர்வேஶ்வரனை விஷயமாக்கி" என்றருளிச்செய்கையாலே சேரும்; மோக்ஷோபாயமாகையாலே ப்ரதாநயோஜனை ஈச்வரனே விஷயம்; "ஜ்ஞாநத்துக்கு ஆத்மாவை விஷயமாக்குகை" என்று சொன்னது கர்மத்தைப்பண்ணுபவன் சேதநனாகையாலே- முதல்ஸ்வஸ்வரூபத்தைப்பராமர்ஶித்திறேமேல்போவது அதுக்காக முதலில் "யோகஅப்யாஸ காலத்தளவும்" என்று காலநியமத்தைப்

பண்ணியருளிச்செய்கையாலே விரோதமில்லை; மேல் "யோகஜந்ய ஜ்ஞானத்துக்கு ஹ்ருதயகமலம் ஆதித்யமண்டலந் தொடக்கமான ஸ்தல விஶேஷங்களில் எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனை விஷயமாக்கி" என்று சொல்லுகையாலே, ஜ்ஞாநத்துக்கு விஷயம் ஈஶ்வரனே என்பது நிச்சயமாய்த்து; கர்மஜ்ஞானபக்திகளை ஸாதனங்களாகப்பண்ணுமவராகும் உபாஸகருக்கு ஸாத்யம் பகவதநுபவமானாலும் தேவதாந்தர்யாமியான ஈஶ்வரனே பலப்ரதாதா ஆகையாலும், கேவல ஐச்வர்யாதிகளுக்கும் பலப்ரதாதா அவனே ஆகையாலுஞ்சேரும்; கேவலன் ஸாதனதசையிலே ஈஶ்வரனே பலப்ரதாதாவாகவும், அவனுடைய குணாநுபவங்களே புருஷார்த்தமாகவும் அறிந்திருக்கச்செய்தேயும்- ஸ்வ ஆத்மாநுபவத்தில் கண் வைத்தவனாகையாலே ஈஶ்வரனை ஸாதனமாகவும் ஸ்வாத்மாநுபவத்தைப் பலமாகவும் அநுஸந்தித்து, ஜ்ஞானத்துக்கு ஆத்மாவை விஷயமாக்கியிருக்குமதுண்டிறே; ஐச்வர்யார்த்தி உபாதிவிஶிஷ்டனாயிருக்குந்தசையிலே ஶாஸ்த்ரஜந்ய ஜ்ஞானத்தாலே தேஹாத்யதிரிக்தனாயிருக்குமவன் ஓராத்மாவுண்டு, அவனுக்கு ஸ்வர்க்காத்யாமுஷ்மிகபலம் புருஷார்த்தம், ஜ்யோதிஷ்டோமாதிகள் ஸாதனங்களென்றெண்ணி, அவ்வோமுகத்தாலே ஜ்ஞாநத்துக்கு ஆத்மாவை விஷயமாக்குமதொன்றுண்டே; கேவலன்- உபாதிவிஶிஷ்டனாயிருக்குந்தசையிலே ஈஶ்வரனுக்கும் ஆத்மாவுக்கும் அபேதம் சொல்லுமதும்,வேதார்த்தம் இது என்று பரப்ரஹ்மத்துக்குவைலக்ஷண்யத்தையும், ஜீவஸமஷ்டியெல்லாம் அந்த பரப்ரஹ்மம் என்பதையும் நிச்சயித்து, உபாதிவிநிர்முக்த தசையிலே ஸர்வஸ்மாத்பரனோடு ஏகீபவித்து நிற்கும் என்று சொல்லுமதொன்றுண்டிறே! கேவலனைப்போலே உபாஸகனுக்கு- ஸ்வாத்மாநுபவம் புருஷார்த்தம்- ஈச்வரன் ஸாதனம் என்று நினைக்கையும், ஜ்ஞாநத்துக்கு ஆத்மாவை விஷயமாக தர்சிக்குமதுமில்லையே! பகவத்ப்ராப்தி காமரான ப்ரபத்திநிஷ்டருக்கும்- ஈசுவரனுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலும் ஆசார்ய உபதேசத்தாலும் விசேஷஜ்ஞாநம் பிறந்து ஈசுவரன் ஶேஷி- ஜீவாத்மஸமஷ்டி அவனுக்கு சேஷம்- ப்ராப்யப்ராபகங்களிரண்டும் அவனே என்றிருக்கையும், தங்களுடைய தர்மபூதஜ்ஞாநத்துக்கு ஓரவஸ்தாவிசேஷம் பிறந்து, ஐச்வர்யகைவல்யார்த்திகளைப்போலே ஐச்வர்யமும்- ஆத்மாநுபவமும் புருஷார்த்தமன்றிக்கே ஈச்வரனுடைய குணாநுபவகைங்கர்யங்களே புருஷார்த்தம்

என்று நினைத்திருக்கும்படிதான்றுண்டே! உபாஸகனுக்கும் ப்ரபத்திநிஷ்டனுக்கும் ஸாதநஸாத்யங்களில் பேதமுண்டிறே! உபாஸகனுக்கு- ஸாதனம் பக்தி, ஸாத்யம்பகவதநுபவம்; தர்மபூதஜ்ஞானத்தாலே ஈச்வரனுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகளைத் தர்சிக்கும்போது சேதந அசேதநங்களிரண்டும் அவனுக்கு சேஷமாயிருக்கும் என்றே தர்சிப்படிதான்றுண்டே! நம்முடைய தர்சனஸ்தருக்கிருக்கும்படி; ஈச்வரசேஷமாக ஆத்மவஸ்துவை "உயிரினால் குறைவிலம்" என்றும், "இறைப்பொழுதுமெண்ணோமே" என்றும், என்று தொடங்கி- ஆத்மாநுபவம் ஆவது- ஸ்வதந்த்ரம் என்கிறநினைவு, என்றுமுளவாக த்யாஜ்யமாக அநுஸந்தித்தார்களிறே! ஆழ்வார்களுடைய தர்மபூத ஜ்ஞானத்துக்கு விஷயம்- ஈச்வரனுடையதர்சனமும், ஸம்ச்லேஷமும், புநர்விச்லேஷாஸஹிஷ்ணுத்வமுமிறே! ஆழ்வார்களுடைய திருவுள்ளத்தைப் பின்செல்லும் ஆசார்யர்களும் அப்படியே. "ந தேஹம்" என்றும், "கதாநுஸாக்ஷாத்கரவாணி" என்றும், "மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதிகதா" என்றும் சொல்லுகிறபடியே ஒருவானுஸந்தித்தது எல்லாருக்கும் ஒக்குமிறே! கர்மாராத்யனான ஈச்வரனே ஸகல பலங்களையுங் கொடுக்குமவனாகையாலே அருளிச்செய்தாரித்தனை; ஜ்ஞானபக்திகளுக்கு விஷயம் ஈசுவரன் என்றிருக்கிற விருப்பு ப்ரதாநமாய், புருஷார்த்த விஷயத்திலும் ஆசார்யவிஷயத்திலும் ஜ்ஞானமும் பக்தியும் ஸாதனமாயிருக்குமிருப்புப்போலே இந்த கர்மயோகமும் ஐசுவர்யத்துக்கு மற்றுமுள்ள ஸாதனங்களில் வைத்துக்கொண்டு ப்ரதானமாயிருக்கும்.

(அவ) ஜ்ஞானயோகத்தை விவரிக்கிறார். (ஜ்ஞானயோகமாவது) என்று தொடங்கி.

௯௫. ஜ்ஞானயோகமாவது இப்படி யோகஜன்மயான ஜ்ஞானத்துக்கு ஹ்ருதயகமலம் ஆதித்யமண்டலந்தொடக்கமான ஸ்தல விசேஷங்களிலெழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரனை விஷயமாக்கி, அவ்விஷயம்தன்னை சங்கசக்ரகதாதரமாய் பீதாம்பரயுக்தமாய். கிரீடாதி நூபுராந்த திவ்ய பூஷணாலங்க்ருதமாய், லக்ஷ்மீஸஹிதமாகவுமநுபவித்து, யோகாப்யாஸக்ரமத்தாலே அநுபவகாலத்தைப்பெருக்கி அநவரத பாவநாரூபமாக்குகை.

(வ்யா) அதாவது ஜ்ஞானயோகமாவது ஜ்ஞானயோக மாகிறது. இப்படி யோகஜந்ய ஜ்ஞாநத்துக்கு கீழ்சொன்ன ப்ரகாரத்திலே கர்மயோகத்தாலே ஜநிக்குமதாகிற, ஜ்ஞானத்துக்கு ஹ்ருதய கமலம் ஆதித்ய மண்டலம் தொடக்கமான ஸ்தலவிசேஷங்களில் ஹ்ருதய புண்டரீகம், ஸூர்யமண்டலம் முதலாகவுள்ள ஸ்தல விசேஷங்களில், எழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரனை விஷயமாக்கி எழுந்தருளி இருக்கும் அந்த ஸர்வேச்வரனை விஷயமாகப் பண்ணி அவ்விஷயந்தன்னை அங்கெழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரன் ஆகிற அவ்விஷயத்தை சங்கசக்ரகதாதரமாய் "சங்க சக்ர கதாதர:" என்கிறபடியே ஆச்ரித ஜ்ஞான ப்ரதானத்துக்கும் ஆச்ரித விரோதி நிரஸனத்துக்கும், அழகு முதலானவற்றிற்கும், திவ்யாயுதங்களைக் கையிலே தரிக்குமதாகவும், பீதாம்பர யுக்தமாய் "பீதாம்பரதர:" என்றும் "பீதகவாடைப்பிரான்" என்றுஞ்சொல்கிறபடியே பீதாம்பரத்தோடே கூடினதாகவும், கிரீடாதி நூபுர அந்த திவ்யபூஷண அலங்க்ருதமாய் † ஆதிராஜ்ய ஸூசகமான கிரீடந்தொடங்கி சரணாரவிந்தத்துக்கிட்ட நூபுரம் சிலம்புகடையியான திவ்ய ஆபரணங்களாலே அலங்கரிக்கப்பட்டதாய், லக்ஷ்மீ ஸஹிதமாகவும் அநுபவித்து விஷ்ணு பத்நீ என்று ச்ருதியிலும் மந்த்ர ரத்னத்திலும் சொன்ன ப்ரக்ரியையாலே பிராட்டி ஸஹிதமாக அநுபவம்பண்ணி, யோக அப்பியாஸ க்ரமத்தாலே அநுபவகாலத்தைப் பெருக்கி யம நியமாத்யஷ்டாங்க யோகத்தை அப்யஸிக்கிற க்ரமத்தாலே அநுபவிக்கைக்கு உடலாகக் காலத்தைவளர்த்து, அநவரதபாவ னாரூபம் ஆக்குகை. ஹ்ருதய கமலத்திலும் ஆதித்ய மண்டலம் தொடக்கமான ஸ்தல விசேஷங்களிலும் எழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரன் விஷயத்தில் தைலதாரவத் அவிச்சின்ன பாவநாரூபம்ஆக்குமது அப்படியாக்குமது ஜ்ஞானயோகம்என்றபடி

(அவ) இப்படிப்பட்ட ஜ்ஞானயோகத்தினுடைய ப்ரயோஜனத்தை அருளிச்செய்கின்றார்—(இதுதான்) என்று தொடங்கி.

௬௪ இதுதான் பக்தியோகத்துக்கு ஸஹகாரியுமாய், கைவல்யமோக்ஷத்துக்கும் ப்ரதாநஸாதனமுமாயிருக்கும்.

---

† ஆதிராஜ்ய ஸூசகம்—ராஜ்யத்தைத் தன்பாரமாக ஒப்படைக்கப்பட்டதன் ஸூசகம்.

(வ்யா) அதாவது— இதுதான் - இந்த ஜ்ஞாநயோகம் ஆகிறதுதான் என்று ஜ்ஞானயோகத்தைப் பராமர்சிக்கிறது, பக்தி யோகத்துக்கு ஸஹகாரியுமாய் - பக்தியோகம் தனக்கு ஸஹகரிக்குமதாயும், கைவல்யமோக்ஷத்துக்கும் ப்ரதானஸாதனமுமாயிருக்கும் - ஆத்மாநுபவரூபமான கைவல்யமோக்ஷம் தனக்கும் முக்ய ஸாதனமும் ஆகியிருக்கும்.

இந்த ஜ்ஞானயோகந்தான் பக்தியோகத்துக்கு ஸஹகரிக்கும் அது எங்ஙனே? என்னில் அவிச்சிந்நபாவநாரூப அவஸ்தை தனக்குண்டாகையாலே ததவஸ்தையை ப்ரீதிரூபாவஸ்தையாகப் பலிக்கைக்குப் பண்ணவேண்டுகையாலே, இந்த ப்ரகாரத்தால் பக்திக்கு ஸஹகரிக்குமதாயிருக்கும் என்கை. கைவல்யமோக்ஷத்துக்கு ப்ரதானஸாதனமாயிருக்குமது எங்ஙனே? என்னில் பகவத்ப்ராப்தியையபேக்ஷித்து அதிகாரியினுடைய பக்திக்கு அங்கமாயிருப்பதும் ஸ்தூலஸூக்ஷ்மசரீரவிமோசநமும், பகவதநுபவத்தில் நிவ்ருத்தியும் ஸௌஸ்வரஸாங்க்யமாகையாலே பகவானைக்குறித்து ஜராமரணமோக்ஷாய என்கிறபடியேப்ரபத்தியைப் பண்ணுகையும், யோகத்தில் தீக்ஷிக்கிறபோது குருநமஸ்காராதிஸாதனங்களும் அநேகமாக உண்டானாலும் ஜ்ஞாநத்துக்கு ஆத்மாநுபவத்திலே த்ருஷ்டியிருக்கையாலேயிறே "கைவல்யமோக்ஷத்துக்கு ஸாதனமாயிருக்கும்" என்றது. ஜ்ஞானத்துக்கிருக்கிற அவஸ்தாவிசேஷங்களிலே இதோரவஸ்தாவிசேஷம் என்று கருத்து. ஐஸ்வர்யார்த்திக்கு ஐஹிகஸப்தாதிவிஷயம் த்யாஜ்யமாய், உபாதேயம் ஐஸ்வர்யாதிகளாய் ஜ்யோதிஷ்டோமம் ப்ரதாநஸாதனமாய், அந்த ஸாதனத்துக்கு அங்கமாக 'அண்டாதிபதயே நம:' என்கிறபடியே ஐஸ்வர்ய விஸிஷ்டனை பகவந்நமஸ்காரம் அபேக்ஷிதமாயிருக்கும். கேவலனுக்கு ஐஸ்வர்யமும் பகவத்பிராப்தியும் ஆகிறவிரண்டும் த்யாஜ்யமாய், ஆத்மாநுபவம் புருஷார்த்தமாய், அந்த புருஷார்த்தத்துக்கு சுத்திகுணவிசிஷ்டனைபகவந்நமஸ்காரம் அங்கமாய், ஆத்மாநுபவத்துக்கு ஜ்ஞானம் ஸாதனமாயிருக்கும். இதால் கேவலன் தேஹவிசிஷ்டனாயிருந்து "விஜ்ஞாதாரம்" என்னும்படி ஸாதனதசையிலே ஜ்ஞானத்வாரா ஆத்மஸாக்ஷாத்காரம் பண்ணிக்கொண்டு ஸாத்யதசையிலே ஸ்தூல ஸூக்ஷ்ம தேஹ விமோசனமான பின்பு அவனுடைய ஜ்ஞானத்துக்கு வேறொரு வஸ்துவை ஸா

க்ஷாத்கரிக்குமதில்லாமையாலே ஆத்மஸ்வரூப ப்ரகாரத்துக்குமே ஜ்ஞானம் ஸாதனமாயிருக்கும் என்றதாயிற்று.

(அவ) பக்தியோகமாவது எது? என்ன அருளிச்செய்கிறார் (பக்தியோகம் ஆவது) என்று தொடங்கி,

௩௫— பக்தியோகமாவது இப்படி தைலதாராவதவிச்சிந்ந ஸ்ம்ருதி ஸந்தானரூபமான அனுபவம் ப்ரீதிரூபாபந்நமாக்குகையும், அது தன்னையறியப் பார்த்தால் ப்ராரப்தகர்மங்கழிகையும், ஸாதனஸாத்யங்களை யநுஸந்தித்து அதினுடைய ஸங்கோச விகாஸமாம்படி பரிணமிக்கையும்,

வ்யா- அதாவது— பக்தியோகம் ஆவது பக்தியோகம் ஆகிறது, இப்படி இப்படி என்று கீழ்ஜ்ஞானயோகத்தில்ச் சொன்னவற்றைப்பராமர்சிக்கிறது, தைலதாரவத்அவிச்சிந்ந ஸ்ம்ருதிஸந்தானரூபமான அனுபவம் தைலதாரையைப்போலே அவிச்சிந்நமான ஸ்மரணை பரம்பராரூபமான ஜ்ஞானயோகத்தால் அனுபவிக்கிற அநுபவத்தை, ப்ரீதிரூபாபந்நமாயிருக்கையும் ப்ரீதிரூபமாகப்பொருந்தினதாகயிருக்கும் என்று அநுஸந்திக்கிறதும் என்னுதல், ப்ரீதியோடே கூடினதாயிருக்கும் என்று அனுஸந்திக்கிறதும் என்னுதல், அது தன்னையறியப்பார்த்தால் ப்ரீதிரூபமாகிற அந்த பகவதநுபவத்தை அறியப் பார்ப்பதுண்டாகில், ப்ராரப்தகர்மங்கழிகையும் ப்ராக்தநப்ராரப்த கர்மமெல்லாம் விட்டுப்போவதும், ஸாதனஸாத்யங்களை யனுஸந்தித்து ஸாதனம் என்றது பக்தியோகத்தை, ஸாத்யம் என்றது பக்தியோகத்தாலே ஸாதிக்குமதை, மற்றை ஈச்வராநுபவத்தை யன்றிக்கே ஸாத்யம்என்று ஈச்வரனைச் சொல்லவுமாம்; இவையிரண்டையும் அனுஸந்தித்து, அதினுடைய அந்த அனுஸந்தானத்தினுடைய, ஸங்கோச விகாஸமாம்படி பரிணமிக்கையும் தன்னுடைய பக்தியாலேயிறே ஈச்வரன் ப்ரஸன்னனாவான் என்று நினையாதே, "த்வயி ப்ரஸந்நே மம கிம் குணேந" என்றபடி ஸாதனத்திலே ப்ரீதியை ஸங்கோசமாகப்பரிணமிப்பிக்கையும் அன்றிக்கே, ஈச்வரன் விஷயத்தில் ப்ரீதியை விகாஸமாகும்படி பரிணமிக்கையும் என்றுஞ்சொல்லவுமாம். (35)

அவ— இனிமேல் ப்ரபத்யுபாயத்தின் லக்ஷணத்தை அருளிச்செய்கிறார் (ப்ரபத்யுபாயமாவது) என்று தொடங்கி.

ஸூ- ௫௬— ப்ரபத்யுபாயமாவது- இப்படி கர்மஜ்ஞாநஸ்ஹ க்ருதையான பக்தியோகத்தில் அசக்தர்க்கும் அப்ராப்தர்க்கும் ஸுகரமுமாய், சீக்ரபலப்ரதமுமாய், உபாயம் ஸக்ருத்தாகை யாலே உபாயாநுஷ்டாந ஸமனந்தரமுண்டாகக் கடவதான பகவத்விஷயாநுபவங்களெல்லாம் ப்ராப்யகோடி கடிதங்க ளாகையாலே ஸ்வரூபாநுரூபமாயிருக்கும்.

(வ்யா) *அதாவது—* ப்ரபத்தியுபாயமாவது *ப்ரபத்தியுபாயமா கிறது, இப்படி இப்படி என்று கீழ் கர்மஜ்ஞானபக்தியோகங்களை உபபாதித்த ப்ரகாரத்தை நினைத்து இந்த ப்ரகாரத்தாலே என்கிறார்,* கர்மஜ்ஞான ஸஹக்ருதையான பக்தியோகத்தில் *"உபாப்யாம் ஜ்ஞானகர்மாப்யாம்" என்கிறபடி கர்மஜ்ஞானங்களிரண்டாலே ஸஹக்ருதையான பக்தியோகத்தில் பக்திக்கு அவையிரண்டும் ஸஹகரிக்கும்படி எங்ஙனே? என்னில், கர்மஸாத்யமானது ஜ்ஞா னம் என்றும் ஜ்ஞாநஸாத்யமானது பக்தி என்றுஞ் சொல்லுகிற க்ரமந்தானிப்படியிருக்க, கர்மஜ்ஞானங்களிரண்டாலே ஸஹகரிக்*

---

*அவ—ப்ரபத்திக்கு லக்ஷணம் யாது? ப்ரபத்தி பண்ணும் அதிகாரிகள் யாவர்? ப்ரபத்திக்கும் கர்மஜ்ஞாநபக்திகளுக்குமுண்டான வாசிகள் யாவை? ப்ரபத்தி பண்ணும் அதிகாரிகள் பரிஹரிக்கவேண்டியவைகள் எத்தனை?*

*ப்ரபத்திக்கு லக்ஷணமாவது:— "இது தனக்கு ஸ்வரூபம் தன்னைப் பொறுதொழிகை" என்கிறபடியே; அதாவது "உபாயவர்ணாத்மகமான தன்னை உபாயமென்ன ஸஹியாதபடியாயிருக்கை; அதாவது ஆபாதப்ரதீதியிலொழிய உள்ளபடி நிரூபித்தால் ஸ்வஸ்மிந்நுபாயத்வப்ரதிபத்திக்கு யோக்யமாகமாட்டாதபடியிருக்கை" என்றபடி; அதாவது விடுவதெல்லாம் விட்டுத் தன்னையும் விடுவதாம்.*

*ப்ரபத்தி பண்ணும் அதிகாரிகளாவார்:— அஜ்ஞர், ஜ்ஞாநாதிகர், பக்திவிவசரென மூவராவர். ப்ரபத்திக்கும், கர்மஜ்ஞாநபக்திகளுக்குமுண்டான வாசிகளாவன:— இதரோபாயங்கள் அதிக்ருதாதிகாரமாகை; இது ஸர்வாதிகாரமாகை. அதுக்கு காலநியதி, தேசநியதி, ப்ரகாரநியதி முதலியவை வேண்டுகை; இதுக்கு அவைகள் வேண்டாதொழிகை. அது விதிபரதந்த்ரமாய்ச் செய்கை; இது ஆசாரியருசிபரிக்ருஹீதமாணுகை. அதுக்கு காயக்லேஶம் வேண்டுகை; இதுக்கு அது வேண்டாதொழிகை. அதுக்கு ஆயாஸகௌரவம் வேண்டுகை; இதுக்கு அது வேண்டாதொழிகை, அது ப்ராரப்தகர்மாவஸாநத்திலே பலமாகை; இது தேஹாவஸாநத்திலே பலமாகை. அதுக்கு அந்திமஸ்ம்ருதி வேண்டுகை; இதுக்கு அந்திமஸ்ம்ருதி*

கும் க்ரமந்தான் அபக்தனாய்க் கர்மம் பண்ணினாலும், அபக்தனாய் ஜ்ஞானமுடையவனானாலும் பக்தியானது ஜ்ஞானவிசேஷமாகையாலே அவை நிலைநிற்கமாட்டா. 'கர்மஜன்யகர்ம' என்றும், 'அகர்

---

நிரபேக்ஷமாகை. அது அசேதனமாகை; இது பரமசேதநமாகை. அது அசேதநமான தன்னையுண்டாக்குகைக்கு சேதநனை அபேக்ஷிக்கை; இது பரமசேதநமாகையாலே "மாமேகம் சரணம் வ்ரஜ" என்று தன்னைக்காட்டுகை. அது பலப்ராப்திக்கு ஈஶ்வரனையபேக்ஷித்திருக்கை; இது தானே பலமாகை. அது ஸாத்யஸாதநமாகை; இது ஸித்தஸாதநமாகை. அது ப்ராப்யத்துக்கு விஸத்ருஶமாகை; இது தானே ப்ராப்யமாகை. அது பலவாகை; இது ஒன்றாகை. அது ஸ்வரூபவிரோதியான ஸ்வாதந்த்ர்ய யுக்தனாய்ச் செய்கை; இது ஸ்வரூபத்தோடு சேர்ந்த பாரதந்த்ரனாய்ச் செய்கை.

ப்ரபந்நனுக்கு பரிஹார்யம் ஆறு ப்ரகாரமாயிருக்கும். அவையாவன- ஆஶ்ரயணவிரோதி, ஶ்ரவணவிரோதி, அநுபவவிரோதி, ஸ்வரூப விரோதி, பரத்வவிரோதி, ப்ராப்திவிரோதி என்று ஆறுவகையாயிருக்கும். அதில் ஆஶ்ரயணவிரோதியாவது:— அஹங்காரமமகாரங்கள். அவையாவன— நாம் ஜ்ஞாநாநுஷ்டானமுடையவன் என்றும், இந்த ஶரணாகதியானது நல்ல நியமங்களோடே பண்ணப்பட்டது, இந்த இரண்டுவகையும் ஒருவருக்குமில்லை நமக்கொழியவென்றிருக்கை. பலாபிஸந்தியாவது— ஶரணாகதி ஸர்வபலப்ரதமாயிருக்குமாகையாலே "தாம் வேண்டுங்காமமே காட்டுங்கடிது" என்னுமது, நமக்கு மோக்ஷங்கொடுக்கத் தட்டில்லையென்றிருக்கை. புருஷகாரத்தை யிகழ்கையாவது— நாம் ஶரணாகதனாயிருக்க நமக்கும் பலமடைகைக்கு ஶரணாகதியுண்டாயிருக்க நடுவே ஆசார்யனேதுக்கென்று புருஷகாரத்தையிகழுகை. இந்த சரணாகதி நமக்கே கொடாவிட்டால் பின்னையாருக்குத்தான் கொடுக்குமென்று பேற்றில் ஸம்ஶயமுமாகிற இவையைந்தும், பலாபிஸந்தியும் புருஷகாரத்தையிகழ்கையும் பேற்றில் ஸம்ஶயமுமாகிற அஞ்சவகையாயிருக்குமென்கை. ஶ்ரவணவிரோதியாவது- தேவதாந்தர கதாவிஷயங்களிலே அவஶனாய்ச் செவிதாழ்க்கை, அதாவது— பகவத்குணாநுபவ பரவஶனாய்ச் செவி தாழாதே அந்யகதாஶ்ரவணனாகை. அநுபவவிரோதியாவது:— போக த்ரவ்யங்கொண்டு புக்குஸ்தானத்ரவ்யங்கொண்டு புறப்படுகிற விஷயாநுபவேச்சை. அதாவது— நித்யவிபூதியுக்தனானவனோடே நித்யாநுபவம் பண்ண ப்ராப்தனாயிருக்க நித்யஸம்ஸாரிகளோடே நித்யாநுபவம் பண்ணுகை. ஸ்வரூபவிரோதியாவது:— பாரதந்த்ரனான தன்னை ஸ்வதந்திரனாக நினைத்திருக்கை. பரத்வவிரோதியாவது:—க்ஷேத்ரஜ்ஞரான ப்ரஹ்மாதிகளைப் பரனென்று ப்ரபத்திபண்ணுகை. ப்ராப்திவிரோதியாவது கைவல்யமான பேற்றைப்பெற்று ஆத்மாநுபவம் பண்ணுகை. ஆகையால் ப்ரபந்நனுக்கிந்த ஆறு விரோதிகளும் பரிஹரிக்கவேணுமென்பதே.

மணி ச கர்ம" என்றும் "ஸயுக்திமான்" என்றும், "ஸயுக்த:" என்றும், "க்ருத்ஸ்ந கர்மக்ருத்" என்றுமிப்ரகாரத்தாலே ஜ்ஞானத்துக்கு அநேக அவஸ்தா விசேஷங்களுண்டாயிருக்க, ஐச்வர்யார்த்தமாகக் கர்மத்தைப் பண்ணுமவனுக்குபகவத்ப்ராப்தியும் கைவல்யமும் ஆகிற இரண்டும் த்யாஜ்யமாயிருக்கும். மோக்ஷத்துக்கு ஸாதனமாகக்கர்மத்தைப்பண்ணுமவன்-ஸகல தர்மங்களுடையவும், ஐச்வர்ய கைவல்யங்களுடையவும் த்யாக பூர்வகமாக பகவதர்ப்பண புத்தியாலும் ப்ரீதியாலும் பண்ணுமவனுகையாலே ப்ரீதிரூபமானதே பக்தி. ஆகையாலே, கர்மயோகந்தான் ஸ்வயமேவ பக்தி யோகத்துக்கு ஸஹகரிக்குமதாயிருக்கும், ஜ்ஞானயோகந்தானும் பக்திக்கு ஸஹகரிக்கும்படி எங்ஙனே என்னில், மோக்ஷார்த்திக்கு-ஐச்வர்ய கைவல்யங்களிரண்டும் த்யாஜ்யமாய், பகவத்ப்ராப்தி உபாதேயமாய், கர்மத்தைப்பண்ணும்போது ஞானபக்திகள் இரண்டும் உடையனாய் பண்ணுகையாலே, கர்மந்தான் எப்படி பக்திக்கு அங்கமாய் இருக்குமோ அப்படியே ஜ்ஞானமும் பக்திக்கு அங்கமாயிருக்கிறபடி. அதாவது-அங்கமாயிருக்குமந்ததசையிலே ப்ரீதிரூபாவஸ்தை தனக்கில்லாமையாலேஜ்ஞானமானது மேல் ப்ரீதிரூபாவஸ்தையை அடைந்துபக்தியாகும். ஆகையாலேஸஹகரிக்குமதாயிருக்கும்என்றபடி, ஆனால், ஜ்ஞானந்தானேபக்தியாமோ ? என்னில் "பக்திச் ச ஜ்ஞானவிசேஷ:" என்று சொல்லும்போதுஸாக்ஷாத்ஜ்ஞானத்துக்கு ஜ்ஞானவிசேஷம் என்று சொல்லவொண்ணாதிறே, ஜ்ஞானத்திற்குவிசேஷாவஸ்தையைச் சொல்லுகையாலே விசேஷாவஸ்தையை உடைத்தான ஜ்ஞானத்துக்கு பக்தியென்று பேராய், அந்த விசேஷாவஸ்தையுண்டாகும்படி ஸஹகரிக்குமதாயிருக்கும் ஜ்ஞானந்தான், கர்மஸாத்யமான ஜ்ஞானத்தாலே பக்திக்கு ஸஹகரிக்குமதாயிருக்கும் என்கிற நிர்ப்பந்தமில்லை. கர்மயோகந்தான் அங்கியாயிருக்கும்போது- ஜ்ஞானபக்திகளிரண்டும் அங்கங்களாய் ஸஹகரிக்குமவையாயிருக்கிற ஆகாரமுண்டாயிருக்க, ஜ்ஞானயோகந்தான் காகாக்ஷிந்யாயத்தாலே, கர்மயோகத்துக்கும் ஸஹகாரியாய் பக்தியோகத்துக்கும் அங்கமாய் ஸஹகரிக்குமதாயிருக்கும்.கர்மயோக-பக்தியோகங்களிரண்டும்ஜ்ஞானயோகத்துக்குஅங்கங்களாய் ஜ்ஞானயோகந்தான் அங்கியாயிருக்கும்போது ஜ்ஞானயோகத்துக்கும் ஸஹகரிக்குமதாய் பக்தியோகத்துக்கும் ஸஹகரிக்

குமதாயிருக்குமிறே கர்மயோகந்தான். பக்தியோகந்தான், அங்கியாய் ஜ்ஞானகர்மங்களாகிறவிரண்டு யோகங்களும்தனக்கு அங்கங்களாயிருக்ும்போது ஜ்ஞானயோகத்துக்கும் ஸஹகரிக்குமதாய் கர்மயோகத்துக்கும் ஸஹகரிக்குமதாயிருக்கும். இப்படி தத்வஸ்திதியிருக்கையாலே, கர்மயோகத்துக்கு முன்பே ஜ்ஞானபக்தி யோகங்களிரண்டு முண்டாகையாலேயும் ஜ்ஞானயோகத்துக்கு முன்பே கர்மபக்தி யோகங்களிரண்டின் விஷயத்தில்ஜ்ஞானமுண்டாகையாலும், பக்தியோகத்துக்கு முன்பே கர்மஜ்ஞானயோகங்களிரண்டின் விஷயத்தில் பக்தியுண்டாகையாலும் கர்மயோக ஸஹக்ருதையாயும், ஜ்ஞாநயோக ஸஹக்ருதையாயுமிருக்கும் பக்தியோகந்தான் "கர்மஜன்யம் ஜ்ஞானம்-ஜ்ஞானஜன்யம் பக்தி" என்றிங்ஙனே சொல்லுகிறது. யோகஜன்யம் என்கிறதுமாத்திரம்கொண்டு ஜ்ஞானத்துக்குண்டான ஓர்அவஸ்தாவிஶேஷஞ்சொல்லுகையிறே அதுவே முக்யமாகச்சொல்லில் ஶாஸ்த்ரஜன்ய ஜ்ஞாநாதிகளுக்கும் ஸதாசார்யோபதேசத்தால் வந்த ஜ்ஞாநாதிகளுக்கும் வையர்த்யம் வருமிறே! 'பரீக்ஷ்யலோகாந்' இத்யாதி இப்ரகாரத்தாலே சிரகால ஸாத்யங்களாய், விளம்ப பலப்ரதங்களாய் காயசோஷணாதிகளால் ஸாதிக்குமவையாய் அந்திமஸ்ம்ருதியில்லாதபோது பலியாமலிருக்குமவையாய் சேதனருடைய அத்யந்தபகவத்பாரதந்த்ர்யைகரூப ஸ்வரூபத்துக்கு விரோதிகளாயுமிருக்கையாலே "இப்படி கர்மஜ்ஞானஸஹக்ருதையான பக்தியோகத்தில் அஶக்தர்க்கும்" என்றபடி. அஶக்தர்க்கும் கீழ் சொன்ன கர்மஜ்ஞாநாங்கித பக்தியில் ஶக்தியில்லாதவர்க்கும், அநுலோமாதிகாரிகளுக்கும் என்றபடி. அப்ராப்தர்க்கும் கர்மாதிகளில் அதிகாரமாகிற ப்ராப்தியில்லாதவர்க்கும், அத்ரைவர்ணிகர்க்கும், ப்ரதிலோமாதிகாரிகளுக்கும் என்றபடி, ஸுகரமுமாய் கீழுக்தமான உபாயாந்தரங்களைப் போலே துஷ்கரமாயிருக்குமதன்றிக்கே ஸுலபமுமாய் சீக்ரபலப்ரதமுமாய் "க்ஷிப்ரந்தேவப்ரஸாதிநீ" என்கிறபடியே ஶீக்ரமாக பகவதநுபவத்தைப்பண்ணுவிக்குமதாய்; உபாயம் ஸக்ருத்ஆகையாலே "ஸக்ருதேவ" என்றும் "ஸக்ருதேவஹி" என்றும், "சிந்திப்யேமையும்" என்றுஞ்சொல்லுகிறபடியே உபாயவரணம்பண்ணுமது ஸக்ருத் ஆகையாலே, உபாயஅனுஷ்டானஸமனந்தரம் உண்டாகக்கடவதான பகவத்விஷய அனுபவங்களெல்லாம் "ப்ரபத்யே" என்று விதித்தோபாயவரண அனந்தரமுண்டாகத்தக்கதான பகவத்விஷயத்

தில் அநுபவிக்கிற அநுபவங்களெல்லாம், ப்ராப்யகோடிகடிதங்கள் ஆகையாலே புருஷார்த்தகோடியில் அந்விதங்களாகையாலே அதாவது — பூர்வவாக்யத்தில் சொல்லுகிற உபாயவரணதசையிலே புருஷகாரமும் ஆஶ்ரயணஸௌகர்யாபாதக ஆஶ்ரிதஸௌகர்யாபாதக குணயோகமும் விக்ரஹயோகமும் ஆகிறமூன்றும் உபாயவரணத்துக்கு அநுகூலமாயிருக்கையாலேப்ரபத்யே என்னும்வாரஞாந்தரம் அந்தபுருஷகாராதித்ரயமும் உத்தரவாக்யத்தில் சொல்லுகிற லக்ஷ்மீவிஶிஷ்டமும், ஸௌகர்யாபாதக கார்யாபாதககுணவிபாகமன்றிக்கே இருக்கிற கல்யாணகுணயோகமும் ஶேஷத்வமும் ஸகலவிதகைங்கர்ய ஸம்பத்தியும் ஸ்வபோக்த்ருத்வாதிதோஷநிவ்ருத்தியுமுடையனுனசேதனனுக்குப்ராப்யமாய்த்தோன்றுமாப்போலே உபேயதசையிலும் ப்ராப்யமாய்த்தோன்றும் என்றபடி. உபாயவரணதசையில்புருஷகாராதித்ரயத்திலும்வைத்துக்கொண்டு ஸௌகர்யாபாதக கார்யாபாதக குணவிசிஷ்ட விக்ரஹத்வாக்ருதியானது வரணத்துக்கு அநுகூலமாய்த்தோற்றும். புருஷகாரமும் அப்படியே தோற்றும். புருஷகாரத்திற்கு "லக்ஷ்மீ புருஷகாரத்வே நிர்திஷ்டா" என்றபடி உபாயத்வமின்றிக்கேயிருப்பதாய்த்தோற்றுகையாலே, உபேயவரணதசையில் புருஷகாராதித்ரயமும் ப்ராப்யகோடியிலே அன்வயிக்கும் என்றபடி. இவனுக்காகவிறே அவனுக்கு உபாயவிஶேஷத்தில் அன்வயமிருப்பது. ஸ்வரூபஅனுரூபமாயிருக்கும் ப்ராபகாந்தரபரித்யாகபூர்வகமாக ஸித்தோபாயவரணம் பண்ணுமவனுகையாலே ப்ராப்யாந்தரங்களில் போகாதபடியான இவனுடைய ஸ்வரூபத்துக்கு அநுரூபமாயிருக்கும்.

(அ-வ) இனிமேல் ப்ரபத்தியினுடைய த்வைவித்யத்தைஅருளிச் செய்கிறார். (இதுதான்) என்று தொடங்கி.

கூஎ-இதுதான்-ஆர்த்தருபப்ரபத்தி என்றும், த்ருப்தருபப்ரபத்தி என்றும் இரண்டுபடிபட்டிருக்கும்.

வ்யா- அதாவது- இதுதான் கீழுபபாதித்தப்ரபத்தி-உபாயந்தான். ஆர்த்தருபப்ரபத்தி என்றும் ஆர்த்தரூபை எனவும், த்ருப்த்த ருபப்ரபத்தி என்றும் த்ருப்தரூபை எனவும், இரண்டுபடிபட்டிருக்கும் இரண்டு ப்ரகாரங்களைக்கொண்டிருக்கும்.

(அவ-) ப்ரபத்திவிதயிரண்டிலும் வைத்துக்கொண்டு முந்தமுன்னம் ஆர்த்தருபப்ரபத்தியை விவரிக்கிறார். (ஆர்த்தருபப்ரபத்தி ஆவது) என்று தொடங்கி.

**௬௨. ஆர்த்தரூபப்ரபத்தியாவது-நிர்ஹேதுகபகவத்கடாக்ஷ மடியாக ஶாஸ்த்ராப்யாஸத்தாலும், ஸதாசார்யோபதேஶத்தாலும் யதாஜ்ஞானம் பிறந்தவாறே பகவதனுபவத்துக்கு விபரீதமான தேஹஸம்பந்தமும், தேசஸம்பந்தமும் தேசிகருடைய ஸஹவாசமும் துஸ்ஸஹமாய்பகவதனுபவத்துக்கேகாந்தமாம்படிவிலக்ஷணமானதேஹத்தையும் தேசத்தையும்,தேஶிகரையும், ப்ராபிக்கையில்த்வரைவிஞ்சிஓயுமூப்புப்பிறப்பிறப்புப்பிணிவீயுமாறுசெய்வான்றிருவேங்கடத்தானுகையாலே' திருவேங்கடத்தானே! புகலொன்றில்லாவடியேன்'என்றும், ''வேங்கடத்துறைவார்க்கு நம: என்றும் பூர்ணப்ரபத்திபண்ணி, பல நீ காட்டிப்படுப்பாயோ இன்னும் கெடுப்பாயோ, இக்கரையேறியிளைத்திருந்தேனினியடைய வருளாய் திருவாணை நின்னாணை கண்டாய், இனி நான் போகலொட்டேன்'' என்று தடுத்தும் வளைத்தும் பெருகை.**

(வ்யா-) *அதாவது-* ஆர்த்தரூபப்ரபத்தி ஆவது ஆர்த்த ரூபையாயிருக்கும் *அந்தப்ரபத்தியாகிறது.* நிர்ஹேதுகபகவத்கடாக்ஷம் அடியாக ''*க்ருபாகாப்யுபஜாயதே*'' *என்றும்* ''*யம் பச்யேன் மதுஸூதந: என்றும்,*'' ''*வெறிதேயருள் செய்வார்*'' *என்றுஞ் சொல்லுகிறபடியே— ஈஶ்வரனுடையநிர்ஹேதுக கடாக்ஷந்தானே ஹேதுவாக;* ஶாஸ்த்ர அப்யாஸத்தாலும் ஸதாசார்ய உபதேசத்தாலும் யதாஜ்ஞானம் பிறந்தவாறே *வேதாந்தம் ஆதியான ஶாஸ்த்ரங்களைப்படிப்பதனாலும்,* ''*தான் ஹிதோபதேசம் பண்ணும்போது*'' *என்று தொடங்கி ஸ்ரீவசனபூஷணத்தில் இவர்தாமே அருளிச்செய்த ஜ்ஞான அனுஷ்டான பரிபூர்ணராயிருக்கிற ஸதாசார்யனுடைய மந்த்ரார்த்த உபதேசத்தாலும்* ''*ஈஶ்வரனே ஶேஷி*'' *என்றும்* ''*ஶரண்யன்*'' *என்றும்* ''*ப்ராப்யன்*'' *என்றும், சொல்லுகிற ஈஶ்வரனுடைய ஆகாரத்ரயத்தையும்* ''*அனன்யார்ஹஶேஷத்வம்*'' *என்றும்,* ''*அனன்யஶரண்யத்வம்*'' *என்றும்,* ''*அனன்யபோக்யத்வம்*'' *என்றுஞ் சொல்லுகிற சேதனருடைய ஆகாரத்ரயத்தையும்,* ''*ஆறுப்ரகாரத்தாலே*'' *என்றும்,* ''*கடிமாமலர்பாவையோடுள்ள ஸாம்யஷட்கம்*'' *என்றும் சொல்லுகிறபடியே ஈஶ்வரவிஷயத்திலிருக்குமிருப்புபோலே தா*

யும் ஸாம்யஷட்கமுடையனாய்க்கொண்டிருக்கிற இருப்பையும் ஆகிற இவை முதலான ஸகல அர்த்தங்களையும் யதாவத்தாக அறிவதாகிற யதார்த்தஜ்ஞானம் பிறந்தவாறே. பகவதனுபவத்துக்கு விபரீதமான பகவானை அனுபவிப்பதற்கு விருத்தங்களாகிற, தேகஸம்பந்தமும் 'அழுக்கு உடம்பு' என்கிறபடியே ஹேயமாயிருக்கிற இந்த தேஹத்தோடே கூடியிருக்குமிருப்பும்; தேசஸம்பந்தமும் த்ரிகுணாத்மகமான இந்த தேஹஸம்பந்தம் வருகைக்கு மூலமாய்க் கர்மலோகமாகிற லீலாவிபூதியாகும் தேசத்தோடே கூடியிருக்கிற இருப்பும், தேசிகருடையஸஹவாஸமும் "ஆவித்ய: ப்ராக்ருத: ப்ரோக்த:" என்றும் 'ஶரீரமேவ மாதாபிதரௌ ஜனயத:' என்றும், பிதாம் மாதாம்" என்றும் சொல்லுகிறபடியே கர்மபாதந்த்ராராய், தன்னுடையதேஹ உத்பாதகராய் ப்ராக்ருதராய்லோகத்தாருக்கு கௌரவியராய் இருக்கிற மாதாபிதாக்கள் முதலானவர்களுடைய ஸஹவாசமும், 'விபரீத' சப்தத்தை தேஹதேச தேசிகவிஷயமாக மூன்றிடத்திலும்அன்வயிக்கக்கடவது. 'தேசிக'சப்தத்திற்குமாதாபிதாக்கள்முதலானவர்களைசொல்லாவிடில் "அடியார்கள்குழாங்களுடன்கூடுவதென்றுகொலோ" என்றும் 'குழாங்களாடியீருடன்கூடி நின்றாடுமினோ" என்றுஞ் சொல்லுகிற தேசவிசேஷம்தியாஜ்யமாக வருமிறே, துஸ்ஸஹமாய்ஸஹிக்ககூடாதபடியிருக்குமதாய்,பகவத் அநுபவத்துக்கு ஏகாந்தம் ஆம்படி பகவானை அனுபவிப்பதற்குதனிமையாகும்படியாக, விலக்ஷணமான தேஹத்தையும் யோக்யமாய் பரமேஷ்டி ஆதிபஞ்சசக்திமயமான சரீரத்தையும்,தேசத்தையும் நித்யவிபூதியாகிய தேசத்தையும்,தேசிகரையும் நித்யமுக்தராகிற அந்த த்ரிபாத்விபூதி தேசிகரையும்.'விலக்ஷண' சப்தத்தைதேஹ-தேச தேசிகவிஷயமாக மூன்றிடத்திலும்அன்வயிக்கக்கடவது.ப்ராப்திகையில்த்வரை விஞ்சி அடைவதற்காக 'கூவிக்கொள்ளும்காலம்இன்னம் குறுகாதோ" என்றும், "என்னாள் யானுன்னை இனிவந்து கூடுவன்" என்றுஞ்சொல்கிறபடியே த்வரையானது மிகுந்து ஓயும் மூப்பு பிறப்பு இறப்புப் பிணிவீயுமாறு செய்வான் திருவேங்கடத்தான் ஆகையாலே,ஓயும் நசிக்கிற, மூப்பு-ஜரையும், பிறப்பு-ஜன்மமும், இறப்பு-மரணமும், பிணி-ஜென்மஜராமரணாதிகளுக்கு அனுகூலமான வ்யாதி ஆதிகளாலே வரும்துக்கங்களும், அன்றிக்கே-ஓயும்மூப்புஎன்கிறது ஜீர்ணாவஸ்தையை உடைத்தான மூப்புஎன்னவுமாம்; அதாவது நசிக்கைக்குஸூசகமானமூப்புஎன்ற.

படி. பிறப்புக்கு விசேஷமாகிறபோது நசிக்கிறஜன்மத்தை என்னுதல்; வியுமாறு நசிக்கும் ப்ரகாரம் செய்வான்-செய்புமவன், திருவேங்கடத்தானுகையாலே திருமேலெழுந்தருளியிருக்கிறக்ருஷ்ணனானதனாலே, திருமலைமேலெழுந்தருளியிருக்கிற க்ருஷ்ணன் என்றது. 'மாம்வ்ரஜ' என்று கண்ணன் அருளிச்செய்கையாலும் "மத்பாதஸேவிநும்பும்ஸாம்" என்று திருவேங்கடத்தான் அருளிச் செய்ததாலும், இருவரும் உபாயார்த்தப்ரவர்த்தகாரகையாலே அருளிச் செய்தாரென்று தாத்பர்யமாகக் கடவது, திருவேங்கடத்தானே புகல் ஒன்று இல்லா அடியேன் திருமலைமேலெழுந்தருளியிருக்கிற ஸ்வாமீ என்று ஸம்போதனை, உன்னையொழியரக்ஷகாந்தரம் ஒன்றும் இல்லாத அடியேன், என்னும் எனவும் வேங்கடத்துறைவார்க்கு நம: என்றும் பூர்ணப்ரபத்திபண்ணி திருவேங்கடமலையிலே நித்யவாஸம் பண்ணுமவனுக்கு நம: எனவும் பூர்ணமான ப்ரபத்தியைப்பண்ணி நம: என்றதும்-ப்ரபத்தி என்றதும் பர்யாயம். டல நீ காட்டிப்படுப்பாயோ? ப்ரபதனத்தைப் பண்ணின அனந்தரமும் பஹுவான சப்தாதிகளைக்காட்டி அவற்றிலே என்னைத்தள்ளப் பார்க்கிறாயோ? இன்னம் கெடுப்பாயோ? நான் ப்ரபத்தியைப் பண்ணி உன்னையாஶ்ரயித்த பின்னும் என்னை இந்திரிய போகங்களிலே தள்ளி நசிக்கும்படி பார்க்கிறாயோ; இக்கரையேறி இளைத்து இருந்தேன் இனி அடையஅருளாய் லீலாவிபூதியாகிற ஸம்ஸார ஸமுத்திரத்தினுடைய இந்தக்கரையிலே ஏறி அனாதிகாலந்தொடங்கி ஜென்மாதிபரம்பரைகளில் நலிவுபட்டேன், இப்பொழுது நான் உன்னைப்ராபிக்கைக்குகிருபை பண்ணுவாயாக, திரு ஆணை நின்ஆணை கண்டாய் உனக்கு ப்ரீதி விஷயமான பிராட்டியின் மேலாணை அவளுக்கு ப்ரீதிவிஷயமான உன்மேலாணை காண்புதி, இனி நான் போகல் ஒட்டேன் என்றுஇனிமேல்உன்னை நான் என்னைவிட்டு அகன்று புறம்பே போக விட ஸம்மதிக்கமாட்டேன் என்று, தடுத்தும் வளைத்தும் பெறுகை வழிமறித்தும் சூழ சுற்றிக்கொண்டும் பகவத்ப்ராப்தியை ப்ராபிக்குமது.

(அவ-) இனி-த்ருப்தருபப்ரபத்தி லக்ஷணத்தை அருளிச்செய்கிறார். அதாவது ஆழ்வார்கள் பண்ணின ஆர்த்தரூப ப்ரபத்திலக்ஷணத்தை அருளிச்செய்த அனந்தரம் நாதமுனி யாமுனமுனி முதலான நம் பூர்வாசார்யர்கள்பண்ணின த்ருப்தருபப்ரபத்தியின்லக்ஷ

ணத்தை அருளிச்செய்கிறார். (த்ருப்தரூபப்ரபத்தியாவது) என்று தொடங்கி.

௩௯. த்ருப்தரூபப்ரபத்தியாவதுசரீராந்தர ப்ராப்தியிலும்ஸ்வர்க்க நரகானுபவங்களிலும் விரக்தியும் பீதியும் பிறந்து, அதினுடைய நிவ்ருத்திக்கும் பகவத்ப்ராப்த்திக்கு முறுப்பாக ஸதாசார்யோபதேச க்ரமத்தாலே உபாய ஸ்வீகாரம்பண்ணி விபரீத ப்ரவ்ருத்தி நிவ்ருத்தராய் வேத விஹிதமான வர்ணாச்ரமானுஷ்டானமும் பகவத்பாகவத கைங்கர்யமும் மானஸ வாசிக காயிகங்களாலே யதாபலமனுஷ்டித்து ஈச்வரன் சேஷியாய், நியந்தாவாய் ஸ்வாமியாய் சரீரியாய் வ்யாபகனாய் தாரகனாய், ரக்ஷகனாய்: போக்தாவாய், ஸர்வக்ஞனாய், ஸர்வசக்தியாய், ஸர்வஸம்பூர்ணனாய், அவாப்தஸமஸ்தகாமனாயிருக்கிற ஆகாரத்தையும், தான் அவனுக்கு-சேஷமாய்,நியாம்யமாய்,ஸ்வம்மாய், சரீரமாய், வ்யாப்யமாய் தார்யமாய் ரக்ஷ்யமாய், போக்யமாய், அஜ்ஞனாய், அசக்தனாய், அபூர்ணனாய், ஸாபேக்ஷனாயிருக்கிற ஆகாரத்தையும் அநுஸந்தித்துக்கொண்டு "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று உபாயத்தில் ஸர்வபரங்களையும் அவன் பக்கலிலே போகட்டு நிர்பரனாயிருக்கை.

(வ்யா-) அதாவது- த்ருப்தரூப ப்ரபத்தியாவது த்ருப்தரூபையாயிருக்கும் அந்த ப்ரபத்தி ஆகிறது. சரீராந்தரப்ராப்தியிலும் "மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து" என்கிறபடியே ஸ்ருஷ்டிகாலந்தொடங்கி அனேக ஜன்மங்களை யெடுத்து முடிவில் இந்த சரீரத்தைப் பெற்று, ஜ்ஞானத்தையுடையனாய், மேலேயின்னமுமொரு ஜன்மம் எடுக்க ஒரு சரீரம் பெறுவதிலும் ஸ்வர்க்க நரக அனுபவங்களிலும் சரீரத்தையெடுத்து,புண்யபாபரூபகர்மங்களைப் பண்ணி அவற்றுக்குப் பலங்களாகிற ஸ்வர்க்க அனுபவத்திலும், நரக அனுபவத்திலும், விரக்தியும், பீதியும், பிறந்து வைராக்யமும் பயமும் ஜனித்து சரீராந்தர ப்ராப்தியும், ஸ்வர்க்கானுபவமும், நரகானுபவமும், புண்யபாபரூபகர்மங்களாகையாலேஇவை மூன்றும் மோக்ஷவிரோதித்வாத்த்யாஜ்யங்களாவதையிட்டுஅவற்றின் பக்கல்

விரக்தியும், பீதியும, பிறக்கலாமிறே. அதினுடைய நிவ்ருத்திக்கும் அந்தபய நிவருத்திக்கும், அன்றிக்கே ப்ரீராந்தரப்ராப்தி நிவ்ருத்திக்கும், ஸ்வர்க்கானுபவ நிவ்ருத்திக்கும் நரகானுபவநிவ்ருத்திக்கும் என்றுஞ்சொல்லவுமாம். அங்ஙனமன்றிக்கே-அம்மூன்று நிவ்ருத்திகளுடன் பயநிவ்ருத்தியையும் கூட்டி நான்கின் நிவ்ருத்திக்கும் என்றுஞ்சொல்லவுமமையும். பாபகர்மத்தை விடுகைக்குப் பயம் பிறந்துவிட்லாம். புண்யகர்மத்தை பயம் பிறந்து விடுகை கஷ்டமன்றோ? என்னில்- புண்யகர்மமும் ஜன்மஹேதுவாகையாலேஜன்மகாரணபுண்ய மமாகவு மாம். "வர்த்ததே மே மஹத் பயம்"என்கிறபடியே-பயவிசிஷ்டமான உபயவித கர்மங்களிலும் விரக்தியும் பீதியும் பிறக்கலாமிறே! பகவத் ப்ராப்த்திக்கும் உறுப்பாக ஸாக பாவைக க்ஷணையானபகவக்ப்ராப்திக்கும்அநுகுணமாக, ஸதாசார்ய உபதேசக்ரமத்தாலே ஜ்ஞான அநுஷ்டான பரிபூர்ணராய்,க்யாத்யாதிகளுக்கன்றிக்கே சேதனருடையஹிதத்திலேகண் வைத்துக் கொண்டு உபதேசிக்கிற ஸதாசார்யனுடைய க்ரமஉபதேசத்தாலே, க்ரமம் என்றது தாபாதி ஸம்ஸ்காரக்ரமம்என்னுதல்,ஶிஷ்யனுக்கு ஜ்ஞானவிஶேஷம் பிறக்க விஶேஷார்த்த உபதேச க்ரமம் ஆகவுமாகலாமிறே. உபாய ஸ்வீகாரம் பண்ணி அநுஷ்டான பரமான மந்த்ரரத்னத்தில் பூர்வவாக்யப்ரக்ரியையாலே புருஷகார பூர்வகமான ஸித்தோபாயவரணம் பண்ணி, வ்பாத ப்ரவ்ருத்த நிவ்ருத்தராய் விபரீதப்ரவ்ருத்தியாவது ஈஶ்வரவ்யதிரிக்தமானதேவதாந்தரப்ராவண்யமும் அகங்காராதிகளாலே ப்ரவ்ருத்திக்கிறஸாதநாந்தர ப்ரவ்ருத்தியும் ஶப்தாதி விஷயப்ராவண்யமும், ஸ்வஸாம்ய புத்தியால்வருகிறபாகவதாபசாரப்ரவ்ருத்தியும்புத்திபூர்வக,அபுத்திபூர்வக ஸம்ஜ்ஞையால் வருகிற உத்தாரகரூபப்ரவ்ருத்தியும் ஆகிற விவை முதலான ஸமஸ்தத்தையும் சொல்லுகிறது. இவற்றில் நின்றும் நிவ்ருத்தராய், விடுபட்டவராகி என்னவுமாம்; வேத விஹிதமான வர்ணாசிரம அனுஷ்டானமும் "ஶ்ருதிஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா" என்கிறபடியே- ச்ருதிஸ்ம்ருதிகளாலே "இதம் குரு இதம் மாகார்ஷீ:" என்று விதித்துச்சொன்ன வித்யாத்மகமான ஸத்கர்மப்ரவ்ருத்தியும், நிஷேதாத்மகமான துஷ்கர்மநிவ்ருத்தியும் தம்முடைய வர்ணத்துக்கு அநுகுணமாகவும் ஆஶ்ரமத்துக்கு அநுகுணமாகவும் நடத்திக்கொண்டு என்று அர்த்தமாவதன்றிக்கே ப்ராஹ்மணாதி மூவர்க்கும் தங்களுடைய வர்ணாநுகுணமாக

வும் ப்ராஹ்மசர்யாதி ஆஶ்ரமானுகுணமாகவும் நித்யநைமித்திகரூப கர்மாதி அநுஷ்டானமும் சதுர்த்தவர்ணருக்கு ப்ராஹ்மணாதிமூவருக்கும் சுச்ரூஷை முதலான அநுஷ்டானமும் என்றும் சொல்லவுமாம். இங்ஙனமன்றிக்கே குலந்தாங்குசாதியான நால்வரும் ஸித்தோபாயவரணம் பண்ணியிருந்தால் பூர்வவர்ணாதிகளெல்லாம் ஜென்மாந்தரம்போலே யிருக்கையாலே "தத்ச்ரேஷ்டம் ஜென்ம" என்றும் "வர்ணாம் பஞ்சமச்சாஶ்ரமாணாம்" என்றும், "குலந்தரும்" என்றும் சொல்லுகிறபடியே முமுக்ஷுக்களாய், கர்மஸம்பந்தத்தாலுண்டான பூர்வவர்ண பூர்வ ஆஶ்ரமங்கள் போய் அஞ்சாம் வர்ணமும் அஞ்சாம் ஆஶ்ரமமும் வரும்படியிருக்கிறவர்களாகையாலே ப்ராஹ்மணாதி மூவருக்கும், "லோகஸங்க்ரஹமேவார்த்தம்" என்னும்படி பண்ணுகிற நித்ய நைமித்திக ரூபமான கர்மாநுஷ்டானமும், சதுர்த்தவர்ணராவார்க்கு கீழ் சொன்ன மூவரும் பாகவத கோடியில் அன்வயித்தவராகையாலே அவர்களுக்குஸகல வித கைங்கரியம் பண்ணிக்கொண்டு அவர்கள் புருஷகாரமாக பகவத் கைங்கரியம் பண்ணிக்கொண்டிருக்கிற அநுஷ்டானமும் என்னவுமாம். ப்ராம்ஹணாதி மூவரும்ஜ்ஞானாதிகாரியிருந்துசதுர்த்த வர்ணரும் ஜ்ஞானாதிகாரியிருந்தால் அம்மூவரும் தங்கள் முக்குறும்பான ஆபிஜாத்யாதிகளைப் பரிஹரித்துக்கொள்ளுமவர்களாகையாலே "ப்ரபாவாத் பரமாத்மந:" என்றும் "விஷ்ணுநாவ்யபதேஷ்டவ்ய:" என்றுஞ் சொல்லுகிறபடியே பகவத் ஸம்பந்த ப்ரபாவாதிசயத்தாலே "தஸ்மைதேயம் ததோக்ராஹ்யம்" என்றும், "தொழுமினீர் கொடுமின் கொள்மின்" என்றும் சொல்லுகிறபடியே அவர்களும் உபதேசாதிகளைப்பண்ணலாம், அவர்கள் பக்கல் நின்றும்தாமும்உபதேசாதிகளையும்பரிக்ரஹிக்கலாம். இந்த அர்த்தத்தை தர்மவ்யாதன் முதலானோர் பக்கலிலே காணலாமிறே! பகவத் பாகவத கைங்கர்யமும் பகவானுடைய கைங்கர்யமும், பாகவதர்களுடைய கைங்கர்யமும், மாநஸ வாசக காயகங்களாலே, மநஸ்ஸாலேயும், வாசகத்தாலேயும், காயகத்தாலேயும், அதாவது பகவத் பாகவதர்கள் பக்கல் அனிஷ்டாதி க்ரியைகளை நினையாதே "பல்லாண்டு" என்று மங்களாசாஸனமே நினைத்திருக்கை ஸ்வரூபம் என்றது மானசத்தால் பண்ணும் கைங்கர்யம். பகவத்பாகவத விஷயங்களில் தாங்களுபகரிப்பது போலவே பிறருமுபகரிக்க நல்வார்த்தையும், அவர்களுடைய கல்யாணகுணங்களைக் கீர்த்திக்கையும் வாசககைங்கர்யம். பகவத்பாகவதர்களுக்கும் ப்ரணாமாதிக

ளையும், ஸமஸ்த உபசாரங்களையும் பண்ணுகை காயககைங்கர்யம்; ஆகிறவிம்மூன்றுலேயும், யதாபலமனுஷ்டித்து தங்கள் சக்தி எம் மாத்திரம் இருக்குமோ வஞ்சனையின்றிக்கே அம்மாத்ரம் நடத்திக் கொண்டு, ஈச்வரன் ஸ்ரீமந்நாராயணன் ஆகிற ஈச்வரன், சேஷியாய் சந்தன குஸுமதாம்பூலாதிகளைப்போலே ஸமஸ்தசேதன அசேதனங்களையும் தன்னுடைய இஷ்டவிநியோக அர்ஹமாகப்படைத் துள்ள சேஷியாகவும். நியந்தாவாய் ஸ்வபுத்யதீநமாகசேதன அசேதனங்களுடைய எல்லா வியாபாரங்களும் உண்டாகும்படியிருக் கும் நியந்தாவாகவும், ஸ்வாமியாய் சேதன அசேதனங்களைத் தனக்கிஷ்டவிநியோக உசிதவஸ்துக்களாகப் படைத்தவொரு ஸ்வாமி ஆகவும், சரீரியாய் "யஸ்யாத்மா சரீரம்" என்றபடி தங்களை சரீரமாக உடையனான ஆத்மாவாகவும்,வ்யாபகனாய் விஷ்ணுசப்தத் தாலே சொல்லுகிற அந்தர்வயாப்தி பஹிர்வயாப்திகளையுடைய வ்யாபகனாகவும், தாரகனாய் தன்னுடைய ஸ்வரூபஸங்கல்பங்களை யொழிந்தபோது சேதனுசேதனங்களுக்கு ஸத்தாஹாநி பிறக்கும் படி நியமேந அவற்றைப்பற்றி நிற்கும் தாரகன்ஆகவும்,ரக்ஷகனாய் சேதனுசேதனங்களுக்கு அந்தர்யாமியாய்க்கொண்டு பாலனம் பண்ணுகையும் இஷ்ட, அனிஷ்ட, ப்ராப்தி பரிஹாரங்களைப்பண் ணிக் கொடுக்கையும் ஆகிற ரக்ஷணத்தைப்பண்ணும் ரக்ஷகன் ஆக வும், போக்தாவாய் சேதனுசேதனங்களுக்கு அந்தர்யாமியாயிருந் தாலும் சேதனர் போக்தாக்களன்றிக்கே தானே போக்தாவாய் இருக்குமவன் என்றும், தங்களையனுபவிப்பான் அவனென்றுமி றே இவர்கள் நினைவு; வத்ஸலாரஸானுபவமிறே அவனுக்கிங்குள் ளது. "அஹமந்நம்" என்று இவன் அந்நமாகவும், "அந்நாத:" என்று அவன் போக்தாவாகவுமிறே ஶ்ருதி சொல்லிற்று. அவன் அந்நமானால் இவன் "அந்நாத:" என்று போக்தாவாயிருக்கும்; பகவதனுபவமிறே இவன் பண்ணுமது! ஶேஷரூபபோக்த்ருத்வமில்லையே! "ஜ்ஞாநியை விக்ரஹத்தோடே ஆதரிக்கும்" என்றிறே இவர் தாமே ஸ்ரீவசனபூஷணத்திலருளிச் செய்தது. பத்ததசையில் சேதனனுடைய போக்த்ருத்வம் கர்மானுகுணமா யிருக்கும். பத்ததசையோடு முக்ததசையோடு வாசியற ஈஶ்வர னே போக்த்ருத்வமாயிருக்கும் "லோகவத்து லீலாகைவல்யம்" என்கிறபடியே இந்த விபூதியிலனுபவம் ஈஶ்வரனுக்கு இச்சாப்ரயு க்தமாயும்,லீலாப்ரயுக்தமாயுமிருக்கும்ஆகையாலேபோக்தாவாகவும் ஸர்வஜ்ஞனாய் "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" என்றபடி ஸமஸ்தத்

தையும் அறியும் ஸர்வஜ்ஞநாகவும், ஸர்வ ஶக்தியாய் "பராஸ்ய ஶக்தி:" என்றும் "ஜகத்ப்ரக்ருதிபாவோ யஸ்ஸா ஶக்தி:" என்றுஞ் சொல்லுகிறபடியே அகடிதகடநாஸாமர்த்யாதி விவிதங்களாய் ஜகத்ப்ரக்ருதிபாவமாயிருக்குள்ள ஸர்வசக்தி ஸம்பன்னன் ஆகவும், ஸர்வ ஸம்பூர்ணனாய் "ஸர்வபூர்ணஸ்ஸ:" என்றபடி ஸ்வரூபாதிகளாலேயும், ஐச்வர்யாதிகளாலேயும் என்றாலும் ஒன்றுங் குறைவில்லாதிருக்கும் அந்த ஸம்பூர்ணனாகவும், அவாப்த ஸமஸ்த காமனாயிருக்கிற "உத்பத்யந்தே-ப்ரலீயந்தே" என்று பிறக்கவும் நசிக்கவுமான சேதனமனோரதங்கள் போலன்றிக்கே, ஸ்வஸங்கல்பாயத்தப்ராப்தி பொருந்துமந்த ஸமஸ்தமனோரதங்களுடையனாகும் அவாப்தஸமஸ்தகாமன் ஆகவும்,இருந்துள்ளஇவற்றில் ஶேஷித்வ-ஸ்வாமித்வ-ரக்ஷகத்வ- ஸர்வஜ்ஞத்வஸ்ர்வஶக்தித்வங்களாகிறவிவை ப்ரணவத்தில்"தஸ்யப்ரக்ருதி" ஆகிற அகாரத்திலே ப்ரதிபாதிக்கப்பட்டவை. ஸர்வஸம்பூர்ணத்வ-அவாப்த ஸமஸ்தகாமத்வங்கள் நம: பதத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டவை, நியந்த்ருத்வ-ஶரீரத்வ-வ்யாபகத்வ-தாரகத்வ போக்த்ருத்வங்களாகிறவை. சதுர்த்தி விசிஷ்டமான நாராயணபதத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டவை. ஆகாரத்தையும், ஈச்வரனுடைய விக்ரஆகாரங்களையும், ஆகாரம் ஸ்வரூபம். தான்அவனுக்கு மகாரவாச்யனாய்சேதநனாகிறதான்கீழ்ச்சொன்ன ஆகாரங்களையுடையனான அகாரவாச்யனாகும் ஈச்வரனுக்கு, சேஷமாய் சந்தனகுஸுமதாம்பூலாதிகளைப்போலே இஷ்டவிநியோகார்ஹமாயிருக்கும் சேஷம்ஆகவும், நியாம்யமாய் ஈச்வரஜ்ஞானாதீனமான ஸமஸ்த வ்யாபாரங்களையுடையனாகிற நியாம்யம் ஆகவும், ஸ்வம்மாய் ஸ்வாமியான ஈச்வரனுக்கு ஸ்வத் ஆகவும், அதாவது உடைப்பொருளாகவும், சரீரமாய் சரீரியான அவனுக்கு சரீரமாகவும், வ்யாப்யனாய் வ்யாபகனான அவன் வ்யாபிகைக்கு யோக்யமான பதார்த்தமாகும் வ்யாப்யன் ஆகவும், தார்யமாய் அவனுடைய ஸ்வரூபஸங்கல்பங்களை யொழிந்தபோது தன் ஸத்தாஹாநி பிறக்கும்படியிருக்கும் தார்யம் ஆகவும், போக்யமாய் ப்ராதந்த்ரயாதிகளாலே போக்ய பதார்த்தம் ஆகவும், அஜ்ஞனாய் ஜ்ஞானாதிக்யமுண்டாயிருந்ததேயானாலும், ஈச்வரனைப் பற்ற தேஹாத்மாபிமானியைப் போலேயிருப்பனொருவனாகையால் அஜ்ஞன்ஆகவும், அசக்தனாய் எத்தனை ஜ்ஞானாதிகள் இருந்தாலும் ஸ்வரக்ஷணத்தில் சக்தியில்லாதவனாயிறே. ப்ரபன்னனுக்குஸ்வரூபவிருத்தமிறே

ஸ்வாகஷணே ஸ்வான்வயம். அதனாலே அசக்தன் ஆகவும், அபூர்ணனாய் கைம்முதலில்லாத தரித்ரன் ஆகவும், அகிஞ்சநம் ஸ்வரூபமிறே இவனுக்கு. ஸாபேக்ஷனாய் அவன் கைபார்த்திருக்கும் அபேக்ஷாஸஹிதன் ஆகவும், இருக்கிற ஆகாரத்தையும் கீழ்ச்சொன்ன விதங்களில் யதார்த்தப்ரகாரத்தாலேயிருக்கிற சேதநன் ஆகிற தன்னுடைய ஆகாரத்தையும், அதாவது ஸ்வரூபத்தையும், அநுஸந்தித்துக்கொண்டு அநுஸந்தானம் பண்ணிக்கொண்டு, "களைவாய் துன்பம் களையாது ஒழிவாய் களைகண்மற்றிலேன்;' என்று துன்பங்களைவாய்-துக்கங்களைப் போக்குவாய், களையாதொழிவாய் போக்காமல் விடுவாயாகில், களைகண்மற்றிலேன்-கதிவேறயில்லாதவனாவேன் என்பதாக, அதவாது ரக்ஷகாந்தர கதியில்லேன் என்றபடி; உபாயத்தில் ஸர்வபரங்களையும் அவன் பக்கலிலே போகட்டு ஸித்தோபாயபூதனான ஈச்வரன் விஷயத்தில் தன்னுடைய ஆத்மாத்மீயங்களின் பரங்களையும் வைத்து, நிர்பரனாயிருக்கை. பரமில்லாதவனாயிருப்பது. (௩௯)

அவ- இதன் மேல் ஆசார்யாபிமானத்தினுடைய வேஷப்ரகாரத்தை அருளிச் செய்கிறார். (ஆசார்யாபிமானமாவது) என்று தொடங்கி.

௪0 ஆசார்யாபிமானமாவது இவையொன்றுக்கும் சக்தனன்றிக்கேயிருப்பானொருவனைக் குறித்து, இவனுடைய விழவையும், இவனைப்பெற்றவீச்வரனுக்குண்டான ப்ரீதியையுமனுஸந்தித்து, ஸ்தனந்தய ப்ரஜைக்கு வ்யாதியுண்டானால் தன் குறையாக நினைத்து ஔஷத ஸேவையைப் பண்ணும் மாதாவைப்போலே இவனுக்காகத் தான் உபாயானுஷ்டானம் பண்ணி ரக்ஷிக்கவல்ல பரம தயாளுவான மஹாபாகவதனபிமானத்திலேயொதுங்கி "வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டும்" என்று சொல்லுகிறபடியே ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் அவனிட்ட வழக்காக்குகை.

40. ஆசார்யலக்ஷணமாவது:— ஹம்ஸத்தின் லக்ஷணத்தையுடையவராவர்கள் ஆசாரியாள். அதாவது ஈச்வரன் பிரம்மாவுக்கு வேதப்ரதானம் பண்ணும்போது ஹம்ஸரூபமாகவிருந்ததற்கடி ஆசாரியன் சேதனனுக்கு ஜ்ஞானப்ரதானம் பண்ணும்போது ஹம்ஸலக்ஷணத்துடனிருக்க வேணு

ஷ்யா. அதாவது ஆசார்யாபிமானம் ஆவது-ஆசார்யனுடைய அபிமானம் ஆகிறது, இவையொன்றுக்கும் கர்மயோகாத்யுபாயங்கள் நான்கிலும் ஒன்றுக்குங்கூட, அன்றிக்கே-ஆர்த்தவேஷமாகவும் த்ருப்த வேஷமாகவும் இருந்துள்ள ப்ரபத்தியின் ப்ரகாரமிரண்டிலும் ஒன்றுக்குங்கூட என்னிலுமாம்; ப்ரபத்தியையும் *கூட்டிச் சொன்னது- "மஹாவிச்வாஸபூர்வகம்" என்னும்படி அவ்யபிசாரருசியும், மஹாவிச்வாஸமும், "த்யாகஸ்வீகாரஸித்யங்கம்" என்றபடி ஸித்தோபாயவரணாங்கமாகிற த்யாகமும், ஸ்வீகாரமுமாகிற விவையுடையனாயிருக்கிற விருப்பு அரிதாகையாலே சொன்னபடி, ஸித்திர்பவதிவாநேதி" என்கிறபடியே- கேவல பகவத்ஸ்வரூபத்தையும் தன்னுடைய ஸ்வரூபத்தையும் பார்த்தால் அவன் ஸ்வரூபமானது-ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டமாயும், தன் ஸ்வரூபமானது, தோஷவிசிஷ்டமாயுமிருக்கையாலேபயம் வர்த்திக்கும். அவனுடைய க்ருபாதி குணங்களைப்பார்த்தால் "என்னடியார் அது செய்யார்" என்றபடி இவன்றனக்கெத்தனை தோஷங்களுண்டாயிருந்தாலும் நிர்பரனாயிருக்கைக்கு உடலாகையாலே இந்த பயஅபயங்களிரண்டும் யாவச்சரீரபாதமிருக்கையாலே- "நஸம்சய:" என்றும், "கச்சதா" என்றும் "தேவுமற்றறியேன்" என்றுஞ் சொல்லுகிறபடியே ஸ்ரீ சடக்ருக்னாழ்வான் மதுரகவிகள் போலேயிருக்கையே ஸ்வரூபமிறே! சக்தனன்றிக்கே 'ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" என்றும் "சாந்தோதாந்த: என்றும் சொல்லுகிறபடியே இந்த்ரிய ஜயமுதலான குணங்கள் கர்மாதிகளுக்கு வேண்டுமவைகளாலும் சிரகால ஸாத்யங்களாகையாலும், ஸ்வரூபவிருத்தங்களாகையாலும், கர்மாதிகளைச்செய்யச் சக்தனன்றிக்கே யிருக்கை,

---

மென்றே. ஹம்ஸமானது ஶுத்த வெள்ளை நிறமாகையாலே, இவரும் ஶுத்தஸ்வபாவராயிருப்பர். அதுக்கு கமனஸாதனமான இரண்டு பக்ஷங்கள் போல் இவருக்கும் கமனஸாதனம் ஜ்ஞாநாநுஷ்டானங்கள். ஹம்ஸமானது சேற்றில் கால்வையாதே தாமரைமலரிலிருக்குமாப்போல, இவரும் ஸம்ஸார அள்ளலில் கால்வையாதே மானஸபத்மத்தில் மனதை செலுத்துவர். அதுபாலும் நீரும் கலந்துவைத்தால் பாலையெடுக்குமாப்போலே, இருவரும் அஸார அல்பஸாரமான சாஸ்த்ரங்களை விட்டு ஸாரதமமான சாஸ்திரத்தை பஜிப்பர்- அதின் நடை அழகாய் ஒரேவிதமாயிருக்குமாப்போலே, இவரும் ஶ்ரேஷ்டமான ஆசாரத்தில் ஊன்றி அதில்குறைவு ...ராமலிருப்பர். கடலில் அலைகள் மோதினாலும் அதற்குப்பின் வாங்கா.

ப்ரபத்திக்கும் அப்படியே மஹா விச்வாஸாதிகளுண்டாயிருக்கை யரிதாகையாலே சக்தியுடையவனன்றிக்கே யிருக்கை, இருப்பான் ஒருவனைக்குறித்து இப்படியிருக்குமவனொருவனைக்குறித்து, குறித்தல், கருதுதல், மதித்தல், இவனுடைய விழவையும் "அநாதிமாயயா ஸுப்த:" என்றபடி அநாதிகாலத்தில்நின்றும் ஸம்ஸார ஸமுத்ரத்திலே அழுந்தி துக்கப்படுகிற இச்சேதநனுடைய பகவதலாப நஷ்டியையும், இவனைப்பெற்றால் அந்த சேதநனைத் தம் உபதேசாதிகளாலே திருத்தி ஈச்வரனுக்கு ஒரு ஆபரணம் போலே ஸமர்ப்பிக்க அவனிவனைப்பெற்றால், ஈச்வரனுக்குண்டான நிர்த்தநிகள் தனலாபத்தில் உகக்குமாப்போலே ஈச்வரனுக்குண்டாகும், ப்ரீதியையும் அநுஸந்தித்து இச்சேதனன் விஷயப்ரேமத்தையும் ஆசார்யனாகிற தான் அநுஸந்தானம் பண்ணி, ஸ்தனந்தய ப்ரஜைக்கு வ்யாதி உண்டானால் முலையுண்ணும் சிசுவுக்கு துர்பலமாக நோயுண்டானால், அது தன் குறையாக நினைத்துத் தான் ஔஷத ஸேவையைப் பண்ணும்மாதாவைப்போலே அந்த துர்பல நோய் தன்னுடைய அபத்யத்தாலே வந்ததன்றோ? என்று நினைத்துத் தாயாராகிற தான் மருந்துண்ணுமந்த தாயைப் போலே, இவனுக்காகத்தான் உபாயானுஷ்டானம் பண்ணி, இந்த சேதனன் நிமித்தமாக ஆசார்யனாகிற தான் ஈச்வரனைக் குறித்து ப்ரபத்யுபாய அநுஷ்டானம்பண்ணி வாரணத்துக்குமுட்பட இவனுக்கு அதிகாரமில்லாமையாலே தான் ப்ரபத்திபண்ணி என்று கருத்து, ரக்ஷிக்கவல்ல பரமதயாளுவான மஹாபாகவதன் அபிமானத்திலே ரக்ஷிப்பதற்கு ஈச்வரனைப்போலே ஸமர்த்தனாய், அதாவது மந்த்ரத்தையும் மந்த்ரார்த்தத்தையும், "திருத்திப்பணி கொள்வான்" என்றபடி ததனுஷ்டானத்தையும் உபதேசித்து

மல் தன் ஆகாரமாகிய மத்ஸ்யத்தையே அது நாடியிருக்கும். இவரும் ஸம்ஸாரத்திலிருக்கும்போது தாபத்ரயாதிகளுக்கு இடையாமல் மத்ஸ்யாவதாராதிகளையே த்யானித்திருப்பர். அது தன் குஞ்சுகளுக்கு வாய்க்கடங்கின இரைதேடி கொடுக்குமாப்போலே, இவரும் ஸாத்மிக்க ஸாத்மிக்க உபதேசிப்பர். தன் கதியை குஞ்சுகளுக்கு பழக்குமாப்போலே, இவரும் தன் அனுஷ்டானத்தை ஶிஷ்யனுக்கு நடத்திக்காட்டுவர். ஆகையால் இவர்களை பரமஹம்ஸர் என்று சொல்லுவது ஆன்றோர் மரபு. இவர்களுடைய ஜ்ஞானம் மயர்வற்றதாய் சாஸ்திர ஆராய்ச்சியில் சோர்வற்ற ஆழ்ந்த கருத்தையுடையதாயும், "குணம் நீர்நமது" என்கிற அஹங்கா

ரக்ஷிப்பதற்கு ஸமர்த்தனுயென்கை. ரக்ஷிக்கும்போது-"ஆந்ருஶம்ஸ்யம்பரோ தர்ம:" என்கிறபடி பரதுக்க அஸஹிஷ்ணுத்வரூபையால், க்யாதிலாபாதி நிரபேக்ஷையாயிருக்கிற க்ருபையையுடையனுய், "ஆகாரத்ரய ஸம்பந்ந: என்றபடி- அநந்யார்ஹ சேஷத்வாதி ஆகாரத்ரய ஸம்பத்தியையும், ததனுரூபமான ஜ்ஞான அநுஷ்டான ஸம்பத்தியையுமுடையனுய் மகாபாகவதனுகிற ஆசார்யனுடைய அபிமானத்திலே, ஒதுங்கி 'ஆசார்யஸ்ஸஹரிஸ்ஸாக்ஷாத்' என்றும், "பிதகவாடைப்பிரானுர் பிரமகுருவாகிவந்து" என்றும் "ஆசார்யாபிமாநமேயுத்தாரகம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஆசார்யனே தெய்வமாகவும், ததபிமாநமே ஸம்ஸாரமாகிற கடலை கடக்கைக்கு ஸாதனரூபமாகிறதோணியாகவும்நினைத்துக்கொண்டு மரக்கலங்களை சேர்ந்தாப்போலே பாதந்த்ரனுய் ஒதுங்கி, "வல்ல பரிசு வருவிப்பரேல் அதுகாண்டும்" என்று சொல்லுகிறபடியே விஷ்ணுசித்தர் தம்முடைய ஸ்வாமியை யாதொருபடி ஸமர்த்த ப்ரகாரமாக என்று தம்முடைய கண்வட்டத்துக்கு வருவிப்பாராகில் அப்போதைக்கு அவ்விஷயத்தைக் காண்போம் என்று நாய்ச்சியார்—தம்முடைய தகப்பனுரான விஷ்ணுசித்தரை ஆசார்யாக நினைத்து ச்ரேஷ்டமான பகவத்ப்ராவண்யத்தைவிட்டுப்பாதந்த்ரையாய் அவரபிமாநத்திலேயொதுங்கி வர்த்தித்தாப்போலே, ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் தன்னுடைய ஸகலமான ப்ரவ்ருத்தி

---

ராதிகளற்றதாயும் காமக்ரோதாதிகள் கலசாததாயும், ஆர்ஜவம், பொறுமை, தூய்மை, வாய்மை, க்ருபை முதலிய அரியகுண பூர்த்தியையுடையதாயும், வைராக்கியம் இதர விஷயங்களில் வெறுப்பும் விருப்புமற்றதாயும் " முனியார் துன்பங்கள் முந்தினுமின்பங்கள்மொய்த்திடினும் கனியார் மனம் என்பதாயும் "இடரான ஆக்கையிருக்க முயலார் மடவார் மயக்கின் மயங்கார்" என்னும்படி கலக்கமற்றதாயும் "சோதியராவின் பின் போந்தாரையன்றிற் தொழேன் உடலைக்காதியராவினும் பொன்மா மகுடம் கவிக்கினும்" என்னும்படித் துணிவு உடையதாயும், பக்தி நித்தமாய் தைலதாரையைப்போல அவிசின்னமுமாயிருக்கும்.

இவர்களுக்கு ஏற்பட்ட திருநாமங்களே, இவர்களுடை குணங்களை எடுத்துக்காட்டுவதற்குப் போதிய சான்றுயிருக்கிறது. அவைகளாவன ஆசாரியன், தேசிகன், குரு, ஆசான், மெய்ஞானி, பகவர், தீர்த்தர், அடிகள், புங்கவர், பண்டிதர், பட்டாரகர், உத்தாரகர், சோதிகன், கடகர், உபகாரகர் முதலியன,

களையும், நிவ்ருத்திகளையும் அதாவது— உபாதேயமான அநுஷ்டான ப்ரவ்ருத்தியெல்லாவற்றையும் த்யாஜ்யமாகிற அநுஷ்டான நிவ்ருத்தியெல்லாவற்றையும் என்றபடி. அதவா— ஸாமாந்யேந வுண்டான ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளெல்லாவற்றையும் சொல்லவுமாம். அவனிட்ட வழக்கு ஆக்குகை. இவையிரண்டும் ஆசார்யனுடைய நியமநமன்றோ என்றிறே, இவனுடைய வ்யவஹாரமிருப்பது! அத்தால் அவற்றையவனுதீனம் பண்ணித்தான் அவ்வாசார்யனுக்குப் பாதந்த்ரனாயிருக்கிற வகுப்பைச் சொன்னபடி.

(அவ.) இந்த ஆசார்யாபிமாநம் ஸ்வதந்த்ரோபாயம்என்பதை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்— (எம்பெருமான்) என்று தொடங்கி.

ரூ-சக. எம்பெருமான்தனித்து நித்யஸித்தப்ராப்யனுகா நிற்கச்செய்தே ஸகலதேவதாந்தர்யாமியாய்க்கொண்டு ப்ராப்யனுகிறப்போலே இவ்வாசார்யாபிமாநமும் தனியேயுபாயமாகா நிற்கச்செய்தேயும் எல்லாவுபாயங்களுக்கும் ஸஹகாரியுமாய் ஸ்வதந்த்ரமுமாயிருக்கும்.

(வ்யா.) அதாவது— எம்பெருமான் தனித்து - ஈச்வரனுனவன் அத்விதீயமாக, நித்யஸித்தப்ராப்யனுகா நிற்கச்செய்தே - என்றுமொக்க ஸித்தமான உபேயபூதன் ஆகி நிற்கச்செய்தும், ஸகல தேவதாந்தர்யாமியாய்க்கொண்டு ப்ராப்யன் ஆகிறப்போலே - ஸமஸ்த தேவதைகளுக்குள்ளே அந்தர்யாமியாயிருந்துகொண்டு அவ்வோதேவதைகளை வணங்குமவர்களுக்கு ஸ்வயமேவ உபேயபூதன் ஆகிறதுபோலே, இவ்வாசார்யாபிமாநமும் - இந்த ஆசார்ய அபிமாநமாகிற உபாயமும், தனியே உபாயமாக நிற்கச்செய்தேயும் - ப்ரத்யேகமானதொரு ப்ரகாரமாக இருக்கச்செய்தேயும், எல்லா உபாயங்களுக்கும் ஸஹகாரியும் ஆய் - "குருவக்த்ரபூர்வகம்" என்றபடி கர்மாதி உபாயசதுஷ்டயத்துக்கும் ஸஹகரிக்குமதாகியும், அதாவது அங்கமாகியும் என்றபடி; ஸ்வதந்த்ரமும் ஆயிருக்கும் - ஸ்வயம்ஸாதனமுமாயிருக்கும். ப்ரபத்திதான்— கர்மாதிகள் மூன்றுக்கும் அங்கமாய், ஸ்வதந்த்ரஉபாயமுமாயிருக்குமாப்போலே இந்த ஆசார்யஅபிமாநமும் கர்மாதிகள் நான்குக்கும் அங்கமாய், ஸ்வதந்த்ர உபாயமாயிருக்கைக்குக் குறையில்லையிறே.

இப்படி உபாயஸ்வரூபம் ஐந்துபடிபட்டிருக்குமதை அருளிச்செய்தாராயிற்று.

(அவ.) இனிமேல் விரோதி ஸ்வரூபத்தை விவரிக்கிறார்— (விரோதிவர்க்கத்தில்) என்று தொடங்கி.

மூ-சஉ. விரோதிவர்க்கத்தில் ஸ்வரூபவிரோதியாவது தேஹாத்மாபிமாநமும், அந்யசேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமும்.

(வ்யா.) அதாவது — விரோதிவர்க்கத்தில் ஸ்வரூபவிரோதியாவது - விரோதிபஞ்சகத்திலும் வைத்துக்கொண்டு ஸ்வஸ்வரூபத்துக்கு அதாவது ஆத்மஸ்வரூபத்துக்கு விரோதி ஆகிறது; தேஹ ஆத்ம அபிமாநமும் "தேஹாஸக்தாத்ம புத்தி:" என்றபடி தேஹத்துக்கும் ஆத்மாவுக்கும் பேதம் சொல்லாதே, "அநாத்மந்யாத்ம புத்திர்யா" என்று அசேதனமாய், அநித்யமுமான தேஹமே ஆத்மா என்கிற அபிமானமும். மகாரத்தில் ப்ரதிபாதிக்கிற அர்த்த விசேஷத்துக்கு ப்ரதிகோடியான விரோதியிறே! இந்த தேஹாத்மாபிமாநந்தான். அந்யசேஷத்வமும் "இதரசேஷத்வ நிப்ருத்தேத்" என்கிறபடியேஸ்வதஸ்ஸித்தசேஷியாகிய எம்பெருமானுக்குசேஷம் என்பதைத் தவிர்த்து அவனுக்குப்புறம்புள்ளவர்பக்கல் சேஷம் என்றிருக்கையும். உகாரத்தில் ப்ரதிபாதிக்கிற அர்த்தவிசேஷத்துக்கு ப்ரதிகோடியான விரோதியிறே இந்த அந்யசேஷத்வந்தான். ஸ்வாதந்த்ர்யமும்,"ஸ்வ ஸ்வாதந்த்ர்யாந்தோ யதி ஸ்யாத்" என்று ஈச்வரனே ஸ்வதந்த்ரபூதன், நாம் அவனுக்கு ஸர்வப்ரகாரபரதந்த்ரர் என்கிறதை விட்டு, நானே ஸ்வதந்த்ரபூதன் என்கிற அஹங்காரமும்,அகாரத்தில் ப்ரதிபாதிக்கிற அர்த்தவிசேஷத்துக்கு ப்ரதிகோடியான விரோதியிறே! இந்த ஸ்வ ஸ்வாதந்த்ர்யந்தான். ஆக, தேஹாத்மாபிமாநாதி த்ரயம் ஸ்வரூபவிரோதியாகக்கடவது.

(அவ) ஈச்வரஸ்வரூபவிரோதியை அருளிச்செய்கிறார்,(பரத்வ விரோதியாவது) என்று தொடங்கி.

மூ சரு. பரத்வ விரோதியாவது— தேவதாந்தரபரத்வப்ரதிபத்தியும், ஸமத்வப்ரதிபத்தியும், க்ஷுத்ரதேவதாவிஷயத்தில் சக்தியோகப்ரதிபத்தியும், அவதார விஷயத்தில் மானுஷப்ரதிபத்தியும், அர்ச்சாவதார விஷயத்தில் அசக்தியோகப்ரதிபத்தியும்.

(வ்யா.) பரத்வ விரோதி ஆவது-பரத்வமான ஈச்வரஸ்வரூபத்க்கு விரோதி ஆகிறது, தேவதாந்தர பரத்வ ப்ரதிபத்தியும் "ய:

பர:'' என்று ஸர்வேச்வரனுக்கு அஸாதாரணமாகப் பரத்வம் ப்ரதி பாதியா நிற்கச்செய்தேயும், "ஹிரண்யகர்ப:'' என்றும், "ஈஸந்த சாஸத்'' என்றுஞ்சொல்லுகிற வாக்யங்களாலே தேவதாந்தரங்க ளுக்கு "ஸ ஆத்மா'' என்னும்படி சரீரசரீரியாவத்தாலே அர்த்தத் தை ப்ரதிபாதியாதே அவர்களுக்குப் பரத்வம் உண்டு என்று ப்ர திபாதிக்கிற ஜ்ஞாநமும், ஸமத்வ ப்ரதிபத்தியும் "ஸத்ப்ரஹ்மா'' இத்யாதி வாக்யத்தாலே ஸஹபடிதனானவன் என்கிற மாத்ரங் கொண்டு, ஸாமாநாதிகரண்யத்தாலே அர்த்தத்தை ப்ரதிபாதியா தே ஸமனாகச் சொல்லுகிற ஜ்ஞாநமும், க்ஷுத்ரதேவதா விஷயத் தில் சக்தியோகப்ரதிபத்தியும் க்ஷுத்ரதேவதைகள் என்று ப்ரஹ்ம ருத்ராதிகளைச் சொல்லுதல்; அன்றிக்கே, ருத்ராம்சபார்வத்யம்சங் களுண்டான அல்ப தேவதைகளாகவுமாம். க்ஷுத்ரர் என்றது தாங்களும் க்ஷுத்ரராய், அநித்யங்களாய், அஸ்திரங்களாய், அல் பங்களான பலன்களைத் தருமவர்கள் என்னுமத்தாலே, இப்படி யிருக்கிற க்ஷுத்ரதேவதாவிஷயத்தில் சக்தியுண்டென்று சொல் லுகிற ஜ்ஞாநமும், "பராஸ்ய சக்தி:'' என்று ஸர்வசக்தி ஸம்பந்ந னாய், "ப்ராஜாபத்யம்'' இத்யாதிப்படியே ஆர்த்தாதி சதுர்வித புருஷர்களுக்கும் தர்மாதி புருஷார்த்த சதுஷ்டயத்தையுங்கொடுக் குமிடத்திலும் அவனுக்கு சக்தியில்லை என்று சொல்லுகிற ஜ்ஞா நமும், அவதார விஷயத்தில் மாநுஷப்ரதிபத்தியும் "ஸஹதேவை:'' என்றும், "யஸ்யாம் ஜாத:'' என்றும், "ஆதியஞ்சோதி'' என்றும் சொல்லுகிறபடியே ஸாக்ஷாத்வைகுண்ட வாஸியான ஸர்வேச்வ ரனே "ஸம்பவாமி யுகே யுகே'' என்று ஆச்ரித ரக்ஷணார்த்தமாகத் தமாக வந்து ராமக்ருஷ்ணாதி ரூபேண அவதரித்தான் என்று சொல்லாதே, "ஆத்மாநம் மாநுஷம் மந்யே'' என்றும் "அஹம் வோ பாந்தவோ ஜாத:'' என்றுந்தானே அருளிச்செய்தான் என் கிற உக்திமாத்ரங்கொண்டு அந்த ராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் பண்ணுகிற மனுஷ்யத்வஜ்ஞாநமும், அர்ச்சாவதாரத்தில் அசக்தி யோகப்ரதிபத்தியும் "ந சக்ஷுஷா பச்யதி'' ன்னும்படியிருக்கிற ஸர்வேச்வரன் "பின்னானார் வணங்குஞ்சோதி'' என்று பின்புள் ளாரான ஆச்ரித அநாச்ரித விபாகமற தத்ஸம்ரக்ஷணார்த்தமாக ஸௌலப்யத்தாலே ஸுவர்ண ரஜத தாம்ர தாரு சிலா மிருண்மய மானவற்றைத் திருமேனியாகப் பரிக்ரஹித்து, "ப்ரதிமாஸ்வப்ர புத்தாநாம்'' என்கிறபடி ப்ரஹ்மாதி தேவதைகள் தொடங்கி ஸர் வர்க்கும் கண்காண நின்று ஸர்வபலன்களையும் கொடுக்கும் என்று

நினையாதே, "ததிச்சயா" என்றபடி கேவல ஸ்வாதந்த்ர்யாதிக ளின்றிக்கே பிருக்குமவனைப்போலே இருந்து இச்சேதநருடைய கண்ணுக்கு விஷயமாய்க் கொண்டு நிற்கையை யிட்டு, இந்த பிம் பத்தில் சக்தியில்லை என்று சொல்லுகிற ஜ்ஞாநமும். ஆக, தேவ தாந்தரபரத்வ ப்ரதிபத்யாதி பஞ்சகம் பரஸ்வரூப விரோதியா கக்கடவது.

(43)

அவ. புருஷார்த்த விரோதியாவதேது? என்ன அத்தையுப பாதிக்கிறார்.—(புருஷார்த்த விரோதியாவது) என்று தொடங்கி.

மூ-சச. புருஷார்த்த விரோதியாவது புருஷார்த்தங்க ளில் இச்சையும், தானுகந்த பகவத் கைங்கர்யங்களில் இச் சையும்.

(வ்யா.) புருஷார்த்த விரோதி ஆவது உபாயவிரோதியாகிறது. புருஷார்த்த அந்தரங்களில் இச்சையும், தாபத்ரயங்களிலே முழுகி ஈஶ்வரனுடைய ஸ்வரூப-ரூப-குண-விபூதிகளின் அநுபவகைங்கர் யங்களே ஸமஸ்தவித புருஷார்த்தங்களாக விருக்கச்செய்தே ஐச் வர்யாதி க்ஷுத்ரபலங்களில் இச்சை பிறக்குமதும்; தானுகந்த பகவத்கைங்கர்யங்களில் இச்சையும் 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்றபடி ப்ராவண்யாதிசயத்தாலே இளையபெருமாள் ஸகலவித கைங்கர்யமும் பண்ணும்போது, ஸ்வேஷ்டகைங்கர்யத்தில் அந்வ யம் வந்ததோ என்று பெருமாளுக்குத் திருவுள்ளமாக அத்தை யறிந்து 'க்ரியதாமிதி' என்று விண்ணப்பம் செய்தாப்போலே ஸ்வஇஷ்ட பகவத்கைங்கர்யத்தில் இச்சையும், ப்ரபந்நனுக்கு ஸ்வீ காரத்தில் ஸ்வகதமும் அநுபவத்தில் ஸ்வபோக்த்ருத்வமும் கூடா திறே. ஆக புருஷார்த்த அந்தரங்களிலும், தானுகந்த பகவத் கைங்கர்யத்திலும் இச்சை புருஷார்த்தவிரோதியாகக்கடவது.

(அவ.) உபாயத்துக்கு விரோதிகளானவற்றை அருளிச்செய் கிறார் மேல் (உபாயவிரோதியாவது) என்று தொடங்கி.

மூ. சரு உபாயவிரோதியாவது உபாயாந்தர வைலக்ஷண்யப்ரதிபத்தியும் உபாயலாகவமும் உபேயகௌரவமும் விரோதிபாஹுள்யமும்.

---

45 உபேயகௌரவமாவது.— "ஒழிவில்காலத்தில்" ஆழ்வார் அருளிச்செய்தப்ரகாரம் "வழுவிலா" அடிமைசெய்வதே உபேயகௌரவமா வது. அதாவது இளையபெருமாள்படைவீடென்றும்காடென்றும்பெருமை

(வ்யா.) அதாவது— உபாயவிரோதி ஆவது - ப்ராபகவிரோதி ஆகிறது; உபாயாந்தர வைலக்ஷண்ய ப்ரதிபத்தியும் - ஸ்வயத்நரூபங்களாய், ஸ்வரூபவிரோதிகளாயுமிருக்கிற கர்மாதிகள் மூன்றுக்கும் விலக்ஷணத்தை ப்ரதிபாதிக்கிற ஜ்ஞானமும்; உபாயலாகவமும் - ப்ரபத்யுபாயத்தில் ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திபூர்வக மாநஸஜ்ஞானமித்தனையிறேயுள்ளது என்னும் லகுத்வஜ்ஞானம். அதாவது ஸ்வல்பம் என்கிற ஜ்ஞானமும்; உபேயகௌரவமும் - உபாயாந்தரங்களாலே ஸாதிக்கப்பட்ட பகவத்ப்ராப்தியே அதிகம் என்று சொல்லுமதும்; ஐஶ்வர்ய கைவல்யங்களில் கௌரவஜ்ஞானம் என்று சொல்லும்போது இந்த ப்ரகரணத்துக்குச் சேராதிறே. ஆனாலும் ஒருவேளையிலே ப்ராமாதிகமாகவாவது ஐச்வர்யகைவல்யங்களில் கௌரவப்ரதிபத்தி தோற்றுமென்று தத்விஷயமாக ஒரு யோஜனை சொல்லவுமாம். யத்வா, ஸ்வகதரூபப்ரபதநத்தாலே ஸாதிக்கப்பட்ட பகவத்ப்ராப்தியே அதிகம் என்னுமது என்றும் சொல்லவுமாம். இன்னமும் உபாயவிரோதியாவது என்கிற வாக்யத்துக்கு ஒரு யோஜனை சொல்லவாவது, கீழ் ப்ரதிபாதித்தப்ரபத்திதத்வைவித்யத்தினுடைய ஸ்வரூபவைலக்ஷண்யத்தை தர்சிப்பித்த அநந்தரம் ஆசார்யாபிமாநமாகிற உபாயத்தை அருளிச்செய்கையாலே, உபாயம் ஆவது ஆசார்யாபிமானம் என்னும் அதுக்கு விரோதி மேல்சொல்லுகிற வர்க்யசதுஷ்டயம் என்றும் தர்சிப்பிக்கிறாராகவுமாம். எங்ஙனே? என்னில், இந்த சரமோபாயத்துக்கு விரோதிஆவது- உபாயாந்தரங்களானகர்மாதி ஸாதனசதுஷ்டயத்யதுக்கும் வைலக்ஷண்யத்தை உபபாதிக்கிறதும், அவ்வுபாயசதுஷ்டயத்தில் சக்தியில்லாதவனுக்கேயிறே. இது ஸௌலபமாக விதிக்

---

சிறுமை பாராதே ஸகல கைங்கர்யங்களையும் புரிந்தாப்போல், திருவாராதனம் திருவலகிடுதல் முதலிய கைங்கர்யங்களில் வாசி தோற்றுதபடி அவைகளில் ருசி பிறக்கவேண்டுவதித்தினையேயாம். ஸ்ரீபரதாழ்வான் படைவீட்டிலே பிரிந்திருந்து செய்தவடிமைகளும் செய்யவேணுமென்று இளையபெருமாளுக்குண்டானதுபோலுமுண்டாகவேணும்.

இத்தைப்பற்றவே ஆழ்வார் 'நின்கோயில்சீய்த்து' என்றும், "வயலணியனந்தபுரம் கடைத்தலை சீய்க்கப்பெற்றால் கடுவினைகளையலாமே" என்றும், 'கொடுவினையேனும் பிடிக்க நீயொருநாள் கூவுதல் வருதல்செய்யாய், உன்றன் திருருவுள்ளமிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறுதும்' என்றருளிச்செய்தார்.

கப்பட்டது என்று நினைத்து இதன் விஷயத்தில் அகாதாரூபலகுத்வமும், இவ்வுபாயத்தால் ப்ராப்தி பலிக்குமோ பலியாதோ என்று சங்கித்து கர்மாதிகள் மூன்றாலேயாதல் ப்ரபத்தியாலேயாதல் பலிக்கும் என்கிற வழியாய் சொல்லும் உபேயகௌரவமும் என்று சொல்லுமதும் ஒருபக்ஷமுண்டிறே. எந்த உபாயமாகவுமாம். 'ஸாஹிப்ரதமஸாதநம்' என்னும்படி பக்தியுண்டானாலிறே பலிக்கும் என்று நிர்வாஹம். "குருதேவ பாம் ப்ராஹ்ம" இத்யாதி. இங்ஙனெல்லாம் யோஜிப்பது, நஞ்ஜீயர் "ஈதெல்லாம் பண்ணவேண்டிற்று உபாயவிரோதி" யென்று பொதுவாக அருளிச்செய்கையாலே. விரோதிபாஹுள்யமும். க்ஷேத்ராணி மித்ராணி என்கிற ச்லோகத்தில் ப்ரதிபாதித்தபடியே, ப்ரபந்நனுக்குச் சேராதவையான விரோதிபாஹுள்யங்களும். ஆக உபாயாந்தர வைலக்ஷண்ய ப்ரதிபத்யாதி சதுஷ்டயமும் உபாயவிரோதியாகக்கடவது.

(அவ.) இனிமேல் ப்ராப்திவிரோதியை அருளிச்செய்கிறார்— (ப்ராப்திவிரோதியாவது) என்று தொடங்கி.

ஸூ சகூ. ப்ராப்திவிரோதியாவது- ப்ராரப்த சரீரசம்பந்தமாய் அனுதாபசூந்யமாய் குருவாய் ஸ்திரமாயிருந்துள்ள பகவதபசார பாகவதாபசார அஸஹ்யாபசாரங்கள்.

(வ்யா) ப்ராப்திவிரோதி ஆவது - பகவத்ப்ராப்திக்கு விரோதி ஆகிறது; ப்ராரப்தசரீரஸம்பந்தமாய் - ஜன்மஹேதுவான ப்ராரப்த கர்மசரீரத்துடனே ஸம்பந்தித்திருக்கையாய், அனுதாபசூந்யமாய்- அனுஷ்டானத்தை ஸ்மரிப்பது; அதாவது பகவதபசாராதிகளை புத்திபூர்வகமாகப் பண்ணுமவனுகையாலே 'பச்சாத்தாபோஸ்த்யதி, என்னும்படியன்றிக்கே, பஶ்சாத்தாபம் லேசமுமில்லாதேயிருக்குமதாய்; குருவாய் 'அவஜாநந்தி மாம் மூடா:' என்றபடி மூடரான என்னை ரக்ஷகன் என்றறியாதே "தாநஹம் த்விஷத:" என்று க்ரூரராய் த்வேஷிக்குமவர்களை அஸுரயோனிகளிலே தள்ளிவிடுவன் என்று கண்ணன்றானே அருளிச்செய்திருக்கையாலே அதிகமாய்; ஸ்திரமாயிருக்கிற - யாவதாத்மபாவியாயிருக்கிற, பகவத் அபசார, பகவான்விஷயத்தில் பண்ணுகிற அபராதங்களும், பாகவதஅபசார- அஹங்காரமூலமாகவும் அர்த்தமூலமாகவும் காமமூலமாகவும் ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்தில் பண்ணும் அபராதங்களும்- அஸஹ்ய அபசாரங்கள்- காரணமின்றிக்கே பகவத்விஷயமென்று

*னும் பாகவதவிஷயமென்றாலுஞ் செவியாலே கேட்கைக்குமுட்பட ஸஹியாதபடியாயிருக்குமிருப்புகள். பகவானாகிற தன் விஷயத்திலும் தன்னுடைய அடியார்கள் விஷயத்திலும் அபசாரங்கள் பண்ணுமவர்களை "க்ஷிபாமி ந க்ஷமாமி" என்றருளுகையால் யாவதாத்மபாவி அபசாரம் நின்றேறபோமித்தனை. ஆகையால் இத்தை நினைத்திறே ஸ்திரமாயிருக்குமென்று அருளிச்செய்தருளிற்றது. அனுதாபசூந்யாதிவிசேஷணத்ரயமும் பகவதபசாராதிவிசேஷ்யத்ரயத்திலும் அந்வயிக்கக்கடவது.*

*(அவ.) பகவதபசாராதித்ரயத்தின் நிலையை அருளிச்செய்கிறார்— (இவை) என்று தொடங்கி.*

ஸூ ௪௭. இவை எல்லாவற்றுக்கும் விரோதி என்று பேராகக்கடவது.

(வ்யா.) *அதாவது— இவை - இந்த பகவதபசார பாகவதாபசார அஸஹ்யாபசாரங்கள் மூன்றுங்,* எல்லாவற்றுக்கும் விரோதி என்று பேராகக்கடவது. *பகவதபசாரத்திலே நாநாவிதமாயும் பாகவதாபசாரத்திலே நாநாவிதமாயும் அஸஹ்யாபசாரத்திலே நாநாவிதமாயுமிருக்குமந்த ஸமஸ்த அபசாரங்களுக்கும் விரோதி என்று பேராகக்கடவது.*

ஸூ ௪௮. அந்நதோஷம் ஜ்ஞானவிரோதியாகக்கடவது, ஸஹவாஸதோஷம் போகவிரோதியாகக்கடவது, அபிமாநம் ஸ்வரூபவிரோதியாகக்கடவது.

(வ்யா.) கீழ் எல்லாவற்றுக்கும் *என்று சொன்ன வாக்யத்தில் முக்யமாயிருந்துள்ள மூன்றம்சங்களை விவரிக்கிறார் மேல் மூன்று வாக்யங்களால் அதாவது—* அந்நதோஷம் ஜ்ஞானவிரோதியாகக்கடவது *துரந்நபக்ஷணதோஷமும் துஷ்ப்ரதிக்ரஹாந்நபக்ஷண தோஷமும் ப்ரபந்நனுடைய ஜ்ஞானத்துக்கு விரோதியாகக்கடவது என்கை. இவற்றில் துரந்நமாவது எது? என்னில்- பகவத்ப்ரபந்நரன்றிக்கே இருக்கிற ப்ராக்ருதருடைய அந்நம் என்கை. துஷ்ப்ரதிக்ரஹ அந்நமாவது எது? என்னில், அபிசஸ்த-பதித-சண்டாள-ம்லேச்சாதிகள்மூலமாக தண்டுலாதிரூபேண வந்த அந்நம் என்கை. யத்வா "ஜாத்யாச்ரய நிமித்தா துஷ்டாதந்நாத் காயசுத்தி:" என்றபடியன்றிக்கேயிருக்கிற அந்நம் என்றுமாம். அன்றிக்கே ப்ரபந்ந*

வேஷத்தை மேலிட்டுக்கொண்டு ஸாதனாந்தரநிஷ்டையை நடத்திக்கொண்டு போகிறவருடைய அந்நம் என்னுமாம். அன்றிக்கே ப்ரபந்நர் என்றிருந்தும் ஐச்வர்யார்த்தமாக சக்திபூஜாதிக்ரியைகளை பண்ணுமவர்களுடைய அந்நம் என்றும் சொல்லவுமாம். யத்வா-தாம் ப்ரபந்நர் என்றிருந்தும் ஆபிஜாத்யாதிகள் தமக்குண்டே என்று அஹங்காராதிகளாலே "மத்பக்தாந் ச்ரோத்ரியோ நிந்தந்" என்றும், 'நிந்தாம் குர்வந்தி' என்றும் சொல்லுகிறபடியே பாகவத தூஷணம் பண்ணுவாருடைய அந்நம் என்றுஞ்சொல்லவமையும். ஸ்வேஷ்டாந்நம், பரேஷ்டாந்நம், நிந்திதாந்நம், தூர்பலாதி விமோசந நமஸ்காராந்நம், சாந்த்யந்நம், தேவதாந்தரபாராந்நம் முதலானவையென்னவுமாம். இவையெல்லாம் ஜ்ஞானவிரோதி என்று சொன்னால்உபாதேயமான அந்நம் மற்றெது? என்னில், கீழ்ச்சொன்னவையெல்லாவற்றுக்கும் ப்ரதிகோடியாய், அபிஜநாத்யஹங்காராதிகளின்றிக்கே ஜ்ஞானானுஷ்டானபரிபூர்ணராய் "ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்ய:" என்றபடி, பரமைகாந்திகளாயிருக்கிற பாகவதர்களுடைய அந்நமே 'தருவரேல்' என்னும்படி உபாதேயம் என்கை. ஸ்வபாவநமிறே! இன்னமும், அந்நதோஷம் என்கிற வாக்யத்துக்கு 'அந்நம் ப்ராஹ்மேதி' என்றும், 'உண்ணுஞ்சோறு' என்றும் சொல்லுகிறபடியே ப்ரபந்நருக்கு ச்ரிய:பதியே தாரகாதிரூபமான அந்நமாகையாலே, தத்வ்யதிரிக்தவிஷயாந்நங்களெல்லாம் தூராந்நங்கள். ஆகையாலே, அவை விரோதியென்று சொல்லுமதொரு யோஜநமுமுண்டு. பகவத்பாகவதவ்யதிரிக்தவிஷயாநுபவரூப அந்ந போஜனத்தாலே லோகத்திலே போகபீடிதனான மனுஷ்யனுக்கு அபத்யாதிகளாலே தாதுக்களானவை தோஷயுக்தமாய், * ஸந்நிபாதாதிகள் பிறந்து, மரணபர்யந்தம் வந்து விரோதிக்குமாப்போலே § அநுகமுமுடிந்து இவனுடைய ஸ்வரூபமும் நசித்தபோமித்தனையிறே. ஆகையாலே, அசனமாமுடியுமாப்போலே தன் ஆத்மஸ்வரூபம் நசியாதபடி வர்த்திக்கை. இங்கே பிள்ளையுறங்காவில்லிதாஸருடைய வ்ருத்தாந்தத்தை ஸ்மரிப்பது. ஸஹவாஸதோஷம் போகவிரோதியாகக்கடவது கீழ் 'அந்நதோஷம்' என்கிற வாக்யத்தில் சொன்ன அதிகாரிகளோடேகூடவர்த்திக்கிற தோஷம் பகவதநுபவகைங்கர்யரூப அநந்யதோஷத்துக்கு விரோதியாமிறே. அபிமானம் ஸ்வரூபவிரோதியாகக்கடவது அபிமானம் அஹங்கார

* ஸந்நிபாதம் - ஜந்நி. § அநுகம் - மோஹம், ஆசை.

*மமகாரரூபாங்கமாகையாலே அந்த அஹங்காரமமகாரங்களிரண்டும் 'த்வயக்ஷரஸ்துபவேத் ம்ருத்யு:' என்றபடி பகவத்சேஷத்வபாரதந்த்ர்யரூபமான ஸ்வரூபத்துக்கு விரோதியாயிறே. அந்நதோஷம் என்கிற வாக்யம் ப்ரணவவிவரணமாகவும், அபிமாநம்என்கிற வாக்யம் நம:பதவிவரணமாகவும், ஸஹவாஸதோஷம் என்கிற வாக்யம் சதுர்த்திவிசிஷ்டமான நாராயணபதவிவரணமாகவும் யோஜித்துச் சொல்லலாயிறே. அபிமாநம் என்கிற வார்த்தை அந்நதோஷம் ஸஹவாஸதோஷம் என்கிற வாக்யங்களுக்கு நடுவே அந்வயிக்கக்கடவது.*

*(அவ) அநந்தரம் அர்த்தபஞ்சகஜ்ஞானம்முன்னாக முமுக்ஷுவானவன் ஸம்ஸாரத்தில் வர்த்திக்கும்தன்னையும் அநுவர்த்திக்க வேண்டியவற்றை ஸாதித்தருளுகிறார்-(இப்படி) என்று தொடங்கி.*

மூ சகூ: இப்படி அர்த்தபஞ்சகஜ்ஞானம் பிறந்து முமுக்ஷுவாய் ஸம்ஸாரத்திலே வர்த்திக்கிறசேதநனுக்கு மோக்ஷஸித்தியளவும் ஸம்ஸாரம் மேலிடாதபடி காலக்ஷேபம் பண்ணும் க்ரமம் வர்ணாச்ரமாநுரூபமாகவும், வைஷ்ணவத்வாநுரூபமாகவும், அசநாச்சாதனங்களை ஸம்பாதித்து ''யதந்ந: புருஷோ பவதி ததந்நாஸ்தஸ்யதேவதா:'' என்கிறபடியே ஸகல பதார்த்தங்களையும் பகவத்விஷயத்திலே நிவேதித்து யதாபலம் பாகவதகிஞ்சித்காரமும் பண்ணி, தேஹதாரணமாத்ரத்தையும் ப்ரஸாதப்ரதிபத்தியோடே ஜீவிக்கையும், வகுந்தியும் தத்வஜ்ஞானம் பிறப்பித்த ஆசார்யன் ஸன்னிதியிலே கிஞ்சித்காரத்தோடே அவனுக்கபிமதமாக வர்த்திக்கையும், ஈச்வரன் ஸன்னிதியிலே தன்னுடைய நீசத்வத்தையநுஸந்திக்கையும் ஆசார்யன் ஸன்னிதியிலே தன்னுடைய அஜ்ஞதையையநுஸந்திக்கையும், ஸ்ரீவைஷ்ணவஸன்னிதியிலே தன்னுடைய பாரதந்த்ர்யத்தை யநுஸந்திக்கையும், ஸம்ஸாரிகள் முன்னில் தன்னுடைய வ்யாவ்ருத்தியையநுஸந்திக்கையும், ப்ராப்யத்தில் த்வரையும் ப்ராபகத்தில் அத்யவஸாயமும் விரோதியில் பயமும் தேஹத்தில ருசியும் ஆர்த்தியும் ஸ்வரூபத்திலுணர்த்

தியும், ஸ்வரக்ஷணத்திலஶக்தியும், உத்தேச்யவிஷயத்தில் கௌரவமும், உபகாரவிஷயத்தில் க்ருதஜ்ஞதையும், உத்தாரக ப்ரதிபத்தியும், அனுவர்த்திக்கையும் வேணும்.

(வ்யா) அதாவது — இப்படி "ஸம்ஸாரியான சேதநனுக்கு" என்று தொடங்கி, 'அபிமாநம்' என்கிற வாக்யத்தளவாக நடுவே ப்ரதிபாதித்த அர்த்தவிசேஷம் எல்லாவற்றையும் திருவுள்ளம்பற்றி இப்படி என்று அருளிச்செய்கிறார்; அர்த்தபஞ்சகஜ்ஞானம் பிறந்து - ஸ்வஸ்வரூபாதிபஞ்சகத்தினுடையவும் அர்த்தஜ்ஞானம் பிறந்து, முமுக்ஷுவாய் - பகவத்ப்ராப்த்யபேக்ஷயா ஸம்ஸாரநிவ்ருத்தியில் இச்சையுடையனாய், ஸம்ஸாரத்திலே வர்த்திக்கிற சேதனனுக்கு - ஸம்ஸாரந்தன்னிலே ப்ரவர்த்தித்துக்கொண்டிருக்கிறசேதநனுக்கு - அதாவது உடம்பு இறக்குமளவும் ஸம்ஸாரத்தில் தானே வர்த்திக்க வேண்டுகையாலே அங்ஙனே வர்த்திக்கிற சேதநனுக்கு, மோக்ஷ ஸித்தியளவும் - ப்ராப்தி ஸித்திக்குமளவும், ஸம்ஸாரம் மேலிடாதபடி - 'மநோவாக்காயை:நம:' இத்யாதி சூர்ணிகையிலே எம்பெருமானார் ப்ரார்த்தித்தாப்போலே கரணத்ரயத்தாலும் பகவதபசாராதிகள் வாராமைக்காக ப்ரார்த்தித்துக்கொண்டிருக்கையே ப்ரயோஜநமாமிறே. அங்ஙனன்றாகில் வீரஸூத்ரப்ராஹ்மணனுக்கு வந்த அநர்த்தமே பலித்து, ஸம்ஸாரத்தில் அந்வயமுண்டாகைக்கு ஹேதுவாய் விடுமிறே. ஆகையால் ஸம்ஸாரத்திலே அந்வயியாமைக்கு காலக்ஷேபம் பண்ணும் க்ரமம் - பொழுது கழியும்படி பண்ணுகிற க்ரமமாவது, வர்ணாச்ரம அநுரூபமாகவும் - தன்னுடையவர்ணத்துக்குத் தகுதியாகவும், ஆச்ரமத்துக்குத்தகுதியாகவும் வைஷ்ணவத்வ அநுரூபமாகவும் - தன்னுடைய வைஷ்ணவத்வத்துக்குத்தகுதியாகவும், அநுலோம ப்ரதிலோம அத்வைவர்ணவிபாகமன்றிக்கே முமுக்ஷுக்களாய் இருப்பார்க்கெல்லாம் சொன்னதாகக்கடவது. § அசந ஆச்சாதநங்களை ஸம்பாதித்து உபாகங்களிலும், அயாசிதஸங்க்ரமணங்களிலும் அபம்ருத்யு தொடக்கமான மஹாபாபாத்யபஹாரமாகப் பண்ணுகிற சாந்திரூபமான கர்மவிபாகத்திலும் ‡ வ்யதிபாதாதிகளிலும் பரணஸமயத்தில் பண்ணுகிற ஜீவப்ராயச்சித்தாதிகளிலும் வ்யாதிபரிஹாரார்த்தமாகப்பண்ணுகிற

§ அசநம் - உணவு, ஆச்சாதநம் - போர்வை.
‡ வ்யதிபாதம் - வ்யஸநபாகம்.

க்ரியாவிசேஷங்களிலும் பண்ணுகிற சாகாதிபஞ்சக கூச்மாண்ட தில கார்ப்பாஸ அய:பிண்டாதி பதார்த்தங்களை தாரபுத்ராதிகளுடைய போஷணார்த்தமாக பரிக்ரஹித்து இப்படித் தன் ஸ்வரூபத்துக்குச்சேராத கார்யங்களைப்பண்ணி அஸமாசாரங்களை ஸம்பாதியாதே, தனக்கு யோக்யமான ஸ்தலங்களிலே பரிசுத்தமான உபாதானவ்ருத்தியாலே அந்நாதிகளை ஸம்பாதித்து, ''யதந்ந: புருஷோ பவதி ததந்நா: தஸ்ய தேவதா:'' என்கிறபடியே புருஷனானவன் எந்த த்ரவ்யத்தை அந்நமாக உடையனாகிறானோ அவனுடைய இஷ்டதேவதைகளும் அந்த அந்நமே உடையராகிறார்கள் என்று சாஸ்திரம் சொல்லுகிற ப்ரகாரமாக ஸகல பதார்த்தங்களையும் பகவத்விஷயத்திலே நிவேதித்து தான் நியதமாக ஆர்ஜித்தஸமஸ்தவஸ்துக்களையும் ''அந்நாத்யம் புரோதாஸ்யஸ்தம்'' என்றும், ''யோமே பக்த்யா ப்ரயச்சதி'' என்றுஞ் சொல்லுகிறபடியே பரிபூர்ணபக்தியோடே பகவத்விஷயமாக ஸமர்ப்பணம் பண்ணி, யதாபலம் பாகவத கிஞ்சித்காரமும் பண்ணி ''ரஸாந் தாஸஸ்ய'' என்னும்படி பகவத்விஷயத்திலே நிவேதனம்செய்த பதார்த்தத்தை தன்னுடைய சக்திக்குத்தக்கதாக அவர்கள் உகக்கும்படி பாகவத விஷயத்திலேயும் ஸமர்ப்பித்து, தேஹதாரணமாத்ரத்தையும் ப்ரஸாதப்ரதிபத்தியோடே ஜீவிக்கையும் ''த்வதீயபுக்தோஜ்ஜிதசேஷ போஜிநா'' என்றும், 'குரோருச்சிஷ்டம் புஞ்ஜீத' என்றும் சொல்கிறபடியே பகவதநுக்ரஹாதிகளுண்டான பதார்த்தமிறே என்று ப்ரதிபத்தியோடே தன்னுடம்பு தரிக்கைக்குத் தக்கமாத்ரமே புஜித்து ஜீவிக்கையும், வருந்தியும் தத்வஜ்ஞானம் பிறப்பித்த ஆசார்யன் ஸன்னிதியில் ஆசார்யன் நித்யஸம்ஸாரியான என்னை விஷயீகரித்து ரக்ஷிப்பதற்காகத் தன்னுடைய பரமக்ருபையாலே அநேகமாக ப்ரயாஸப்பட்டு, ஹிதகாமனாகையாலே ''அறியாதன அறிவித்த அத்தா'' என்கிறபடியே தனக்கு ஸகலார்த்தங்களையும் உபதேசித்து இப்படி வருத்தப்பட்டும் தத்வஜ்ஞாநாதிகள் பிறக்கச் செய்த ஸ்வஆசார்யன் ஸந்நிதியிலே கிஞ்சித்காரத்தோடே ''சரீரம் வஸுவிஜ்ஞாநம்'' என்றபடி தன்னுடைய ஆத்மாத்மீயங்களிரண்டும் அத்தலைக்கு ஸமர்ப்பித்து ந்யஸ்தபானைபின்பு இவன் தனக்கென்னுமதொன்றில்லாமையாலேயும் அத்தலைக்கு சேஷமான பதார்த்தத்தைக்கொண்டேதான் ஜீவிக்குமவனாகையாலேயும் அவனுக்கு சேஷமான பதார்த்தத்தைக்கொண்டு அவன் திருமேனி

யைப் போஷிக்கிறதே கர்த்தவ்யம் என்றபின்னைத்து 'நாகிஞ்சித்குர்வீத' என்றபடி தன்சக்திக்குத்தக்க அளவும் அவனுக்குபகரிக்கிறரூபமான கைங்கர்யத்துடனே; அவனுக்கு அபிமதமாக வர்த்திக்கையும் ஆசார்யன் தன் க்ருஹத்துக்கு வந்தபோது தன்னுடைய பெருமையெல்லாம். அவன் முன்னே சொல்லிக்கொண்டு அவனுக்குத்தளிகைக்குமுற்படக் கொடுக்கைக்கு அதிகாரமில்லாதபடி பண்ணிக்கொண்டிருக்கை அவனுக்கு அநிஷ்டாவஹமாகையாலும் ஸ்வாதிகாரத்துக்குஞ் சேராதபடி வருகையாலும் அப்படியிருக்கையன்றிக்கே தன்னுடைய ஆத்மஆத்மீயங்களிரண்டும் அவனதீனமாகையாலே வஞ்சனையில்லாமல் அவனுக்கு உகப்பாம்படி வர்த்திக்கையும், ஈச்வரன் ஸன்னிதியிலே தன்னுடைய நீசத்வத்தை அநுஸந்திக்கையும் ஆசார்யன் காட்டத்தான் ஈச்வரனைக் கண்டறிந்தவனாகையாலே ஈச்வரனுடைய ஸந்நிதாநத்தில் 'பொருளல்லாத என்னைப் பொருளாக்கி' என்றும் 'நீசனேன் நிறையொன்றுமிலேன்' என்றும் 'அபராதஸஹஸ்ரபாஜநம்' என்றும் 'அமர்யாத:க்ஷுத்ர:' என்றுஞ்சொல்லுகிறபடியே தன்னுடைய தோஷபூயஸ்த்வாதிகளை முன்னே வைத்துக்கொண்டு, இந்த வாசார்யன் முகத்தாலே நித்யஸம்ஸாரியான என்னை நித்யஸூரிக்கு அர்ஹனாம்படி பண்ணுவதே! என்று தன்னுடைய நீசத்தன்மைகளை அநுஸந்தானம் பண்ணுவதும்; ஆசார்யன் ஸன்னிதியில் தன்னுடைய அஜ்ஞதையை அநுஸந்திக்கையும், ஆசார்யனானவன் ஈச்வரனை உபகரித்தவனாகையாலே அஜ்ஞனானவனுக்கு அறியாத அர்த்தங்களைத் தம் உபதேசாதிகளாலே அறியும்படி பண்ணினவனாய் அவன் க்ருபையாலேதான் எல்லாவற்றையும் அறிந்திருந்தாலும் தனக்கு ஒன்றுந்தெரியாதவனைப்போலேயிருந்து தன்னுடைய அஹங்காரத்தாலே ஜ்ஞாத்ருத்வத்தைமுன்னிடாமல் பின்னையும் அவன்ஸன்னிதியில் விசேஷ அர்த்தங்களையும் பெறும்படி தன்னுடைய அஜ்ஞானத்தை அநுஸந்தானம் பண்ணுவதும், ஆசார்யன் முன்னே தன் ஸர்வஜ்ஞத்வம் முன்னிட்டால் ஸ்வரூபஹாநிவரும்என்று கருத்து. ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸந்நிதியில் தன்னுடையபாரதந்த்ரியத்தைஅநுஸந்திக்கையும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆகிறார்கள்- மத்யமபதத்தில் ப்ரதிபாதித்த அர்த்தநிஷ்டையையுடையவர்களாயிருக்குமவர்கள். எங்ஙனேஎன்னில்; தம்முடைய ஆத்ம—ஆத்மீயங்களிரண்டிலும் அஹம்மமத்வங்களின்றிக்கே அவையிரண்டும் பகவததீநமாகவும்

பாகவதாதீனங்களாகவும் அநுஸந்தித்து அவர்களுடைய குணநுபவாதிகைங்கர்யங்களேதாரகபோஷகபோக்யங்களாக நினைத்து 'சலிப்பின்றியாண்டெம்மைச் சென்மசென்மாந்தரம் காப்பர்' என்கிறபடியே, தம்முடைய அதிகாரத்துக்கு ஒரு சலிப்பின்றிக்கேயிருக்குமவர்களாய் 'சமயந்த்யகமத்யுக்ரம்மேகா இவ' என்னும்படி தம்மையாச்ரயிக்குமவர்களையும் அபிஜாத்யாதிகளாலும் அஹங்காராதிகளாலும் ஆத்மாபஹாராதிகளாலும் வரும் அனர்த்தங்களால் ஸ்வரூபத்துக்கு ஒரு சலிப்பும் வாராதபடி பண்ணுமவர்களாய், தத்ததீயவிஷயத்தில் தங்களைப்போலே அநுஷ்டானபர்யந்தமாக நடப்பித்துக்கொண்டு போருபவர்களான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையுடையவர்களாகிற ஸ்ரீவைஷ்ணவர்கள் என்றபடி. இப்படியிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸந்நிதானத்தில் பாரதந்த்ரியத்தையநுஸந்திக்கையாவது- வைஷ்ணவத்வத்தில் அவர்களோடே ஸமானமாகத் தன்னையெண்ணிக்கொண்டு அஹங்காராதிகளாலே ஸ்வரூபஹாநிபிறக்கும்படி வர்த்தியாமல் 'என்னையாளும் பரமர்' என்றும், 'சென்மசென்மாந்தரங்காப்பர்' என்றும், 'தாள்தொழுவார் என்றலைமேலார்' என்றும், 'சிறுமாமனிசர்' என்றும், 'எங்கள் கோக்குடி' என்றும், 'நம்மையாட்கொள்ளும்' என்றும், ஆழ்வார்களும் அவற்றுக்கு அநுகுணமாக ஆசார்யர்களும் அருளிச்செய்த ப்ரகாரத்தாலும் 'மத்பக்தஜநவாத்ஸல்யம்' என்றும், 'மம மத்பக்தபக்தேஷு' என்றும் 'யஸ்மிந்லேச்சேபிவர்த்ததே' என்றுஞ்சொல்லுகிற திருமுகப்படியாலும், தன்னுடைய ஆத்ம—ஆத்மீயங்கள் இரண்டுமே அவர்களதீநங்களாம்படி வர்த்தித்து தத்ஸந்நிதானங்களில் 'இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன்' என்னலாம்படி கேவல பாரதந்த்ர்யத்தை உடையனாயிருக்கையே ஸ்வரூபமென்று அநுஸந்தானம் பண்ணுவதும், யத்வா பாகவதபர்யந்தமான பகவத்பாரதந்த்ர்யத்தைச் சொன்னாலோ என்னில் அப்படிச் சொல்லவொண்ணாது. கீழே ஈச்வரன்ஸந்நிதியில் தன்னுடையநீசத்வத்தை அநுஸந்திக்கையும் என்று அருளிச்செய்திருக்கையாலே இங்கே பாகவதபாரதந்த்ர்யமே அநுஸந்திக்கச்சொல்லுகிறது. ப்ரகரணத்துக்குச்சேருவதும் இதுவேயிறே. ஸம்ஸாரிகள்முன்னில் தன்னுடைய வ்யாவ்ருத்தியை அநுஸந்திக்கையும் 'ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தாய்' என்றும், 'ப்ரஹ்மாத்யாஸ்ஸகலாதேவா:' என்றுஞ்சொல்கிறபடியே அநாதியாக சப்தாதிவிஷயப்ராவண்யத்தாலே பகவத்

விமுகராயிருக்கிற ஸம்ஸாரிகள் நடுவே 'யே கண்டலக்நதுளஸீ நளிநாக்ஷமாலா:' 'மதுஸூதந ப்ரபந்நா:' என்றும், 'பைங்கமலத்தண்தெரியல்பட்டர்பிரான்' என்றும், 'தொடையொத்ததுளவமும் கூடையும் பொலிந்து' என்றுஞ்சொல்லுகிற ஆகாரமான வைஷ்ணவவேஷத்தாலும் ப்ரபந்நதையாலும் ஜ்ஞாநாதிகளாலும் அந்த ஸம்ஸாரிகளில் காட்டில் தமக்குண்டாயிருந்துள்ள மேன்மை வேறுபாட்டை அநுஸந்தானம் பண்ணுவதும், ப்ராப்யத்தில் த்வரையும் காலம்நேர்படில், போகிறது என்றிருப்பதன்றிக்கே 'பேற்றுக்குத்வரிக்கை' என்றபடியே சீக்ரமாக குணாநுபவகைங்கர்யரூபமான புருஷார்த்தம் ஸித்திக்கவேணும் என்கிற த்வரையும், ப்ராபகத்தில்அத்யவஸாயமும் மஹாவிச்வாஸபூர்வகமாக ஸித்தோபாயமான ஈச்வரனைக்குறித்துப் பண்ணின வரணரூபையான ப்ரபத்தியில் அத்யவஸாயமும், யத்வா ஸாதநாந்தரங்களுக்கும் ஸித்தோபாயமான இந்த ப்ரபத்திக்கும் ஸமான ப்ரதிபத்திபண்ணிற்றே! அங்ஙனாகாதே கீழ்ச்சொன்ன ப்ராப்யாநுகுணமாகவிறே இந்தப்ராபகந்தானிருப்பதுஎன்று, ப்ராபகவிஷயத்தில் அத்யவஸாயமுண்டாம்படி வர்த்திக்கையும் என்றும்சொல்லவுமாம். விரோதியில் பயமும் கீழ்சொன்ன விரோதிபஞ்சகத்திலும் பீதியும் அன்றிக்கே ப்ராபகத்தில் அத்யவஸாயமும் என்றவநந்தரம் விரோதியில் பயமும்என்று ஸாதிக்கையினாலேயிந்தவிரோதிப்ராபகம் ஆகிற ஸித்தோபாயத்துக்கு விரோதிகளாகிறவற்றை விவக்ஷிக்கிறதாகக்கடவது: தேஹத்தில்அருசியும் கீழில்சொன்னப்ராப்யப்ராபகங்களில்த்வரையும்அத்யவஸாயமும் உடையனாய் ததநுகுணமாகவிஹிதநிஷித்தவிஷயங்களில் நசையற்றவனாகையாலே விப்ரதிபத்திக்கு மூலமானதேஹத்தின் அருசிபிறக்கும்படி வர்த்திக்கையும்அன்றிக்கே, ஆசார்யனே ப்ராப்யப்ராபகங்களிரண்டும் என்றிருக்குமவனாகையாலே தத்விஷயத்தில் த்வரையும் அத்யவஸாயமுமுண்டாய் அவற்றுக்குவிரோதியான தேஹத்தின் பக்கலில் அருசி பிறக்கும்படி வர்த்திக்கையும் என்றுமாம். ஆர்த்தியும் தேஹத்தில் அருசி தோன்றினபோதே க்ருதக்ருத்யனாகையாலே 'ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்' என்றும், "ஆக்கைவிடும்பொழுதெண்ணே' என்றும் சொல்லுகிறபடியே பர்யுஷிதாந்நோபரிநவநீதந்யாஸம்போலேயிருக்கையன்றிக்கே 'எந்நாள் யானுன்னை யினிவந்து கூடுவனே' என்றும் 'கூவிக்கொள்ளுங்காலம் இன்னுங்குறுகாதே' என்றுஞ்சொல்லுகிறபடியே

இந்த தேஹத்தைச் சடக்கென விடுவித்து தேவரீர் திருவடியில் சேர்த்துக்கொள்ளும் என்கிற ஆர்த்தியையுடையனாயிருக்கையும், ஸ்வரூபத்தில் உணர்த்தியும் பகவத்ப்ராப்தி ஸித்திக்குமளவும் கர்ம, சரீரவிசிஷ்டனாய் ஸம்ஸாரத்தில் வர்த்திக்குமவனாயிருக்கையாலே குணத்ரயஸம்ஸர்க்கத்தாலும் ப்ராக்ருதஸம்பந்தத்தாலும் ஸஹவாஸ தோஷத்தாலும் காதாசித்கமாக தாரபுத்ராதிகளாலும் அஹங்காராதிகள் பிறந்து 'விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையுஞ் செறும்' என்னும்படி பகவதபசாராதிகள் ஸம்பவிக்குமாகையாலே இப்படியான வ்யவஹாரங்களாலே தன் ஸ்வரூபத்துக்கு ஹாநி வாராதபடி ஸ்வரூபத்தில் ஸதா தெளிவுடையவனாயிருக்கையும்; அன்றிக்கே ஸ்வரூபத்தில் உணர்த்தி ஆவது- ஆசார்யோபதேசமடியாக வந்த அர்த்தவிசேஷங்களாலே ஸித்தித்த ஸ்வரூபமுடையவனாகையாலே தன் ஸ்வரூபத்தை ஸித்திப்பித்த அர்த்தவிசேஷங்களில் ஸ்மிருதியின்றிக்கே என்றுந்தெளிவுடையனாயிருக்கையும் என்றுஞ்சொல்லவுமாம். அங்ஙனமன்றிக்கே கீழ்ப்ரஸ்துதமான பர்வத்ரயத்திலுடையவுங்குறுப்பவகைகைங்கர்யங்களில்மறப்பின்றிக்கே தெளிவுடையனாயிருக்கையும்என்றுஞ்சொல்லவமையும். ஸ்வரக்ஷணத்தில்அசக்தியும் தன்உடம்புஇருக்குமளவும் தன்ஸ்வரூபத்தையும் தேஹத்தையும் ஈச்வரனே ரக்ஷிக்குமவன் என்றும் ஆசார்யனே ரக்ஷிக்குமவன் என்றும் அநுஸந்தித்து தன்னுடைய ரக்ஷணத்தில் சக்தியில்லாதவனாயிருக்குமதும், தன் ஸ்வரூபத்தைப் பார்த்தாலும் அவர்களேயிறே ரக்ஷகர்கள் உத்தேச்யவிஷயத்தில்கௌரவமும் உத்தேச்யமான ஈச்வரன்விஷயத்தில் கண்யமும் உபகாரவிஷயத்தில்க்ருதஜ்ஞதையும் உபகாரகனான ஆசார்யன்விஷயத்தில்க்ருதஜ்ஞதாநுஸந்தானமும்யத்வா உத்தேச்யவிஷயமென்று ஈச்வரனைச்சொல்லியுபகார விஷயமென்று அந்த உத்தேச்யவிஷயமான ஈச்வரனையுபகரித்தவர்களான பிராட்டியார் தொடங்கிஸ்வாசார்யனளவாகவுண்டான குருக்களெல்லாரையும் உபகாரகாகச் சொல்லி, தத்விஷயத்தில் க்ருதஜ்ஞதாநுஸந்தாநமுடையனாயிருக்கையும்என்னுஞ்சொல்லவுமாம். இவர்களெல்லார்க்கும் சேஷி அவனிறே! அவனையிறே இவர்களுபகரிக்குமது? இவர்களைத்தானேயுபகரிக்கையாலே உபகாரத்வமும் அவன்றனக்கேயிறேயுள்ளது. உத்தாரக ப்ரதிபத்தியும்உத்தாரகனும் அவனேயிறே? -"ஸ்வாபிமாநம்'' என்கிறவாக்யத்தில் ஈச்வராபிமாநம் என்றுசொன்னது-'ஸம்

ஸாரார்ணவமக்நாநாம்' என்றபடி விஷ்ணுபோதமானையாலே அஸாதாரணமான ஸம்ஸாரோத்தாரகத்வம் ஈச்வரனதேயாய், ததிஷ்டரான விசேஷத்தாலும் தத்ப்ராபகத்தாலும் இவர்களெல்லார்க்கும் ததீயமான உத்தாரகத்வம் வந்தபடி ஆக, உத்தேச்யத்வ-உபகாரகத்வ உத்தாரகத்வங்கள் மூன்றும் அவனுக்கேயுள்ளது என்று சொல்லி, தத்விஷயத்தில் கௌரவமும், க்ருதஜ்ஞதையும் உத்தாரகத்வப்ரதிபத்தியுமெல்லாம் தத்விஷயத்திலே அநுஸந்திக்கையும், என்று சொல்லவுமாம். அன்றிக்கே உத்தேச்யவிஷயத்தில் கௌரவத்வ வாக்யத்துக்கு இன்னமொரு யோஜனையுமுண்டு. அதாவது— 'வேதம் வல்லார்கள்' என்கிறபடியே 'ஈச்வரன் உத்தேச்யனாய், பாகவதர்கள் உபகாரகர்களாகச் சொல்லுமது; அத்தைச் சொல்லவுமாம். அன்றிக்கே தனக்கு ஈச்வரவிஷயம் உத்தேச்யமோ பாகவதவிஷயம் உத்தேச்யமோ ஆசார்யவிஷயம் உத்தேச்யமோ என்று சொல்லி இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு 'தேவுமற்றறியேன்' என்னும்படி ஆசார்யவிஷயம் உத்தேச்யமாய் அந்த ஆசார்யத்வம் 'ஆசார்யபதம் என்று தனியேயொரு பதம், அது உள்ளது எம்பெருமானார்க்கே' என்று அருளிச்செய்கையாலே— எம்பெருமானார் பக்கலிலேயாய் 'கச்சதா' என்கிறபடியே ஸ்ரீ பரதாழ்வானுகிற உத்தேச்யத்துக்கு 'நித்யசத்ருக்ந:' என்று ராமபக்தி விரோதி என்றிருந்த ஸ்ரீசத்ருக்நாழ்வானைப்போலே இங்கும் பகவத்விஷயம் விரோதி என்று எம்பெருமானார்பக்கலிலே கௌரவப்ரதிபத்தியும், உபகாரவிஷயத்தில் க்ருதஜ்ஞதையுமான உத்தேச்ய விஷயம் எம்பெருமானாராகப் பரிச்சேதித்தபின்பு 'ஸ்ரீஸைலநாத கருணா பரிணமதத்தாம்' என்றும் 'கூராதிநாதகுருகேசமுகாத்ய பும்ஸாம்' என்றுஞ்சொல்லுகிறபடியே உத்தேச்யவிஷயத்தையுபகரிக்குமவரான கூரத்தாழ்வான் திருக்குருகைப்பிள்ளான் திருமலையாழ்வாரான திருவாய்மொழிப்பிள்ளை முதலானவர்களாலேயன்றோ நாம் இந்த உத்தேச்யத்தை லபித்தது என்று உபகாரகர்களான அவர்கள் விஷயத்தில் க்ருதஜ்ஞதாநுஸந்தானமும் உடையராயிருக்கை. யத்வா உத்தேச்யவிஷயத்தில் கௌரவமும் உபகாரவிஷயத்தில் க்ருதஜ்ஞதை என்று சொன்னது 'உபகார்யவஸ்து கௌரவத்தாலே' என்கிற வாக்யத்தில் இவர் தாமே ஸ்ரீவசனபூஷணத்தில் ஆசார்யனை யுபகரித்த ஈச்வரனை மிகவும் உபகாரகன் என்னும் அருளிச்செய்கையாலே ஆசார்யனே உத்தேச்ய விஷய

மானபின்பு ஆசார்யனை யுபகரித்த ஈச்வரன் மிகவும் உபகாரகனு
கையினாலே தத்விஷயத்தில் க்ருதஜ்ஞதானுஸந்தானமுடையனாயி
ருக்கை என்றுஞ்சொல்லவுமாம். யத்வா—உத்தேச்ய விஷயம்
ஆசார்யனானபோது "கள்ளிக்கால் வேண்டுமோப்பாலே" என்றபடி
ஆசார்யனைச் சேர்த்துவைத்த மஹாபாகவதரை உபகாரகர் என்று
சொல்லி தத்விஷயத்தில் க்ருதஜ்ஞதானுஸந்தானம் பண்ணிக்
கொண்டிருக்கை என்றுஞ்சொல்லவமையும். யத்வா உத்தேச்ய
விஷயம் என்று எம்பெருமானைச்சொல்லி, உபகார விஷயம்
என்று அந்த உத்தேச்யத்தை உபகரித்த ஆசார்யனை உபகாரகனா
கச்சொல்லி தத்விஷயத்தில் க்ருதஜ்ஞதானுஸந்தானமுடையவனா
யிருக்கையும் என்னிலுஞ்சேரும். உத்தாரக ப்ரதிபத்தி ஆவது
கீழ்ப்ரஸ்துதமான பர்வத்ரயமும் உத்தேச்யமானபோது ஸம்ஸா
ரோத்தாரக ப்ரதிபத்தி மூன்று விஷயத்திலும் உடையனாயிருக்கு
மிருப்பைச் சொல்லுதல். அன்றிக்கே மூன்று விஷயத்திலும்
வைத்துக்கொண்டு தனக்கு எந்த விஷயம் உத்தேச்யமோ அத்
தையே உத்தாரகம் என்று சொல்லிற்றாதல். யத்வா எம்
பெருமானார் உத்தேச்யர் என்றிருக்கும் அர்த்தத்தை உபகரித்த
ஆசார்ய விஷயமே உத்தாரகம் என்று நினைக்கிறதால் ஆசார்யனி
டத்தில் உபகாரகத்வமேயொழிய உத்தாரகத்வம் சொல்லும்படி
எங்ஙனே? என்னில், ப்ரதம பர்வமான பகவத்விஷயத்தை யுபகரித்
தும், சரமபர்வமான எம்பெருமானாரை சரமசேஷி என்னுமர்த்
தத்தை உபதேசித்தும் உபகரிக்குமவனாகையாலே, தததீனமான
உபகாரகத்வமேயுள்ளது. ஸாக்ஷாதுத்தாரகத்வம் எம்பெருமா
னார்க்கேயுண்டாகையாலே "நகுரோர்கடாஸ்த்ராதா" என்றபடி
எம்பெருமானுடையவும் எம்பெருமானாருடையவும் ஸம்பந்தமான
உத்தாரகத்வம் ஆசார்யவிஷயத்தில் உபகரித்துசொல்லுமவனுக்கு.
அங்ஙனமன்றிக்கே உத்தேச்ய விஷயத்தில் கௌரவமும் என்று
தொடங்கி மூன்று வாக்யத்தாலும் எம்பெருமான் உத்தேச்யர்
என்கிற கௌரவ ப்ரதிபத்தியும், தத்விஷயத்தில் உபகாரத்வ
மடியாகவருகிற க்ருதஜ்ஞதானுஸந்தானமும் தத்விஷயமே உத்
தாரகம் என்கிற ப்ரதிபத்யநுவர்த்தனமும் சொன்னதென்று இவ்
வாக்யங்களுக்குப் பொருளாகவுமாம். ஆக உத்தேச்யத்வ-உபகா
ரகத்வ-உத்தாரகத்வங்கள் மூன்றும் ப்ரதமசேஷியான எம்பெருமா
னுக்கு உண்டாமாப்போலே சரமசேஷியான எம்பெருமானார்க்

கும் உண்டாயிருக்கிறபடி அநுவர்த்திக்கையும் வேணும். வர்ணாச்ரமாநுரூபமாகவும் என்பது முதலாக நடுவிலுள்ளவற்றோடு "ஸம்ஸாரிகள் முன்னில் தன்னுடைய வ்யாவ்ருத்தியை யநுஸந்திக்கையும்" என்பதிறுனவை யநுவர்த்திக்கையும்வேண்டுவது முக்யமாப்போலே 'ப்ராப்யத்தில் த்வரையும்' என்று தொடங்கி நடுவுள்ளவற்றோடு 'உத்தாரக ப்ரதிபத்தியும்' என்பதிறுனவையும் அநுவர்த்திக்கையும் அவச்யாபேக்ஷிதம் அப்போதுதான் அர்த்தபஞ்சக ஜ்ஞாநோதயமுன்னாக முமுக்ஷுவானவன் ஸம்ஸாரம் மேலிடாதபடி ஸம்ஸாரத்திலே வர்த்தித்துப்பண்ணும் காலக்ஷேபம் க்ரமமாவது.

(அவ.) இனிமேல் இவ்வர்த்தபஞ்சகத்தில் ஜ்ஞாநமும் ததநுகுணமாக அநுஷ்டானமுமுண்டாய் அவற்றுடன்கூடி வாழுமந்த முமுக்ஷு ஈச்வரனுக்காகுமகாரவிசேஷமின்னதென்று அருளிச்செய்யா நின்றுகொண்டு ப்ரபந்தமிதை நிகமித்தருளுகிறார். (இப்படி) என்று தொடங்கி.

௯௪. இப்படி ஜ்ஞாநாநுஷ்டானங்களோடே கூடி வர்த்திக்குமவன் ஈச்வரனுக்குப் பிராட்டிமாரிலும் நித்யமுக்தரிலும் அத்யந்தாபிமதவிஷயமாகக்கடவன்.

அர்த்தபஞ்சகம் ஸம்பூர்ணம்.

*பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.*

(வ்யா. அதாவது — இப்படி ஜ்ஞாநாநுஷ்டானங்களோடே கூடி வர்த்திக்குமவன். அதாவது:- இப்படி என்று ஸிம்ஹாவலோகநந்யாயத்தாலே, ஸம்ஸாரியான சேதனன் என்று தொடங்கி, "இப்படி அர்த்தபஞ்சகஜ்ஞாநம் பிறந்து" என்கிற வாக்யத்தளவும்- இந்த சேதநனுக்கு அர்த்தபஞ்சகத்தையும் தத்விஷயத்தில் ஜ்ஞாநமும் உண்டாகவேண்டும் என்று ஜ்ஞானத்தையும், வர்ணஆச்ரம அநுரூபமாகவும் என்றுதொடங்கி உத்தாரகப்ரதிபத்தியும் அநுவர்த்திக்கையும் என்கிற வாக்யமறுதியாக இந்த சேதநனுக்கு உடம்பு இருக்குமளவும் அந்த ஜ்ஞாநாநுரூபமாக நடக்குமைக்கு வேண்டிய ப்ரபந்நதிநசர்யாரூபமான அநுஷ்டாநத்தையுந் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு இப்படி ஜ்ஞாந அநுஷ்டாநங்களோடே வர்த்திக்குமவன் என்கிறார். ஈச்வரனுக்கு கீழ்ச்சொன்ன ஜ்ஞாநம் அநுஷ்டாநம் ஆகிற இவற்றோடே ப்ரவர்த்திக்குமவன் ஈசு

வானுக்கு எங்ஙனே அபிமதவிஷயமாய்? என்ன அருளிச்செய்தி ருர்-பிராட்டிமாரிலும் என்று தொடங்கி. அதாவது-"ஸஹ்ஷிஷ்யே" என்றும், "நஜீவேயம்" என்றும்"அநந்யாஹி"என்றும் "அநந்யா" என்றும் "அகலகில்லேன்" என்றுஞ்சொல்லுகிறபடியே ஒருவர்க் கொருவர் இப்படிச் சொல்லுமவர்கள், ஒருவேளையில் ஆஶ்ரித விஷயத்திலுண்டான ஆதர அதிஶயத்தாலே "கிம்கார்யம்" என் றும் "நமேதுக்கம்" என்னுஞ்சொல்லுகிறபடியிருக்கும் பூமிநீளா திப்பிராட்டிமாரைக்காட்டிலும், நித்யமுக்தரிலும் த்ரிபாத்விபூதியி லே விஶேஷகந்தம் என்றின்றிக்கே "ஸதாபஶ்யந்தி," என்னும், "நிவாஸஶய்யா" என்றும், "தாஸஸ்ஸகாவாஹநம்." என்றும், "த்வதீயபுக்தோஜ்ஜிதஶேஷபோஜிநா" என்றுஞ்சொல்லுகிறபடி யே அந்தர்பாஹ்யாதி ஸகலகாலங்களிலும் அஶேஷஶேஷவ்ரு த்திகளைப் பண்ணும் அநந்த-கருட-விஷ்வக்ஸேனாதிகளான நித்ய ஸூரிகளிலுங்காட்டில், கரைகண்டோரான முக்தர்களிலுங்காட் டிலும்; அத்யந்த அபிமத விஷயமாகக்கடவன். அதாவது- லோகத் திலே முதல் கண்ணாலப் பெண்ணும், அவளுக்குப்பிறந்த பிள்ளை களுமிருக்க இரண்டாங்கண்ணாலம் பண்ணின பெண்பக்கலிலும் அவளுக்குப் பிறந்த பிள்ளைகள் பக்கலிலும் யஜமானனுக்கு ப்ரேமம் அதிகமாயிருக்குமாப்போலே, இந்த அர்த்தபஞ்சகத்திலும் ப்ரதிபா திக்கிற ஜ்ஞாந அநுஷ்டானங்களையுடையனான சேதநன் பக்கல் ப்ரேமம் அதிஶயேநவிருக்கும்; ஆகையால் இச்சேதனன் மிகவும் அபிமதவிஷயமாம்படி ஸமர்த்தனும். "அன்றீன்றகன் றுக்குத்தாயி ரங்கி, முன்னணைகன்றையும் புல்லிடவந்தவர்களையுங் கொம்பிலுங் குளம்பிலும் எற்குமாப்போலே பெரியபிராட்டியாரையும் ஸூரிக ளையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டுபோரும்"என்றிறே-இவ்வர்த் தத்தை 'தத்வத்ரய'த்திலும் இவர்தாமே அருளிச்செய்தருளினர்.

அர்த்தபஞ்சக வ்யாக்யாநம் ஸம்பூர்ணம்.

பிள்ளை லோகஞ்ஜீயர் திருவடிகளே சரணம்.

---

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 4 | வைத்துமுருக்காட்டதே | வைத்து முருக்காட்டாதே |
| ,, | 11 | வின்பமிகுஞ் | வின்பமருஞ் |
| 6 | 3 | ப்ப்ராய | ப்ராப்ய |
| ,, | 10 | ஆங்கா | அக்தா |
| 7 | 16 | ஆத்மஸ்வரூந்தான் | ஆத்மஸ்வரூபந்தான் |
| 9 | 26 | முதல் சொன்ன | முதலில் சொன்ன |
| 10 | 3 | ப்ரவ்யூஹாதி | பரவ்யூஹாதி |
| ,, | 9 | நித்யாராவர் | நித்யாராவார் |
| ,, | 24 | அவைகளே | அவர்களே |
| ,, | 25 | யளவனுதி | யெளவனுதி |
| 11 | 23 | சொல்லுதிறப்ராகாரம் | சொல்லுகிறப்ராகாரம் |
| 14 | 16 | ஸ்பர்ஶன | ஸ்பர்ஶக |
| ,, | 30 | ரஸமும் ரூபமும் | ரூபமும் ரஸமும் |
| 15 | 9 | என்ருதே | என்னுதே |
| ,, | 14 | க்ஷத்ரிய னுக்கு | க்ஷத்ரியருக்கு |
| ,, | ,, | அநுகுணமாக | அநுகுணமான |
| ,, | 19 | ஶர்மா | ஶர்ம |
| ,, | 32 | யாம் | யாய் |
| 16 | 10 | அழியு | அழிய |
| 16 | 13 | க்ருஷ | க்ருஷி |
| 17 | 26 | பாஸகளாலே | பாஸைகளாலே |
| ,, | 28 | போல | போலே |
| 18 | 3 | அல்வாத்ம | அவ்வாத்ம |
| 20 | 17 | பரிபூர்ணனுய் | பரிபூர்ணமாக |
| 22 | 30 | தாம்பூதாதி | தாம்பூலாதி |
| 23 | 2 | பாத்வம் ஆகிறது | பாத்வம் |
| ,, | 8 | ஞூதரியான் | ஆதரியான் |
| 25 | 12 | என் னுயிர் | என னுயிர் |
| ,, | 32 | 22 அந்தர்யமித்வம் | அந்தர்யாமித்வம் |
| 26 | 14 | முந்துற | முந்தர |
| ,, | 17 | என் னுயிர் | என னுயிர் |
| 30 | 25 | இந்தத்திருமேனிவே னும்இந்தத்திருமேனி வேனும் | இந்தத்திருமேனிவே னும், இந்தத்திருநாமம் வே,னும் |
| 31 | 17 | ததத்யாப்யஶக்த | ததத்யாம்யப்ய ஶக்த |
| 32 | 1 | ஏவரோலு | யவரோலு |
| ,, | 33 | ஶீவசன | ஸ்ரீவசக |
| 33 | 29 | ஆநாச்ரித | அநாச்ரித |
| 36 | 17 | விஷயாஙபவம் | விஷயாநுபவம் |

| | | | |
|---|---|---|---|
| 39 | 2 | அுபவரூபமான | அநுபவரூபமான |
| 40 | 31 | பொகட்டுமாப்போலே | பொகடுமாப்போலே |
| ,, | 32 | ஸுஷம்நநாடி | ஸுஷும்நநாடி |
| 41 | 26 | சாஸ்பர்சம் | கரஸ்பர்சமும் |
| ,, | 35 | லீலாவிபூதிகளுக்குள்ளே | லீலாவிபூதிக்குள்ளே |
| 42 | 23 | கைதொழ | கைகளாலே தொழ |
| ,, | 26 | பிரவா | பிரவா |
| 43 | 3 | நித்யாநுபவங்ன் | நித்யாநுபவங்கள் |
| ,, | 11 | என்றயடி | என்றபடி |
| ,, | 15 | தேசத்துக்கூ | தேசத்துக்கு |
| ,, | 29 | யாதித்வாரா | யத்வாரா |
| 46 | 12 | ஓரிடத்தில் | ஓரிடத்தில் தங்கி |
| ,, | 32 | ஒவ்வவாரு | ஒவ்வொரு |
| 47 | 13 | தர்மபூதஜ்ஞாந | தர்மபூதமானஜ்ஞாந |
| 51 | 26 | ஜன்மயான | ஜன்யமான |
| 52 | 2 | ஜந்ய | ஜந்யமான |
| 53 | 29 | ஸாதன | ஸாதன |
| 54 | 29 | ணமிப்பிக்கையும் | ணமிப்பிக்கையும், ஸாத்யமான ஈச்வர ஈச்வராநுபவத்தில் ப்ரீதியை விகாஸமாகும்படி பரிணமிப்பிக்கையும். |
| ,, | 30 | மிக்கையும் | மிப்பிக்கையும் |
| ௫௨ | , | சிந்திப்யேமையும் | சிந்திப்பேயமையும் |

| | | | |
|---|---|---|---|
| 61 | 17 | குழாங்களாடியீருடன் | குழாங்களாயடியீருடன் |
| ,, | 24 | தேசஸ்தயையும் | தேசஸ்தரையும் |
| 62 | 3 | திருமேலெ | திருமலைமேலெ |
| 64 | 9 | காரணபுண்யமுமாகவுமாம் | காரணமானது புண்யமாகவுமாம், ஜன்மகாரணமானது பாபமாகவுமாம் |
| ,, | 33 | என்று | என்னும் |
| 65 | 35 | பாகவதர்களுக்கும் | பாகவதர்களுக்கு |
| 66 | 5 | யோலே | போலே |
| 67 | 26 | வியாபிகைக்கு | வியாபிக்கைக்கு |
| 68 | 2 | தரித்ரன் ஆகவும் | தரித்ரன் ஆகும் அபூர்ணன் ஆகவும் |
| 68 | 5 | யதார்த்த ப்ரகாரத்தாலே | யதாப்ரகாரத்தாலே |
| 69 | 15 | செய்யர் | செய்யார் |
| ,, | 19 | மதுரகவிகள் | ஸ்ரீமதுரகவிகள் |
| ,, | 31 | இருவரும் | இவரும் |
| 70 | 4 | கருதுதல் | கருதல் |
| ,, | 7 | அந்த | இந்த |
| ,, | 20 | ப்ரபுத்யபாய | ப்ரபத்யுபாய |
| 71 | 3 | யுடை | யுடைய |
| ,, | 11 | தோனி | தோணி |
| 72 | 14 | ஞகிறப்போலே | ஞகிறுப்போலே |
| ,, | 25 | ப்ரகாரமாக | ப்ராபகமாக |
| | 27 | ..ர்மாதி | கர்மாதி |